அருள் மிகு

# லட்சுமி நரசிம்ம சுவாமி

திருக்கோயில்

சோளிங்கர் வ.ஆ.அ. மாவட்டம்



திருக்கடிகை என்னும்

# சோளிங்கர் தல வரலாறு



அருள்மிகு யோக ஆஞ்சநேய சுவாமி
திருக்கோயில்
(சிறியமலை)

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ ஸ்ரீநிவாஸ மஹா குரவே நம:



அருள்மிகு லக்ஷ்மிநரசிம்ம சுவாமி திருக்கோயில்

சோளிங்கர், வ. ஆ. அ. மாவட்டம்,





திருக்கடிகை என்னும்

# சோளிங்கர் தல வரலாறு

---


திருக்கோயில் வெளியீடு:

1991


---




This book is printed
with the financial assistance of the
TIRUMALA - TIRUPATHI DEVASTHANAMS,
TIRUPATHI.

Printed by :
The North Arcot District Co-operative Printing Works Ltd,
Vellore. N. A. A. Dt. (Tamil Nadu)

# ஆசிரியர் முன்னுரை

வட தென் மொழி ஹிந்தி வித்வான் | 16 சந்நிதி தெரு,
கோயில் கந்தாடை சண்ட மாருதம் | சோளிங்கர்.

தாதாசாரியார் ஸ்வாமி, M.A., B.Ed., B.G.L.,

திருக்கடிகை என்னும் சோளசிம்மபுரம் வைணவத் தலங்கள் 108-இல் ஒன்றாம். இது தொண்டை நாட்டில் உள்ள திருத்தலமாகும். இந்நாளில் இது சோளிங்கர், சோளிங்கபுரம் என்றே அழைக்கப் படுகிறது. இவ்வூர் தொன்மை எழில் வரலாறு பெருமை அனைத்தும் பொருந்திய ஊராகும். பிரம்மகைவர்த்தம் என்னும் புராண நூல் இத்தல வரலாற்றினை வடமொழியில் விளக்கிக் கூறுகிறது. அச்செய்திகளையே நூலின் உள்ளே காண இருக்கின்றோம்.

ஸப்தரிஷிகள் என்னும் தவ முனிவர் எழுவர் மோக்ஷம் வேண்டி நரசிங்கப் பெருமானைக் குறித்துத் தவம் புரிந்தனர். அவர்கள் சிங்கப் பெருமானை யோக நிலையில் காண விரும்பினர். அவ்வாறே சிங்கப் பெருமான் யோக நிலையில் மலைமீது அவர்கள் வேண்டியபடி கடிகைப் பொழுது தரிசனம் தந்து மோக்ஷம் தந்ததால், இவ்வூர் மலைக்கு கடிகாசலம் எனப் பெயர் வந்தது. பரம் பொருள் தனித்து இருக்கும் போது யோக நிலையில் இருப்பதாகக் கூறப்படுகிறது. அவ்வாறான தரிசனத்தை விரும்பியவர்க்கு ஒரு கிருதயுகத்தில் வைகாசி மாதம் வளர்பிறைப் பௌர்ணமி நாளில் விடியற்காலையில் தோற்றம் தந்ததாகப் புராணம் கூறுகிறது. இறைவன் தனிச் சுதந்திரம் படைத்தவன். அவனது சுதந்திரம் அல்லது உரிமை அபாயனுயோஜ்ய ஸ்வாதந்த்ரியம் என்று கூறப்படுகிறது. ஏன் செய்தாய்? ஏன் செய்யவில்லை என்றெல்லாம் வினவவோ கட்டளை யிடவோ முடியாத ஒப்பற்ற ஸ்வாதந்திரியம் இறைவன் ஒருவனுக்கு மட்டுமே உண்டு.

கார்த்திகை மாதத்தில் நரசிங்கப் பெருமான் கண் விழிப்பதாக கூறப்படுவது வழிவழியாக வரும் செவி வழிச் செய்தியாகும். இதனை நூல் கொண்டு சான்று உரைக்க இயலாது.

ஆஞ்சநேயரும் பிரம்ம பட்டம் பெற விரும்பித் திருக்கடிகை நரசிம்மப் பெருமானை நோக்கித் தவம் புரிந்தார். அதே காலத்தில் இந்திரத்யும்ன மஹாராஜா என்பானும் இறைவனை நாடி வந்தான். அவனைக் கொண்டு அரக்கர்களை அகற்றி நல்லவர்களைக் காப்பாற்ற விரும்பிய இறைவன் அனுமாருக்கு சங்கு சக்ரம் தந்து இந்தரத்யும்ன ராஜாவுக்கு உதவி புரிய அனுப்பினான். இறைவனை நோக்கித் தவயோகம் செய்யும் நிலையில் ஆஞ்சனேய ஸ்வாமி அமர்ந்து தியானம் செய்ததால் அத்தவயோக நிலையே ஸ்ரீ ஆஞ்சனேயனுக்கு யோக ஆஞ்சநேயர் என பெயர் வரலாயிற்று.

வைணவ மரபில் மங்களாசாஸனம் பெற்ற தலங்கட்குத் அளித்ததொரு பெருமையும் ஏற்றமும் உண்டு. மங்களா சாஸனமாவது ஆழ்வார் பாடல் பெற்ற சிறப்பு கொண்டு விளங்குவது அல்லது வைணவ ஆசார்யார்களினால் வழிபாடு கொண்டு பெருமை உடையதாய் விளங்குவதாம். இத்தலத்திற்கு இவ்விருவகைப் பெருமையும் இணைந்துள்ளதெனில் இதன் சிறப்பினை யாரே எடுத்தியம்ப வல்லார்!

ஆழ்வார்களுள்; பேயாழ்வாரும், திருமங்கையாழ்வாரும், தீந் தமிழ்ப் பாடல்களால் இப்பதியினையும் இப்பதி எம்பெருமானையும் இனிக்க இனிக்கப் போற்றிப் புகழ்கின்றனர்.

**பேயாழ்வார் தம் மூன்றாம் திருவந்தாதியில்**

" பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங் குறைவார்க்குக் கோயில் போல் வண்டு
வளங்கிளரும் நீள் சோலை வண்பூங் கடிகை
இளங்குமரன்தன் விண்ணகர் " என்றிசைக்கிறார்.

**திருமங்கைமன்னன் தம் பெரிய திருமொழி எனும் நூலில்**

" மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை என்னுள்
புக்கானை புகழ்சேர் பொலிகின்ற பொன் மலையைத்
தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த
அக்காரக் கனியை அடைந்துய்ந்து போனேனே"
என்று பரவுகிறார்.

மங்கை மன்னன் இனிக்க இனிக்கப் பாடிய 'அக்காரக் கனி' நாமத்தைச் சொல்லச் சொல்ல திருவும் உணர்வும் சுரக்கும்; சொல்லப் புகில் வாய் அமுதம் பரக்கும்.; இருவினை பற்றறவோடும். நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் அக்காரக் கனி என்ற திருப் பெயர் இரண்டிடத்தில் மட்டுமே அமைந்து கிடக்கும். ஆராவமுதப் பெயர் ஆகும். நம்மாழ்வார் தம் திருமொழியில் "எம்மா வீட்டு" என்று தொடங்கும் திருவாய் மொழியில்,

" எக்காலத் தெந்தையாய் என்னுள் மன்னில் மற்று
எக்காலத்திலும் யாதொன்றும் வேண்டேன்
மிக்கார் வேதவிமலர் விழுங்கும் என்
அக்காரக் கனியே உன்னை யானே" என்று இனிதருளினார்

நம்மாழ்வார் நூல்கள் நான்கு. அவை நால்வேதமாம். மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர் கோன் ஆறங்கமாக ஆறு நூல்களைப் பணித்தார். ஆதலின் இராமாநுஜர் என்று உலகம் போற்றும் சுவாமி எம்பெருமானார் "எக்காலத் தெந்தையாய்" என்னும் பாசுரத்தை இத் திருக்கடிகை எம்பெருமானுக்கு மங்களாசாஸனப் பாட்டாக இட்டருளினார்.

வைணவ ஆசாரியர்களில் நாதமுனிகள், ஆளவந்தார், திருக்கச்சி நம்பி, ஸ்வாமி எம்பெருமானார் ஆகியோரால் மங்களாசாஸனம் செய்யப் பெற்ற இத்திருத்தலத்தில் எம்பெருமானுக்கே தொண்டு பூண்டு என்றும் தொழுது வழியொழுகத் தோன்றினார் சண்டமாருதம் தொட்டாசார் சுவாமிகள். சுவாமி தொட்டாசார் திருமலை திருக் கோயில்களை எல்லாம் முற்றும் புதியனவாக அமைத்து எம்பெருமான் நித்யஉற்சவம் முதலான கண்டருள ஆவன செய்தமைத்த பெரியோர் ஆவார்.

ஸ்ரீ மண் மணவாள மாமுனிகள் இத்தலத்தில் எம்பெருமான் வடிவழகில் இவ்வூர் வாழ் மக்களிடமும் கொண்ட ஈடுபாடு காரணமாக அக்காரக்கனி தக்கான் எம்பெருமானுக்கு வடதிருவரங்கநாதன் என்ற திருப்பெயரை உகப்புடன் சாத்தியருளி இவ்வூரைச் சார்ந்த எறும்பிப் பகுதியை வடதிருவரங்கம் என்று நாமகரணம் செய்தார். அப் பெரியார், இத்தலத்திற்கு எறும்பியப்பன் எனும் தேவராஜ குருவுக் காக வேண்டி இங்குத் திருப்பாவையை கேட்டின்புற ஒரு மாத காலம் உபன்னியாசம் செய்தருளினார் என்ப.

ஊர்க்கோயிலின் உற்சவ மூர்த்தி எம்பெருமான் விளங்குகிறான். இவர் கண்டருளும் பல உற்சவங்களுள் கருடசேவை தனிச் சிறப்புடையது, இத்தலத்துதித்த தொட்டாசாரியார் காஞ்சிபுரத் திற்குப் பெருமாள் உற்சவம் சேவிக்கத்தவறாது செல்வாராம். ஒருமுறை போக முடியவில்லை. தொட்டாசார் சுவாமி பிரம்ம தீர்த்தக் கரையில் வைகறையாமம் துயிலெழுந்து செய்வன செய்து வையம் கண்ட கச்சித் திருநாளில் கருட உற்சவத்தைக் காணாது இழந்தேனே என்று வருந்தியவராய் நிற்கும்போது காஞ்சிபுரம் தேவராஜப் பெருமாள் கருடவாகனத்துடன் இவர்க்குக் காட்சி அளித்தார். அது பற்றி தக்கான் குளக்கரையில் வரதராஜ சுவாமி விளங்கும் காட்சிகாண இனிய ஒன்று. ஊர் திருக்கோயிலிலும் பெருமாளுக்கு கருடவாகன புறப்பாடு வைகாசி மாதத்தில் நடைபெற்று வருகிறது. ஊர்க் கோயிலில் ஆண்டாள், கேசவப் பெருமாள், ஆழ்வார் ஆசார்யர்களுக்குத் தனிதனித் சன்னிதிகள் உண்டு. அனைத்து உற்சவங்களும் ஊர் திருக்கோயில் எம்பெருமானுக்கு நடைபெறுகின்றன.

ஊரைச் சார்ந்தது கொண்டபாளையம் என்றொரு பகுதி. அங்குத் தான் பெரியமலை சிறியமலை என்று இரு தனித்தனி மலைக் குன்றுகள் உள்ளன. பெரிய மலையில் யோக நரசிங்கப் பெருமாள் மூலவரும், தாயார் மூலவரும், உற்சவரும் கோயில் கொண்டுள்ளனர். தாயார் ஊர்த் திருக்கோயிலுக்கு நவராத்திரி உற்சவத்தை ஒட்டி எழுந் தருள்வார். வெள்ளிக்கிழமை தோறும் தாயாருக்கு பிரார்த்தனை உற்சவமும் பெருமாளுக்கும், பிராட்டிக்கும் காலையில் திருமஞ்சனமும் நடைபெறும்.

சின்னமலையில் யோக ஆஞ்சநேயர் வீற்றுள்ளார். அவருக்காக வேண்டி இராமர் சன்னதியும், இராமர் போற்றிய காரணத்தால் ரங்கநாதர் சன்னதியும் அமைந்துள்ளன. அனுமாருக்கு நாடோறும் திருமஞ்சனம் நடைபெறும். ஞாயிற்றுக்கிழமையில் விசேஷம்.

திருக்கடிகைத் தலம் பற்றிய பல வரலாறுகள் உள்ளன. 16-ஆம் நூற்றாண்டை சார்ந்த தெனாலிராம கவி என்னும் தெலுங்கு மொழிக் கவி தெலுங்கு மொழியில் "ஸ்ரீ கடிகாசல புராணம்" என்றொரு நூல் இயற்றியுள்ளார். சென்ற நூற்றாண்டில் சிறந்த சாகித்திய கர்த்தா வாகவும் பாடகராகவும் விளங்கிய முத்துசுவாமி தீட்சிதர் இவ்வூர் நரசிங்கப் பெருமானை குறித்து வடமொழியில் ஒரு கீர்த்தனை இயற்றியுள்ளார்.

1881-இல் ஸ்ரீ கடிகாசலப் புராணம் தெலுங்கு எழுத்தில் சென்னையில் அச்சிடப்பட்டது. அதற்குப் பின் அச்சிட்டதாக அறியக்கூடவில்லை. கடிகாசல புராணத்தைத் தமிழ்ப்படுத்தி வசன ரூபமாக 'கடிகாசல க்ஷேத்திரயின்மியம்' என்ற பெயரில் எம் தந்தையாரும், சோளசிம்மபுரம் ஸ்தல ஆசாரிய புருஷருமான கோயில் கந்தாடை சண்டமாருதம் தொட்டாசார் குலத்தவரான ஸ்ரீ உ. வே. சிங்கராசார் சுவாமியால் [சிமோமணிசுவாமி, நாயணா சுவாமி என்றழைக்கப்பட்டவர்] 1935-இல் திருப்பதியில் அச்சிட்டு வெளியிடப் பெற்றது. குறைந்த அளவிற்கே அச்சிடப்பட்டமையால் விரைவில் அது தீர்ந்துவிட்டது.

எவ்வகையிலும் தற்போது கடிகாசலப் பெருமை கூறும் நூற் கிடைத்தற்கு அரிதாகப் போனமையாலும், இக்காலத்தில் இத்திருத்தலம் தென்னாடும், வடநாடும் தொழுநின்று வணங்கும் பிரார்த்தனை தலமாக விளங்குவதாலும் இதன் வரலாறு அறிய விரும்புவார் பலராதலாலும் அவர்தம் தொகையும் நாடோறும் கூடி வருவதாலும் கடிகாசல தல வரலாற்றை தமிழில் எழுதிடுமாறு ஆன்றோரும், சான்றோரும் அடியேனை அருள்கூர்ந்து ஆணையிட்ட தால் கடிகைத் தல வரலாற்றை தமிழில் ஓரளவு எழுதிடத்துணிந்தேன். "தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுகப் பண்டே பரமன் பணித்த பணிவகையே" என்ற காரணத்தால் மந்தனான அடியேன் இப்பெருமுயற்சியில் ஈடுபட்டேன்.

இந்நூலை எழுதிடத் தூண்டி எளியவனான அடியேனை இறைவன் திருப்பணிக்கு உரிமையாக்கிய ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்ம சுவாமி திருக்கோயில் செயல்அலுவலர் திரு. **ஆர். குப்புசாமி,** பி.ஏ., எம்.காம்., அவர்களை என்றும் மறவேன். மற்றும் ஆலய தக்கார் / உதவி ஆணையர் திரு. **பொன். செல்வராஜ்,** பி.ஏ., பி.எல்., அவர் களுக்கும், முன்னாள் ஆலய தக்கார் / உதவி ஆணையாளர் திரு. **த. சுந்தரம்,** பி.ஏ., பி.எல்., அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக!

ஒராதெழுதினேன் ஆயினும் ஒன்பொருளை
ஆராய்ந்து கொள்க அறிவுடையார்—சீராய்ந்து
குற்றம் களைந்து குறை பெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

அடியேன்
**தாதாசாரி**

# அணிந்துரை

**வ. ராமதாஸ்,** ஐ.ஏ.எஸ்.,
ஆணையாளர்.

இந்து சமய அறநிலைய
ஆட்சித்துறை,
சென்னை - 600 034.

வணங்கிடும் அடியார்க்கு வந்து தங்கும் ஒரு கடிகைக்குள் [ஒரு நொடிப் பொழுதில்] அருள் பொழியும் திருத்தலம் ஆதலால் கடிகாசலம் என்று அழைக்கப்படும் திருத்தலம் சோளிங்கர் அருள்மிகு லட்சுமி நரசிம்ம சுவாமி ஆலயம் ஆகும்.

பன்னிரு ஆழ்வார்களுள் திருமங்கையாழ்வாரும் பேயாழ்வாரும் மங்களாசாசனம் செய்த தொண்டை நன்னாட்டில் அமைந்திருக்கும் வைணவ திவ்விய திருத்தலம் இதுவாகும்.

> " மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை என்னுள்
> புக்கானை புகழ்சேர் பொலிகின்ற பொன்மலையைத்
> தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த
> அக்காரக் கனியை அடைந்துய்ந்து போனேனே"

என்று கடிகாசலப் பெருமானை அக்காரக்கனி [தித்திக்கும் சர்க்கரையால் ஆன பழம்] என்று போற்றிப் பரவியுள்ளார் திருமங்கை யாழ்வார். "புனிதன் ஈசன் பொற்கழல் எனும் கனி" என்று திருநாவுக்கரசரும், இறைவரைக் கனியாக உவமித்திருப்பது இங்கு ஒப்பிட்டு மகிழத்தக்கது.

இரணிய வதம் புரிந்த தம் அச்சம் தரும் வடிவு நீங்கி "அழகியான்தானே அரியுருவம் தானே" என்று யாவரும் போற்றி வணங்கிட யோக நரசிம்மராய் இறைவர் இக்கடிகாசலத்தில் கோயில் கொண்டு அருள்பாலிக்கும் தன்மையை இந்நூலாசிரியர் ஸ்ரீநிவாசதாசன் என்றழைக்கப்படும் ஸ்ரீ தாதாசாரியார் மிக அற்புதமாக விளக்கி யிருக்கிறார்.

கயை, காசி சேத்திரங்களை விடவும் மகிமை வாய்ந்த ருத்தலம் கடிகாசலமே என்பதையும், சப்தரிஷி முனிவர்களும் த்திருத்தலத்தை அடைந்து ஒரு கடிகைக்குள் மோட்சம் பெற்றதான ப்பினையும் இந்நூலாசிரியர் நன்கு எடுத்து விளக்கியிருக்கிறார். த்தலத்தின் கண் அமைந்துள்ள அனுமன் தீர்த்தம், பைரவ தீர்த்தம் ஜ்ர தீர்த்தம், பாண்டவ தீர்த்தம், பிரம்ம தீர்த்தம், லட்சுமி தீர்த்தம் தலான பல தீர்த்தங்களின் சிறப்புகளையும் அவற்றில் நீராடிப் ண்ணியம் கண்ட பலர் புனித சரிதங்களையும் ஆசிரியர் காட்டியுள்ள குதிகள் கற்பாரைப் பரவசப்படுத்துவன.

பண்டை நாள் தொட்டு இன்றுவரை ஆலயம் கண்டு வந்துள்ள ளர்ச்சிகளையும் இப்புகழ்மிகு ஆலயத்தில் திங்கள்தோறும் நடைபறும் திருவிழாச் சிறப்புகளையும் மிக விரிவாக நூலாசிரியர் எடுத்து ிளக்கியுள்ளார். கடிகாசலம் காண வரும் பக்தர்களுக்கு சிறந்த ழிகாட்டி நூலாக அமைந்துள்ள இவ்வரிய நூலை மிகச் சிறப்பாக டைத்திருக்கும் நூலாசிரியருக்கு எம்மனம் நிறைந்த நல்வாழ்த்துக்களை தரிவித்து மகிழ்கிறேன். உரிய படங்களுடன் பொலிவுடன் ந்நூலை வெளியிடும் திருக்கோயில் நிர்வாகத்தினருக்கும் என் ாராட்டினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இறையன்பர்கள் இவ்வரிய அருள் நூலை ஆர்வமுடன் கற்று ஸ்ரீ லட்சுமி நரசிம்மர் திருவருள் பெற வேண்டுகிறேன்.

அன்புடன்,

**வ. ராமதாஸ்**

31—5—90



ப. கிருஷ்ணசாமி, எம்.ஏ.,
துணை ஆணையர்.

இந்து சமய அறநிலைய
ஆட்சித்துறை,
சேலம்-8

# முகவுரை

வட ஆற்காடு அம்பேத்கர் மாவட்டம், சோளிங்கர் எனும் திருத்தலத்து அருள்மிகு லட்சுமி நரசிம்ம சுவாமி திருக்கோயிலுக்கு இதுகாறும் தலவரலாறு இல்லாமல் இருப்பது அறநிலையத்துறைக்கு மட்டுமின்றி ஆன்மீக நேயர்களுக்கும் அதிலும் குறிப்பாக வைணவத்தில் ஈடுபாடு கொண்டுள்ள பக்தகோடிகளுக்கு பெருங்குறையாக இருந்து வருகிறது என்பதை அறிந்து தலவரலாறு எழுதும் பணி துவக்கப்படவேண்டும் என அறநிலையத்துறையின் ஆணையாளராக இருந்து வரும் திருமிகு வ. ராமதாஸ், இ.ஆ.ப. அவர்கள் இத்திருக் கோயிலின் தற்போதைய செயல் அலுவலர் திரு. **இரா. குப்புசாமி** அவர்களிடம் விரைவில் தலவரலாறு எழுதிட பணித்ததன் காரணமாக செயல் அலுவலர் தலவரலாறு எழுதும் திருப்பணியினை

"இதனை இதனால் இவன் செய்யுமென் றாய்ந்து
அதனை அவன்கண் விடல்" எனும்

வான்புகழ் வள்ளுவனாரின் வாக்கிற்கேற்ப பன்மொழிப்புலமைப் பெற்றவரும் இத்திருத்தலத்தின் பெருமையை பெரிதுமுணர்ந்தவரு மான. ஆசிரியப் பெருமகனார் திரு. **தாதாசாரியார் சுவாமி** எம்,ஏ., பி.எட்., பிஜி.எல்., என்பவரின்கண் ஒப்படைத்து தலவரலாறு எழுதி முடிக்கும் வரலாற்றுச் சிறப்புமிக்கப் பணியினை பலநூறு ஆண்டு களுக்குப் பிறகு செய்து முடித்துள்ள செயல் அலுவலர் திரு. **இரா. குப்புசாமியின்** இறைபணி இத்திருக்கோயிலின் வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டியதெனக் கூறுவது மிகையாகாது என கருதுகிறேன்.

அகில இந்தியாவிலும் பக்தர்களை நாள்தோறும் பல்லாயிரக் கணக்கில் ஈர்த்து பலகோடி ரூபாயை வருமானமாக பெற்று புகழ் பெற்று விளங்கிடும் திருப்பதி தேவஸ்தானம் இந்த மகத்தான பணிக்கு ஆகும் செலவில் ஒரு பெரும் தொகையினை வழங்கிட முன் வந்துள்ள அறப்பணியினை அறிய நம் உள்ளமெல்லாம் மகிழ்வெய்து கிறது. திருப்பதி தேவஸ்தான நிர்வாகிக்கு அறநிலையத்துறை சார்பில் நன்றி சொல்ல வேண்டியது என் கடமையாகும்.

தொண்டை நாட்டில் பிரசித்தி பெற்ற வைணவத் திருத்தலங்களில் கடிகாசலம் எனும் வழங்கும் பெரியமலை, சிறியமலை எனும் இருமலைகளில் அமையப் பெற்றுள்ள சோளிங்கர் திருக்கோயில் பார்த்து மகிழ்ந்து பரவசம் அடைந்து பெருமானின் அருள் பெற்றுய்ய அற்புதமான தலமாகும். இத்தலத்தை ஆழ்வார்களுள் பேயாழ்வாரும் திருமங்கையாழ்வாரும், போற்றிப்பாடியுள்ளனர்.

மூர்த்தம், தலம், தீர்த்தம் எனும் மூவகைச் சிறப்புகளும் பெற்று விளங்கி வரும் இத்திருத்தலத்துக்குத் தலவரலாறு வெளியிடப்படுவது சிறப்பான இறைப்பணியாகும். இப்பணி இனிதே நிறைவு பெற ஆக்கமும் ஊக்கமும் அளித்த அறநிலையத்துறை ஆணையாளர் அவர்களுக்கும் பொருளுதவி செய்த திருப்பதி தேவஸ்தான நிர்வாகி அவர்களுக்கும் தலவரலாறு எழுதி முடித்த ஆசிரியர் பெருந்தகைக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவிக்கின்றேன். பலநூறு ஆண்டுகளாக செய்ய இயலாத பணியினை தன் காலத்தில் செய்து முடித்து இத்திருக்கோயில் வரலாற்றில் சாதனையை நிகழ்த்தியுள்ள செயல் அலுவலர் திரு. இரா. குப்புசாமி அவர்களைப்பாராட்டுகிறேன்.

இந்த அரிய தலவரலாற்றினை பக்த சிரோன் மணிகள் வாங்கி படித்து மகிழ்ந்து பகவானின் அருளினைப் பெற்றுய்ய அன்புடன் வேண்டுகின்றேன்.

அன்பன்,

ப. கிருஷ்ணசாமி

பொன். செல்வராஜ், B.A.,B.L.,
உதவி ஆணையாளர்,

இந்துசமய அறநிலை
ஆட்சித்துறை,
வேலூர்-4.

# சிறப்புரை

மஹாவிஷ்ணு எடுத்த திருஅவதாரங்களில் தனிச்சிறப்புப் பெற்று விளங்குவது நரசிங்க அவதாரமாகும். பள்ளியில் ஓதி வந்த ஒரு சிறுவனுக்கு தகப்பனே எதிரியாக, அவர் வார்த்தையை மெய்ப்பிக்க வேண்டி உலகில் தோன்றிய அவதாரமாகும். அத்தகைய அவதாரத்தில் இரணிய சம்ஹாரம் முடிந்த பின்னர் மகாலட்சுமியும் இறைவன் அருகே அணுக கூசின போது பிரகலாதன் ஒருவன் மட்டுமே இறைவன் அருகே அணுகும் பேறு பெற்றான். அத்தகைய உக்கிர மூர்த்தியை சாந்த வடிவில் யோக நிலையில் காண விரும்பிய ஏழு மாமுனிவர்களுக்கு திருக்கோலம் தந்த தெய்வத்தலம் திருக்கடிகை எனும் சோளிங்கபுரமாகும்.

இத்தலத்திற்கு நீண்ட காலத்திற்குப் பிறகு தலவரலாறு வெளியிட இருப்பதை நான் பொறுப்பேற்றவுடன் அறிந்து மட்டிலா மகிழ்ச்சி அடைந்தேன். இக்கடிகையின் பெருமையையும் இறைவன் சிறப்பினையும் தெளிவாகக் கூறும் இந்நூலை ஆக்கிய ஆசிரியர் புராணச் செய்திகளை திரட்டித் தொகுத்து யாவரும் எளிதில் புரியும் வண்ணம் எழுதியுள்ளார். இவ்வாசிரியரின் முயற்சி மேன்மேலும் வளர்ச்சியுற்று இன்னும் இது போன்ற பல நூல்களை வெளியிட ஸ்ரீ லட்சுமி நரசிம்ம பெருமாள் அருள் புரிவாராக.

இந்நூலை வெளியிட திருமலை திருப்பதி தேவஸ்தானத்திலிருந்து நிதி உதவி பெற்றும், இந்நூலுக்கு சிறப்பாக அமைந்துள்ள வண்ணப்பட அட்டைகளை நன்கொடையாளர் மூலம் பெற்றும், இவ்வாறாக பெருமுயற்சி எடுத்து இந்நூலை வெளியிட்ட ஆலய நிர்வாக அதிகாரி திரு. **இரா. குப்புசாமி** அவர்களுக்கு எனது உளங்கனிந்த பாராட்டுகள்.

மெய்யன்பர்கள் இந்நூலை கண்டும், கேட்டும், படித்தும், மனத்தினால் சிந்தித்தும் இறையருள் பெற்றுய்யுமாறு வேண்டுகிறேன்.

இங்ஙனம்,

**பொன். செல்வராஜ்**

இரா. குப்புசாமி, பி.ஏ., எம்.காம்.,
நிர்வாக அதிகாரி.

நிர்வாக அதிகாரி அலுவலகம்,
அருள்மிகு லட்சுமி நரசிம்ம சுவாமி
திருக்கோயில்,
சோளிங்கர், வ.ஆ. அ. மா.

# நன்றியுரை

சிறப்பு வாய்ந்த இத்தல வரலாற்றினை குறித்து 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தெனாலிராம கவிஞர் இந்த க்ஷேத்திரத்தைப் பற்றி தெலுங்கு மொழியில் "ஸ்ரீ கடிகாசல புராணம்" என்றொரு நூலை இயற்றியுள்ளார். அந்த நூல் கிடைக்கப்பெறாத காரணத்தாலும், தமிழில் எழுதப்பட்ட நூலும் இன்று கிடைக்காமையாலும் இக்குறையை நீக்க எண்ணம் கொண்டு, ஒரு நூலை வெளியிட முடிவெடுக்கப்பட்டது. ஆனால் இவ்வரிய பணியினை யாரிடத்தில் ஒப்படைப்பது, அவர் இந்த க்ஷேத்திரத்தின் புராணத்தை உணர்ந்தவராக, இருக்கவேண்டுமே என ஆராய்ந்து பார்த்தபோது. இந்த திருக்கோயிலின் எல்லாச் சிறப்புகளையும் வரலாற்றினையும் தெரிந்து உணர்ந்தவரும் ஸ்ரீ தொட்டாசார் சுவாமிகளின் திருவம்சாத்தாரில் ஒருவருமான திரு. கே. கே. சி. தாதாசாரியார் சுவாமிகள்தான் இப் பணியை முடிக்க வல்லவர் என தெரிந்து அவரிடம் இக்கைங்கர்யத்தை ஒப்படைத்தேன். அவரும் அகமிக மகிழ்ந்து மிகுந்த சிரமத்தோடும் பெரும் முயற்சியோடும் பலப்பல தகவல்களை சேகரித்து, அவற்றைச் சுவையான முறையில் தொகுத்து இந்நூலை எழுதி வழங்கியுள்ளார்கள். மேற்படி அருள்பணியினை நல்ல முறையில் செய்து கொடுத்து உதவிய நூல் ஆசிரியர் திரு. கே. கே. சி. தாதாசாரியார் சுவாமி அவர்களுக்கு இந்த திருக்கோயிலின் சார்பில் மனமார்ந்த நன்றிதனை தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்புனித நூலுக்கு அணிந்துரை எழுதித்தருமாறு இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை, ஆணையாளர் அவர்களை அணுகிக் கேட்ட போது, அவர்களும் இன்முகத்துடன் இவ்வரிய பணியினை உடனே செய்து முடியுங்கள் என்று பணித்து, அணிந்துரை எழுதி வழங்கினார்கள். அலுவலக நிமித்தம் பொருட்டு ஆணையர் அவர்களை சந்தித்த போதெல்லாம் தலபுராணம் அச்சிற்கு கொடுக்கப்பட்டுவிட்டதா ? அப்பணியினை விரைவில் முடியுங்கள் என்று அவ்வப்போது அறிவுரை வழங்கினார்கள். இந்நூல் விரைவில் வெளிவரக் காரணமாயிருந்த ஆணையாளர் அவர்களுக்கும் திருக்கோயிலின் சார்பில் எனது மனமார்ந்த நன்றியை சமர்ப்பிக்கிறேன்.

இந்நூலை அச்சிட்டு வெளியிட பண உதவி வேண்டி திருமலை —திருப்பதி தேவஸ்தான நிர்வாக அதிகாரி அவர்களை நேரில் சந்தித்து வேண்டிக்கொண்டதில் அவர்கள் மிகவும் மகிழ்ந்து கேட்ட உடனே பண உதவி தருவதாக வாக்களித்து உத்திரவினை அன்றே வழங்கினார்கள். மேற்படி திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாக அதிகாரி அவர்களுக்கு இவ்வாலயத்தின் சார்பில் மனமுவந்த நன்றியை சமர்ப்பிக்கிறேன்.

இந்நூலுக்கு வண்ணப்பட அட்டையை அச்சிட்டு கொடுத்த வேலூர் அரசமரப்பேட்டை திரு. R. நரசிம்மன், B.Com., அவர்களுக்கும் திருக்கோயிலின் சார்பில் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் இந்நூல் வெளிவரக் காரணமாயிருந்த அனைத்து அன்பர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியை திருக்கோயிலின் சார்பில் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலை வாசித்தவர்க்கும், வாசிக்கக் கேட்டவர்க்கும், எல்லாம் வல்ல எம்பெருமான் அருள்மிகு யோக நரசிம்ம சுவாமி மற்றும் அருள்மிகு யோக ஆஞ்சநேய சுவாமிகளின் திருவருள் கிட்டும் என்பது திண்ணம்.

அன்புடன்,

**இரா. குப்புசாமி,**

நிர்வாக அதிகாரி.



ஸ்ரீமதே இராமநுஜாய நம. ஸ்ரீ ஸ்ரீநிவாஸ மஹாகுரவே நம

# அருள்மிகு லக்ஷ்மி நரசிம்மசுவாமி திருக்கோயில்

## சோளிங்கர், வாலாசா வட்டம்.

### வடஆற்காடு அம்பேத்கார் மாவட்டம்.

அமைப்பிடம் :

திருக்கடிகை எனும் வைணவத் திருத்தலம் வட ஆற்காடு அம்பேத்கார் மாவட்டத்தில் வாலாஜா வட்டத்தில் அமைந்துள்ளது. வட ஆற்காடு அம்பேத்கார் மாவட்டத்தில் இது ஒன்றே ஆழ்வார்களால் பாடல் பெற்ற திருத்தலம் என்ற தனிச்சிறப்பும் உடையது. இதன் இப்போதைய பெயர் சோளிங்கபுரம் அல்லது சோளிங்கர் என்பதாம்.

இது சென்னை-பெங்களூர் இரயில் மார்க்கத்தில் அரக்கோணத்திலிருந்து மேற்கே 27 கி. மீ. தொலைவிலும், சென்னை – திருப்பதி இரயில் மார்க்கத்தில் திருத்தணி இரயில் நிலையத்திலிருந்து 27 கி. மீ. மேற்கிலும் அமைந்துள்ளது. வேலூரிலிருந்தும் சித்தூரிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளது,

இவ்வூர் சோளிங்கர் எனப்பட்டாலும் இதன் அருகில் 3 கி. மீ. தெற்கில் கொண்டபாளையம் எனும் சிறு கிராமம் உள்ளது. இங்கு தான் பெரிய மலையும், சிறிய மலையும் அமைந்துள்ளது. இவைதான் இவ்வூருக்குப் பெருமை சேர்ப்பன ஆகும். சோளிங்கபுரம் நகரில் நடுநாயகமாக விளங்குவது நரசிங்கப் பெருமாளின் உற்சவ மூர்த்தியின் திருக்கோயில் ஆகும். இது பக்தோசித சுவாமி கோயில் என்று அழைக்கப்படுகிறது. நாற்புறமும் மதில் அமைந்து அதனைச் சுற்றி மாட வீதியாக ஒரு காலத்தில் விளங்கிய திருச்சுற்று அமைந்துள்ளது. கோயிலின் முன் ஒரு அழகிய குளமும், வாகன மண்டபமும் உள்ளன.

பெரியமலை :—கொண்டபாளையம் கிராமத்தில் அருள்மிகு யோக நரசிம்மசுவாமி திருக்கோயில் (பெரியமலை) அமைந்துள்ளது. மலைக்கோயிலின் நீளம் 200 அடி, அகலம் 150 அடி ஏறத்தாழ $1\frac{1}{4}$ ஏக்கர் பரப்பில் அமைந்துள்ளது. பெரியமலை ஏறத்தாழ 750 அடி உயரத்தில் அமைந்துள்ளது. மலை உயரே செல்ல 1305 படிகள் அமைக்கப்பட்டுள்ளன.

**சிறிய மலை :** பெரிய மலைக்கு நேர் எதிராக ஸ்ரீ யோக ஆஞ்சநேய சுவாமி திருக்கோயில் சிறிய மலையில் அமைந்துள்ளது. மலைக்கோயில் அமைந்துள்ள இடம் நீளம் சுமார் 150 அடி - அகலம், 250 அடி. ஏறத்தாழ 1 ஏக்கர் பரப்பில் 350 அடி உயரத்தில் அமைந்துள்ளது. மலை உயரே செல்ல 406 படிகள் அமைக்கப் பட்டுள்ளன.

**ஊர் திருக்கோயில் :** ஸ்ரீ யோக நரசிம்ம சுவாமியின் உற்சவ பெருமானான (பெருமாள் கோயில்) பக்தோசித சுவாமி திருக்கோயில், சோளிங்கர் நகரில் மையப் பகுதியில் அமைந்துள்ளது. கோயில் அமைந்துள்ள இடத்தின் நீளம் 300 அடி. அகலம் 150 அடி. ஏறத்தாழ 2·50 ஏக்கர் பரப்பில் அமைந்துள்ளது.

**இக்கோயிலில் வழிபட்ட அன்பர்கள் வரலாறு :**

பேறுபெற்ற பெருந்தவத்தோர் : தவ முனிவர்கள் எழுவர் அத்திரி, கத்யபர், வசிஷ்டர், ஜமதக்ணி, கௌதமர், பரத்வாஜர் விசுவாமித்ரர்.

அடியார்கள் : பிரஹலாதர், விப்ரசேகரர், வாமதேவர், தூர்வாசர், உக்கிரதபஸ், ஹம்சம், ஔத்தாலி மற்றும் பலர்.

வைணவ மத ஆசாரியப் பெருந்தகையோரில் நாதமுனிகள், ஆளவந்தார், திருக்கச்சிநம்பிகள், சுவாமி இராமாநுஜர், முதலியாண்டான், வேதாந்த தேசிகர், ஸ்ரீ மன் மணவாளமா முனிகள், என்பார் இத்தலத்து இறைவனை வணங்கி வழிபட்டுள்ளனர். குறிப்பாக மணவாள மாமுனிகள் (14-ம் நூற்றாண்டு) இத்தலத்தில் எறும்பி என்ற பகுதியில் தம் சீடர் தேவராஜகுரு எனும் எறும்பி அப்பாவிற் காக ஒருமாதமாக இருந்து திருப்பாவைச் சொற்பொழிவு செய்தார், என்றும் அதற்கு சான்றாக தக்கான் பாரிவேட்டை நாளானதால் அந்த எறும்பிப் பகுதியில் திருப்பாவை சாற்றுமுறை நடந்தது என்றும் அதனை ஒட்டியே இன்றும் மேற்குத் திசைப்பாரி (பரி) வேட்டை நாளில் தக்கான் எம்பெருமானுக்கு எறும்பி கிராம மண்டபத்தில் திருப்பாவை சாற்றுமுறை நடந்து வருகிறது என்றும் பெரியோர் கூறுகின்றனர். மணவாள மாமுனிகள் இந்தப் பெருமாளை மிகவும் உகந்தருளி வடதிருவரங்கநாதன் என்று திருநாமம் இட்டும், ஊர்க்கு வடதிருவரங்கம் என்றும் எறும்பியில் உள்ள ஏரிக்கு வட திருக்காவேரி என்றும் பெயரிட்டு மகிழ்ந்தனர். அவர்தம் சீடர் எறும்பியப்பா நம்

ஆசாரியரைத் தவிர பிற எதனையும் புகழாதவர் தம் ஆசாரியர் மன உவப்பிற்காக வேண்டி இத்தலத்து எம்பெருமானைக் குறித்து அம்ருதவலாவளி சதகம்' என்னும் சதக நூல் ஒன்றினை வடமொழியில் இயற்றியுள்ளார்.

சுவாமி தொட்டயாசார் எனும் மஹாவித்வானும் பக்தரும் ஆகிய பெரியவர் தற்போது சோளிங்கபுர கிராமத்தை நிர்மாணம் செய்து பெருமாள் கோயிலைப் புதிதாகக் கட்டிக் குடமுழுக்கு முதலிய விழாக்களைச் சீரும் சிறப்புமுறச் செய்தார். இவையல்லாமல் மலைக் கோயில்களையும் புதுப்பித்து கோயில் நித்தியபடிபூஜை, விழா, போன்ற அனைத்து சிறப்புகளையும் ஏற்படுத்தினார். முதன்முதலில் பெருமாள் கோயில் பிரதிஷ்டை கி. பி, 1588-ல் நடைபெற்றதாகத் தெரியவருகிறது. இவரே இத்தலத்து முதல் ஆசாரிய புருஷராக பெருமானின் அனைத்துக் கைங்கர்யங்களையும் செய்து வழிப்பாட்டு முறையை உண்டாக்கிய பெரியார் ஆவார். இவர் இராமானுசரின் மருமகனான முதலியாண்டானின் திருக்குலத்தைச் சார்ந்தவர். இவர் ஆசார்ய புருஷர் ஆகையால் இவரும் இவர்தம் குலத்தோன்றல்களும் சீடர்களின் உதவி கொண்டு பெருமாளுக்கு திருவாபரணம், வஸ்திரம் எனும் பட்டு பீதாம்பர ஆடைகள், வாகனங்கள் பாத்திரங்கள் போன்ற அனைத்தையும் சேகரித்து உதவியுள்ளார்.

**தலச் சிறப்பு :** இது ஒரு புகழ் வாய்ந்த பிரார்த்தனை தலமாகும். பில்லிசூனியம், தீராத வினை, மனக்குறை முதலியவற்றால் துன்புறுவோர் இத்தலத்திற்கு வந்து நியமத்துடன் சேவை புரிந்தால் அத்துன்பம் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கப்பெறுவர் என்பது கண்கண்ட உண்மை. நோய் நீங்கியும், மனக்குறை தீர்ந்தும், பல்வகையிலும் அல்லல் நீங்கி அருள் பெற்றோர் பலர். பெருமானுக்கு மண்டகபடிச் செய்வதும், மண்டபம் எழுப்பியும், கட்டளை ஏற்படுத்தியும், உற்சவம் செய்தும் இன்னபல தொண்டும் புரிந்து வருவதே இத்தலத் தனித்த சிறப்பு வாய்ந்த ஒன்று என்பதைக் கண்கூடாக விளங்குகிறது. புராணத்திலேயே இத்தலம் காசி, கங்கை கயைகளிலும் மேலானது என போற்றப்பட்டுள்ளது.

**தல விருட்சம் :** பெரியமலையில் தல விருட்சம் என ஏதுமில்லை. ஊரில் பெருமாள் கோயிலில் பாரிஜாத மரம் ஒன்று முன்பு இருந்தது. சிறியமலையில் அசோக மரம் உள்ளது. அதன் கீழே குளம் அமைந்துள்ளது.

**மூர்த்தங்கள் :** பெரிய மலையில் உள்ளே நுழையும் போது அழகிய கோபுர வாசல் அத்தோற்றம் நம் உள்ளத்தைக் கொள்ளைக் கொள்ளும். அங்கு நின்று சுற்று முற்றும், பார்த்தால் பச்சைப் பசேல் எனப் பசுமை படர்ந்த குன்றுகளும், இடையிடையே ஊர்களும் காட்சி யளிக்கும். வலப்புறமாக நுழைந்த அளவில் பெரிய பலிபீடமும் கொடி மரமும் காணலாம். நீண்ட நெடுங்காலமாக இருந்த கொடிமரம் பழுதுற்றதால் அண்மையில் புதுக் கொடிமரம் அன்பர்களின் காணிக்கையால் அமைக்கப்பட்டுள்ளது. இது ஒன்றே பிரதான துவஜஸ்தம்பம். உற்சவர் இருக்கும் கோயிலில் (ஊர்க் கோயிலில்) தனியாக வேறு கொடிமரம் கிடையாது. இங்கேதான் முதன்மையான பூசை என்பதால் கொடிமரம் பெரியமலையில் ஏற்பட்டுள்ளது. முதலில் தாயார் சன்னதி முன்பு பெரியமலையில் இடைப்பகுதியில் தாயாருக்கு தனிக் கோயில் இருந்தது. தாயார் அல்லது அம்மனைத் தனிக்கோயில் நாச்சியார் என்பது வைணவ சம்பிரதாயம். பாதுகாப்பும் பிறவும் கருதித் தாயார் மூலவர், உற்சவர் இங்குப் பெருமாளுக்கு அருகில் அமைந்த சன்னதியில் தனிக் கோயில் கொண்டனர். அமுருதவல்லித் தாயார் சன்னதியைக் கடந்தால் பெருமாள் சன்னதி. தாயார் கிழக்கு முகமாக வீற்றிருக்கிறார். தாயாரை வலம் வந்து வடக்கு முகமாக நடந்தால் பெருமாளின் துவாரபாலகர்களைக் காணலாம். அழகிய சிலை உருவம். பெருமாள் சன்னதியில் வெளியே நிற்காமல் அவர்தம் கருவறை அமைந்த மண்டபத்தின் வெளியே வடக்கு வாசலில் தெற்கு நோக்கிக் கம்பீரமாகக் காட்சி தருகின்றனர். அவர்களைத் தொழுது அனுமதி பெற்று வலமாக வந்து தெற்கு வாசலில் நுழைந்தால் பெருமாள் கருவறையில் முன் மண்டபம் மேல் விசாலமும், சுவர்களும் வண்ண ஓவியங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. இவ்வோவியங்கள் அண்மைக் காலத்தில் எழுதப்பட்டவை. பெருமாளின் முன்பு இரண்டு இறக்கைகளுடன் குவித்த கைகளுடன் சிலை வடிவில் சிறிய கருடாழ்வார் நின்ற நிலையில் வினயத்துடன் காட்சி தருகிறார். அவருக்குப் பின்னமைந்த சுவரில் சாளரமுண்டு. அங்கிருந்து பார்த்தால் எதிரே சிறியமலை தெரியும். சிறியமலையில் யோகாஞ்சநேயரின் திருக்கண்கள் நேராகப் பெரியமலையில் உள்ள யோக நரசிங்கப் பெருமானின் திருவடி நோக்கி அமைந்துள்ளன என்று பெரியோர் கூறுவர். கருவறையின் முன் அமைந்த பகுதி நுட்பமான முறையில் சுற்றிவர அமைந்துள்ளது. கருவறையில் சிலா வடிவில் ஸ்ரீ யோக நரசிங்கப் பெருமான் எழுந்தருளியுள்ளார். கீழே அமைந்த பலகையில் சிறிய விக்ரகம் ஸ்ரீ லட்சுமி நரசிம்மப்பெருமானது அடுத்து ஆதிசேடன் சக்கரத்தாழ்வார், கண்ணன் கருடாழ்வார் முதலிய மூர்த்திகள், அடுத்த பகுதியில் மறையாய் விரிந்த விளக்கு, புக்கான் மிக்கான் என்னும்

பெருமான்கள். நரசிங்கப் பெருமானுக்கு ஆழ்வார் பாடலில் அக்காரக் கனி என்பது திருநாமம். இவரது உற்சவர் தக்கான் அல்லது பக்தோசித சுவாமி சோளிங்கர் ஊர்க்கோயிலில் கோயில் கொண்டுள்ளார்.

பெருமாளின் இடப்புறத்தில் அமைந்த அம்மன் திருக்கோயிலில் இருக்கும் மூலமூர்த்தி, உற்சவமூர்த்தி ஆகியோருக்கு அமிருதவல்லி, சுதாவல்லி என்ற பெயர் கூறப்படும் என்று முன்பே கூறப்பட்டது.

வெள்ளிக்கிழமை தோறும் பெருமாளுக்கும் அம்பாளுக்கும் திருமஞ்சனம் (அபிஷேகம்) நடைபெறும். திருமேனியில் சேர்க்கப் படும் பால், தயிர், தேன், சர்க்கரை முதலியவற்றின் கட்டிகளைப் பஞ்சாமிருதம் என்பது வழக்கு, இதுவே பிரசாதமாக வழங்கப் படுகிறது. வெள்ளிக்கிழமைகளில் எவரேனும் தாயாருக்கு பிரார்த்தனை உற்சவம் கட்டினால் உற்சவம் நடைபெறும்.

**சின்னமலை :** ஏற்றமிகு இயற்கை எழிலிடையே 406 படிகள் அமைந்த அழகிய குன்றின் மீது அமைந்துள்ளது எழில் மிகு யோக ஆஞ்சநேயர் கோயில். நுழைவு வாயிலில் எதிரே அமைந்த பாதையில் உள்ள கல்வெட்டு, காலத்தால் தாழ்வுற்றிருந்தா லும் கருத்தால் வண்ண வண்ணச் செய்திகளைத் தெரிவிக்கிறது. சுவாமி அமுது செய்த பிரசாதம் பங்கீடு குறித்த சுவையான செய்தி களைக் கூறும் அப்பாறையைக் கடந்து வலமாக வந்தால் அறுமார் சன்னதியினைக் காணலாம். வாயுகுமாரன் சாந்த ரூபியாய், யோக நிலையில் பரந்தாமனை நினைந்து கோலம் கொண்டிருக்கும் அழகு நம் கண்ணையும், கருத்தையும் ஈர்க்கும் வண்ணமுள்ளது. எதிரே மேற்குத் திசையில் பெரிய மலையில் நரசிங்கப் பெருமானின் கொடிக்கம்பம் இருப்பதை இங்கிருந்தே காணலாம். சின்னமலையில் யோக ஆஞ்சநேயர் தம் திருக்கண்களால் பெரியமலையில் உள்ள நரசிங்கப் பெருமானின் திருவடியைக் கண்ட வாறே அவரை நினைத்து தவமிருக்கும் நிலையைக் காணலாம். மூலவர் ஒரழகிய சிறு குழந்தை குத்திட்டு அமர்ந்துள்ளதுபோல் காட்சி அளிக்கிறார். நான்கு கைகள் —ஒரு கையில் சக்கரம் ; இன்னொன்றில் சங்கு. மற்றிரு கைகளில் ஜபமாலையும், ஜப எண்ணிக்கையும் ஆன நிலை. வீற்றிருந்த திருக் கோலம், ஔத்தாலிக முனிவர் வாமதேவர் போன்றவர்க்கு வரமருளி, மனக்குறை தீர்த்த - தீர்க்கும் வசியப் புன்னகையுடன் விளங்கு கிறார். உற்சவர் நின்ற திருக்கோலம் மூலவர் தோற்றம் போன்றே இவரும் உள்ளார், ஞாயிறு தோறும் சிறப்பு அபிசேகமும் நாள்தோறும் அபிசேகம் உண்டு. கார்த்திகையில் விசேஷப் பிரார்த்தனை உற்சவம் குறிப்பிட்ட காலங்களில் நடைபெறும்.

கார்த்திகை மாதம் இத்தலத்திற்கு தனிச்சிறப்பு கூறப்படுகிறது. அனுமார் சன்னதியை அடுத்து ஒரு பெரிய குளமும், அதன் கிழக்குப் பகுதியில் ஸ்ரீ ராமர் சன்னதி அமைந்த மண்டபமும் காணலாம். அனுமார் பொருட்டு ஸ்ரீ ராமர் தம் சகோதரர் இலக்குமணன் சீதா பிராட்டியுடன் இம்மலையில் தங்கி முன்கூறிய குளத்தில் நீராடியதாகப் புராணச் செய்தி. அதனால் அக்குளத்திற்கு இராம தீர்த்தம் என்னும் பெயருண்டு. அனுமார் அதில் சக்கரத்தாழ்வாரை தோய்க்க பரிசுத்தமடையச் செய்ததால் அதற்கு அனுமத் தீர்த்தம், சக்கரத் தீர்த்தம் என்ற வேறு பெயர்களும் உண்டு. அருகே அரச மரமும் ஒன்று பெரிதாக மேடை சூழக் காணப்படுகிறது. அடுத்து ஸ்ரீ இராமர் சன்னதிக்கு செல்லும் வழியில் கருவறைக்குமுன் துவார பாலகர்களை காணலாம். ஸ்ரீ இராமர், லட்சுமணர், சீதாப்பிராட்டி ஆகிய மூவரும் நின்ற திருக்கோலத்தில் பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றனர். மூலவர் உற்சவர் ஆகியோருடன் பெரிய மலையில் உள்ளதுபோல் சிறிய கண்ணன், சக்கரத்தாழ்வார், ஆதிசேஷன் போன்றோர் செப்புத் திருமேனிகளையும் கண்டு தரிசிக்கலாம்.

ஸ்ரீ இராகவனின் குல ஆராதனைப் பெருமானான அரங்கநாதர் சன்னதி ராமர் சன்னதியை அடுத்து உள்ளது. இங்கு ராமர் சன்னதியைத் தவிர வேறு சன்னதியில் துவார பாலகர்கள் இல்லை என்பது ஒரு முக்கியமான செய்தி. அரங்கநாதர் மூலவர் பள்ளிகொண்ட திருக்கோலம். உற்சவர் நின்ற திருககோலத்திலும் உபய நாச்சிமார் அமர்ந்த கோலத்திலும் தரிசனம் தருகின்றனர்.

தீர்த்தம் நிறைந்த குளத்தில் மீன்கள் மிகுதியாக உண்டு. நம் குல முதல்வன் கோயில் என்பதால் போலும், வானரங்களைக் கூட்டம் கூட்டமாகக் காணலாம். ஏறத்தாழ 50 ஆண்டுகளுக்குமுன், இம்மலையில், கொண்டமுக என்ற ஒருவகைக் குரங்குகள், ஒரு சிறுவர்/ சிறுமி உயரம் உடையவை—மிகுதியாக இருந்தன. இரண்டாம் உலகப் போரில் நீகிரோவர் இப்பகுதியில் முகாமிட்டிருந்தபோது அவை முழுமையாக அழிக்கப்பட்டுவிட்டன என்பது வருத்தம் தரும் செய்தியாகும். அக்குரங்குகள் சாதுவானவை என்று கூறப்படுகிறது. பேய் பிசாசு, பிடித்தவர் தீராத நோயினால் வருந்துபவர் போன்றோர் இம்மலைச் சுனை (குளம்) நீரில் விதிப்படி மூழ்கிப் படிகளில் படுத்துக் கிடந்து வாயு குமாரனை நினைந்து வரம் கேட்பதைக் காணலாம்.

## ஊர்க்கோயில் — பெருமாள் கோயில்

சோளிங்கர் நகரின் நடுவில் நீள் சதுர வடிவில் அழகுற அமைந் துள்ளது பெருமாள் திருக்கோயில். கோயிலின் முன் திருத்தேர் ஒன்று எழிலுற நின்று நம்மை வியந்து நோக்கச் செய்யும். கோயிலின் எதிரே சன்னதி வீதியில் இறுதியில்தான் முன்பு திருத்தேர் இருந்தது. திருத்தேர் மண்டபம் இன்றும் காட்சியளிக்கிறது. ஏதோ காரணம் பற்றி திருத்தேர் அங்கிருந்து மாற்றி கோயிலின் அருகே வைக்கப் பட்டுள்ளது திருத்தேர் உற்சவத்தில் சன்னதி வீதியில் தேர் இருமுறை வரவேண்டிய நிலை உள்ளது. கோயிலின் தோரண வாயில் உள் எதிரே பலிபீடம் காட்சி தருகிறது. அதனருகே அமைந்த மேடையில் பெருமாளின் பாதங்கள் சிலை வடிவில் உள்ளன. என்றோ திருப்பணி நடைபெற்றபோது அமைப்பாக வைக்கப்பட்டதுபோலும்.

வலப்புறத்தில் மடைப்பள்ளி விளங்கும். அதன்எதிரே அமைந்த மண்டபம் கல் மண்டபம். இராப்பத்து, பகல் பத்து. முதலிய விழா நடைபெறுவது இந்த மண்டபத்தில்தான். இறைவன் விழாக்காணும் அந்த மண்டபத்தில் கல் தூண்கள் மிகப்பெரியவை. சிற்பக் கலை நிறைந்தவை. அதன் எதிர் முனையில் சுவற்றிலேயே குடைந்தது போன்ற ரங்கநாதர் சிலை வடிவம் அமைந்துள்ளது. பள்ளி கொண்ட பெருமானுக்கு முன்பொரு காலத்தில் பூஜை நடந்துள்ளது. அருகே தாயார் சின்னம் பொறித்த மேல் பகுதி அமைந்த ஒரு சன்னதியைக் காணலாம். அதில் இப்போது விக்கிரகம் ஏதுமில்லை. அங்கிருந்து கிழக்கு நோக்கி வந்தால் ஆழ்வார், ஆசார்யர்கள் சன்னதிகளைக் காணலாம். அனைத்திலும் சிலை வடிவில் உருவங்கள் உள்ளன.

பெருமாள் சன்னதிக்குப்பின்புறம் ஆதிகேசவப்பெருமாள் சன்னதி உள்ளது. ஆதிகேசவன் உபயநாச்சிமார் சிலை வடிவில் நின்ற நிலையில் உயர்ந்து காணப்படுகின்றனர். எதிரே பெரியவடிவில் கல்லில் வடித்த கருடனின் மிக அழகியத் தோற்றம். கருவறை முன்பு நின்ற நிலையில் துவாரபாலகர். கருவறையருகே காலியாக ஒரு சன்னதி. அதில் சிவலிங்கம் இருந்ததாக கூறப்படுகிறது. தொட்டாசார் சுவாமி காலத்தில்,சிவபெருமானுக்கு ஊரில் வடகிழக்கில் தனிக்கோயில் எடுக்கப்பட்டு அதில் அந்த சிவமூர்த்தம் அமைக்கப்பட்டதாக கூறப்படுகிறது.



பெருமாள் சன்னதி : ரங்க மண்டபம், எனும் மஹா மண்டபத்தை கடந்ததும் உள்ளே சென்றால் பக்தோசித சுவாமி சன்னதியினை காணலாம். வெளியே துவாரபாலகர்கள் எழிலுற கோயில் காக்கின்றனர். உற்சவர் தக்கான், பிராட்டிமார் இருவருடன் நின்ற திருக்கோலத்தில் சேஷ வாகனத்தில் என்றும் நின்று தரிசனம் தருகிறார். சடகோபம் எனும் பெருமாள் திருவடிநிலை ஆதிசேடன் வடிவில் அமைந்திருப்பது இத்தலத்தின் தனிச்சிறப்பு ஆகும். பெருமாளின் வலப்புறத்தில் ஐம்பொன்னாலான கிருஷ்ண விக்ரகம், கண்ணையும் கருத்தையும் கவர்வதாய் சிற்ப வேலைப்பாடு நிறைந்து உள்ளது.

மற்றொரு பக்கம் சிறிய வடிவில் வரதராஜ சுவாமி காட்சி தருகிறார். ஸ்தல ஆசார்ய புருஷர் தொட்டயாசார் சுவாமிக்கு கருடவாகனத்தில், காட்சி அளித்ததால் அப்பெருமான் – அருளாளர் என்றும் பேரருளாளர் என்றும் போற்றப்படுகிறார். அதனை நினைவூட்டக் கோயில் கொண்டுள்ளார். கருவறையைச் சுற்றி வலம் வரும்போது ஆண்டாள் சன்னதியைக் காணலாம். மூலவர், உற்சவர் இருவரும் உண்டு, அதற்கு நேர் கிழக்கில் ஆழ்வார் ஆசார்யர்களின் செப்புத் திருமேனிகள் சேனை முதல்வருடன் ஆழ்வார் திருமேனிகள் 12 உண்டு. ஆசார்யர்களின் நாதமுனிகள், ஆளவந்தார், முதலியாண்டான் திருக்கச்சி நம்பி, ராமாநுஜர், எம்பார், கூரத்தாழ்வான், பிள்ளை லோகாசாரியார் மணவாள மாமுனி, எறும்பிலப்பன், சுவாமி தொட்டாசார் ஆகிய 11 செப்புத் திருமேனிகள் உண்டு.

**சன்னதிகளின் அமைப்பு :**

**திருமலைக்கோயில் (பெரியமலை) (மூலவர்)**

ஸ்ரீ யோக நரசிம்மசுவாமி (அக்காரக் கனி) சிம்மமுகம் (சிங்க முகம் கிழக்கே திருமுக மண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், யோகாசனம், ஸ்ரீ சாளக்கிராம மாலை அணிந்துள்ளார். யோக பீடத்தில் தசாவதாரப் (பத்து அவதாரக் காட்சி) பட்டை விளங்குகிறது. இறைவன் திருவடிகளில் சூரிய சந்திரர்களின் நித்யவாசம், ஸப்தரிஷிகளுக்கு கடிகைப் பொழுதில் பிரத்யக்ஷமாய் தோன்றி அருள்புரிந்தார். சிறிய திருவடி என்னும் ஹனுமார் ஆஞ்சநேய சுவாமிக்கு சங்குசக்கரம் அளித்தவர். விமானம் ஹேமகோடி. பெருமானுடன் மறையாய் விரிந்த விளக்கு, மிக்கான், புக்கான், என்ற ஆழ்வார் மங்களாசாஸனம் பெற்ற பெருமாள்களும் உள்ளனர். தீர்த்தம் சிலா புஷ்கரணி — மலையின் பின்பு உள்ளது. பெரியமலைக்கு,

கடிகாத்திரி, கடிகாசலம், ஹனுமத்பர்வதம், ஏகசிலா பர்வதம் என்றெல் லாம் பலபெயர்கள் உண்டு. பெருமாளின் எதிர்புறத்தில் ஸ்ரீ சேனை முதல்வர் நம்மாழ்வார், சுவாமி எம்பெருமானார் (இராமாநுஜர்) உள்ளனர். அடுத்து சப்தரிஷிகளும் கருடனும் உள்ளனர்.

தாயார் சன்னதி : தாயார் [அம்மன்] மூலவர், உற்சவர், அமிருதபலவல்லி சுதாவல்லி என்று திருநாமம். கிழக்கே திருமுக மண்டலம்.

**சின்னமலை ஸ்ரீ ரங்கநாதர் சன்னதி :**

மூலவர் பள்ளி கொண்ட திருக்கோலம்.

உற்சவர் : நின்ற திருக்கோலம். உபய நாச்சிமார் : வீற்றிருந்த திருக்கோலம் தெற்கே : திருமுக மண்டலம்.

ஸ்ரீ இராமர் சன்னதி : ராமர், லக்ஷ்மணர், சீதா பிராட்டி மூலவர் நின்ற திருக்கோலம் உற்சவர் நின்ற திருக்கோலம். மேற்கே திருமுக மண்டலம்.

ஸ்ரீ யோகாஞ்சநேயர் சன்னதி : மூலவர் யோகாஞ்சநேயர் வீற்றிருந்த திருக்கோலம். (யோகாசனம்) மேற்கே திருமுக மண்டலம். சதுர்ப்புஜம் (4 கைகள்) மேற்கைகளில் வலத்தே சக்கரம், இடத்தில் சங்கம் மற்றிருகைகளில் ஜபமாலை, ஜபசங்கை (அ) எண்ணிக்கை மூலவர்க்கு சாலக்கிராம மாலை. உற்சவர்க்கும் சதுர்ப்புஜம் நின்ற திருக்கோலம். தீர்த்தம் : அனுமத் தீர்த்தம், சக்கரத் தீர்த்தம், ஞாயிற்றுக்கிழமை விஷேசம்.

**பெருமாள் திருக்கோயில் (ஊர்க்கோயில்)**

**ஸ்ரீ பக்தோசித சுவாமி சன்னதி :**

உற்சவர் : ஸ்ரீ பக்தோசித சுவாமி (தக்கான்) உபய நாச்சிமாரு டன் நின்ற திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம். சதுர்புஜம், சக்ரம், சங்கம், மற்றிருகைகளில் இடக்கையினால் அழைத்து, வலக்கை யால் அஞ்சேல் என அபயம் தருவதாக ; அழைத்து அபயம் அளிக்கும் காட்சி, உபய நாச்சிமாருக்கும் அழைப்பது போன்ற கைகள். (ஆஹ்வான ஹஸ்தம்) ஆகும். இருக்கை சேஷ வாகனம், விமானம் : ஹேமகோடி விமானம் கண்ணன் ஸ்ரீவரதராஜசுவாமி, எம்பெருமான்கள் திருமங்கையாழ்வார், பேயாழ்வார், மங்களாசாஸனம் செய்த பெருமாள். குளம் : ஸ்ரீநிவாச புஷ்கரணி.

**ஆதிகேசவர் சன்னதி :**

ஆதிகேசவப் பெருமாள் உபயநாச்சிமாருடன் கிழக்கு முகமாய் நின்ற திருக்கோலம். பெரியமலை சின்னமலைக்குப் போய் சேவை செய்ய இயலாதவர் அவருக்கு ஆராதனைச் செய்தால் அப்பயன் எய்துவர் என்று பெரியோர் கூறுவர். இப்பெருமானுக்கு 1008 குடம் நீராட்டு விழா முறைப்படி நடத்தினால் மழை பெய்து நாடு செழிக்கும் என்று கூறப்படுகிறது.

**ஸ்ரீ ஆண்டாள் சன்னதி :**

ஸ்ரீ ஆண்டாள்—மூலவர்—உற்சவர் கிழக்கே திருமுக மண்டலம்

**தீர்த்தம் :** கடிகாசலத்தில் 108 தீர்த்தங்கள் இருப்பதாகக் கூறப்பட்டு வருகிறது. ஆயினும் புராணத்தில் சிலவே கூறப்பட்டு உள்ளன. அவற்றில் மிக மிக முக்கியமான ஒன்று பிரம்மதீர்த்தம் என்னும் தக்கான்குளம். இது தற்போது நன்கு புதுப்பிக்கப்பட்டு உள்ளது. இந்த குளத்தின் நீளம் 300 அடி. அகலம் 200 அடி. படிகள் 25 உள்ளன. சேவார்த்திகள் நாடோறும் நீராடும் தீர்த்தமும் இதுவே ஆகும். இதில் பெருமாளுக்கு தெப்பல் உற்சவம் தீர்த்தவாரி போன்றவை நடைபெறுகின்றன. இக்குளக்கரையில் ஸ்ரீ வரதராஜ சுவாமி கோயிலும் உள்ளது. இதில் சுவாமி தொட்டாசாரியாருக்கு சேவை சாதித்த வரலாற்றை உணர்த்தும் வகையில் வரதராஜ சுவாமி கருட வாகனத்தில் அமைந்து அருள்பாலிக்கும் தோற்றம் நெய்வத் தோற்றமாம். இக்கோயில் இராமாநுஜரின் மூலவர் உற்சவர் பிம்பம் உள்ளன. ஐம்பொன்னாலான உற்சவத் திருமேனி ஸ்ரீ பெரும்புதூரில் உள்ளது போன்று உள்ளது. தொட்டாசாரின் மூலவமூர்த்தி மட்டும் சிலை வடிவில் உள்ளது.

சிறியமலை அடிவாரத்தில் பாண்டவ தீர்த்தம் உள்ளது. மலையில் அனுமத் தீர்த்தம், ராமதீர்த்தம், சக்ர தீர்த்தம் என்று பல பெயரில் விளங்கும் சுனை உண்டு. பேய், பிசாசு, பிடித்தோர் இதில் மூழ்கி கரைப்படிகளில் விழுந்து வணங்கி இறைவனைக் குறித்து வரம் வேண்டுவது இன்றும் நிகழ்வதொன்று. பெரியமலை அடிவாரத்தில் நரசிம்ம தீர்த்தம் உள்ளது. மலையிலும் சில உண்டு.

ஊர் திருக்கோயில் பெருமாள் கோயிலின் முன்புள்ள குளம் ஸ்ரீ நிவாஸ புஷ்கரணி எனப்படும். முற்காலத்தில் பெரியோர்கள் இதில் அநுட்டாணம் செய்துவிட்டு இறைவனைத் திருவடி தொழுதனர்

**கோபுரங்கள், பெரியமலை :** *பெரியமலை அருள்மிகு யோக நரசிம்மசுவாமி திருத்தலத்தில் நுழைவு வாயிலில் அழகிய ராஜ கோபுரம் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. 5 நிலைகளும் 7 கலசங் களும், கொண்டதாகும். இதன் உயரம் சுமார் 50 அடி. அடிப்பரப்பு சுமார் 22 அடி ஆகும்.*

**சிறியமலை :** *சிறியமலை அருள்மிகு யோக ஆஞ்சநேயசுவாமி திருத்தலத்தில் நுழைவு வாயிலில் அழகிய ராஜகோபுரம் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. 3 நிலைகளும். 5 கலசங்களும் கொண்டதாம் இதன் உயரம் சுமார் 31 அடி அடிப்பரப்பு 14 அடி அகலமும் அமைந்துள்ளது.*

**ஊர் திருக்கோயில் (பெருமாள் கோயில்) :** *பெருமாள் கோயிலின் அழகிய கோபுரம் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. 5 நிலைகளும், 7 கலசங்களும் கொண்டதாம். இதன் உயரம் 90 அடி. அடிப்பரப்பு 35 அடி அகலம் உடையதாகும்.*

**பிரகாரங்கள் பெரியமலை :** *பெரியமலையில் வெளிப் பிரகாரம் சுமார் 15 அடி அகலமும், 200 அடி நீளமும் கொண்டதாம். தாயார் சன்னதி பிரகாரம் சுமார் 10 அடி அகலமும்: 75 அடி நீளமும் உடையதாம். பெருமாள் சன்னதி பிரகாரம் 15 அடி அகலமும் 80 அடி நீளமும் உடையதாம்.*

**சிறியமலை :** *சிறியமலையில் வெளிப்பிரகாரம் 15 அடி அகலமும் 90 அடி நீளமும் உடையதாம். ராமர் சன்னதி பிரகாரம் சுமார் 6 அடி அகலமும், 18 அடி நீளமும் உடையதாம். அனுமார் சன்னதி பிரகாரம் 6 அடி அகலமும் 75 அடி நீளமும் கொண்டதாக அமைந்துள்ளது.*

**ஊர் திருக்கோயில் (பெருமாள் கோயில்)** *கோயிலின் உள்ளே ஒரே ஒரு பிரகாரம் தான் உண்டு. திருச்சுற்று தற்போது உபயோகத் தில் இல்லை. மேலும் ஊரவர் வீட்டின் பின்புறமாயும் அமைந்து நடமாடுவதற்கு தகுதி அற்றதாகப் போய்விட்டது. உள் பிரகாரத்தில் நீளம் சுமார் 200 அடி அகலம் 20 அடி கொண்டதாகும்.*

*உற்சவர் பெருமாள் சன்னதி பிரகாரம் சுமார் 10 அடி அகலமும் சுமார் 40 அடி நீளமும் அமைந்துள்ளது. மூலவர் ஆதிகேசவப் பெருமாள் சன்னதி பிரகாரம் சுமார் 10 அடி அகலமும் 30 அடி நீளமும் கொண்டதாய் அமைந்துள்ளது.*

**மண்டபங்கள் (பெரியமலை) :** பெரியமலை அடிவாரத்திலிருந்து நுழைவு வாயில் ராஜகோபுரம் வரை 7 மண்டபங்கள் அமைந்துள்ளது. மேற்படி மண்டபங்கள் சேவார்த்திகள் இளைப்பாறுவதற்காக அமைக்கப்பட்டுள்ளது. ராஜகோபுரம் எதிரே ஒரு நாற்கால் மண்டபம் அமைந்துள்ளது. பெருமாள் சன்னதி வெளிப்பிரகாரத்தில் துவாதசாராதன நான்கு கால் மண்டபம் அமைந்துள்ளது. மடப்பள்ளி வாசலில் யாகசாலை மண்டபமும், தனி மடைப்பள்ளி மண்டபமும் அமைந்துள்ளது. பெரியமலை வழியிடையே பழைய தாயார் சன்னதி 16 கால் மண்டபத்துடன் அமைந்துள்ளது. தற்போது உபயோகத்தில் இல்லை.

**சிறியமலை :** சிறியமலை அடிவாரத்திலிருந்து ராஜகோபுரம் நுழைவு வாயில் வரை இரண்டு மண்டபங்கள் அமைந்துள்ளன. சக்ர தீர்த்தம் குளக்கரையை சுற்றிலும் சுற்றுக்கால் மண்டபம் நீண்ட அளவில் அமைந்துள்ளது. ராமர் சன்னதிக்கு எதிரே சக்ர மண்டபம் ஒன்று அமைந்துள்ளது.

**ஊர்திருக் கோயில் [பெருமாள் கோயில்] :** ரங்க மண்டபம் ஒன்று மட்டுமே சிற்பங்களுடன் காணப்படும் அழகிய மண்டபமாகும். அடுத்து இராப்பத்து மண்டபம், பெரிய பெரிய தூண்களுடைய மண்டபமாக அதன் இறுதியில் அழகிய ஊஞ்சல் மண்டபம் சிற்பங்களுடன் மிக அழகாகக் காட்சியளிக்கிறது. இம்மண்டபம் போன்று பெரிய மலையிலும் பெருமாளுக்கு அழகியதொரு மிகச் சிறிய ஊஞ்சல் மண்டபம் என்பது போன்று ஒன்று அமைந்துள்ளது.

இக்கோயில் பகுதியில் முற்றுப்பெறாத பெரிய கல் தூண்களுடன் நிற்கும் பகுதிகளும் உள்ளன. பெருமாள் சன்னதியில் வடக்கு பிரகாரத்தருகே இதனைக் காணலாம். இம்மண்டபங்கள் கோயில் அனைத்தும் விஜய நகர ஆட்சியின்போது அமைந்தவை ஆகும். கோயிலில் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவை அனைத்தும் விஜயநகர காலத்தவையே ஆகும். ஆண்டாள் சன்னதியில் வெளிச்சுவரில் மட்டும் கி. பி. 1715-ஆம் ஆண்டினைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது.

பெருமாள் கோயிலின் முன் 2 நாற்கால் மண்டபம் உண்டு. இப்போது தரையுடன் சமமாக நிற்கும் இம்மண்டபங்கள் முன்பு (50 அல்லது 60 வருடம்) படியுடன் இருந்தன என்றும் படி ஏறித்தான் பெருமாள் திருவந்திக்காப்பு கண்டருள்வர் என்றும் கூறுவர். முதல் நாற்கால் மண்டபத்தில் சக்கரத்தாழ்வார் எழுந்தருளியுள்ளார். கிராம நன்மைக்காக இம்மண்டப விமானத்தில் சக்கரத்தாழ்வார் திருவப்



ஸ்ரீ பக்தோசித பெருமாள் கோயில் (*ஊர்க்கோயில் — சோளிங்கர் நகரில் உள்ளது*)

பட்டுள்ளதாகச் செவி வழிச் செய்தி கூறப்படுகிறது (உள் சுற்றில் பல சம்பவங்கள் அமைந்த பெரிய மண்டப ஒழுங்கு, திருப்பிய 'ப' வடிவில் ஒன்று உண்டு. அதன் எதிரே ஆண்டாள் வெள்ளிக்கிழமை மண்டபம், நாற்கால் மண்டபம் ஒன்று உள்ளது. அது சென்ற நூற்றாண்டில் நிறுவப்பட்டது

**சிற்பங்கள், ஓவியங்கள் :** தூண்களில் புடைச்சிற்பங்களே பெரும்பான்மை. கோபுரங்களில் அந்தச் சிற்பமே உண்டு. முன்னாளில் ரங்க மண்டபம் விமானத்தில் ஓவியம் இருந்திருக்க வேண்டும். ஆயின் இப்போது அண்மை காலத்துப் பூச்சு ஓவியத்தால் அது முற்றிலுமாக அழிக்கப்பட்டது.

**விமானங்கள் (பெரியமலை) :** மூலவர் அருள்மிகு யோக நரசிம்ம சுவாமி கருவறைக்குமேல் ஹேமகோடி விமானம் அமைந்துள்ளது. ஒரு கலசம் அமைந்துள்ளது. மூலவர் அருள்மிகு தாயார் சன்னதி கருவறைக்கு மேல் விமானம் அமைந்துள்ளது. ஒரு கலசம் அமைந்துள்ளது.

**சிறியமலை :** மூலவர் அருள்மிகு அரங்கநாதர், ஸ்ரீ இராமர் மற்றும் ஆஞ்சிநேயர் ஆகிய சன்னதிகளின் கருவறைக்கு மேல் மூன்று விமானங்கள் கலசத்துடன் அமைந்துள்ளன.

**ஊர்க்கோயில் :** மூலவர், அருள்மிகு ஆதிகேசவப் பெருமாள் சன்னதிக்கு மேல் கருவறை விமானம், ஒரு கலசத்துடன் அமைந்துள்ளது. உற்சவர் அருள்மிகு பக்தோசிதசுவாமி சன்னதிக்கு மேல் ஒரு விமானமும், மூன்று கலசமும் அமைந்துள்ளது. உற்சவர் சன்னதிக்கு எதிரே உள்ள கருடாழ்வார் உற்சவர் சிலைக்கு மேல் ஹேமகோடி விமானம் மூன்று கலசத்துடன் அமைந்துள்ளது.

**கல்வெட்டுகள் :** கல்வெட்டுகளில் அரசு படி எடுத்தவை போக எடுக்கவேண்டியவையும் சில உள. அவையாவன : (1 பரமபதவாசல் மண்டபத்தே விளங்கும் கல்வெட்டு (2) உக்கிரான அறை (3) தற்போதைய அலுவலகத்தில் மேற்குச் சுவரில் அமைந்த நீண்ட வெளியில் கல்வெட்டு (4) ரங்க மண்டபத்தில் வலப்புற வெளிச்சுவர் கல்வெட்டு (5) கங்கைகொண்டான் மண்டபத்து வேணுகோபால சுவாமியின் வெளிப்புறச்சுவர் கல்வெட்டு.

கல்வெட்டுக்களால் சுவாமி தொட்டாசார் தக்கான், அக்காரக்கனி எம்பெருமான்களுக்கு ஏற்படுத்திய கட்டளைகள், கிராமங்கள் பொன் முதலியன பற்றியும் ஆண்டாள் நாச்சியார், ஆழ்வார் ஆட்டை திருநட்சத்திரங்களுக்குப் படிவைத்த செய்தி பின்னிருந்த பெரியோர் கள் கோயில் நித்தியப்படி பூசை முதலியவற்றிற்கு பிறர் கொடுத்த தான சாஸனத்தை ஏற்றல் முதலிய செய்தி, பெருமாள் நாள்தோறும் 3 தளிகை கறியமுது உட்பட அமுது செய்து தொட்டாசார் சுவாமி திருமாளிகையில் ஸ்ரீ அழகிய சிங்கர் சன்னதியில் மாற்றி வைத்து திருவாராதனம் கண்டருளி 12 ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ததியாராதனம் செய்தல் குறித்த செய்தி சின்னமலையில் நுழைவு வாயில் பாறையில் பல்வேறு பங்கீட்டுச்செய்தி முதலியன பற்றியும் அறியலாம்.

## 12 கோயிலைப் பற்றி கூறும் நூல்கள் :

1. வடமொழியில் கடிகாசலப் புராணம்
2. தெலுங்கு மொழியில் தெனாலிராமகிருஷ்ணன் கடிகாசலப் புராணம்
3. ஆழ்வார் பாசுரங்கள்
4. பிள்ளை பெருமாள் ஐயங்காரின் நூற்றெட்டு திருப்பதி அந்தாதியில் ஒரு பாசுரம்
5. முத்துசாமி தீக்ஷிதரின் வடமொழிக் கீர்த்தனை ஒன்று நரசிங்கப் பெருமான் புகழ் பாடுகிறது.

**பூசைகளும், திருவிழாக்களும் :** பெரியமலை, சிறியமலை மற்றும் ஊர் திருக்கோயில் ஆகிய மூன்று சன்னதிகளிலும் நித்தியப்படி சிறப்புப் பூசை முதலிய அனைத்தும் நடைபெறுகின்றன. மலையில் இரு வேளை பூசை தினம் நடைபெறுகிறது. ஊர்க்கோயிலில் காலையில் நித்தியப்படி மாலையில் திருமால்வடை, இரவில் நித்தியப்படியுடன் அர்த்தஜாமம் என்னும் அரவணை என்று மூன்று பூசை உண்டு. சித்திரை மாதத்தில் பிரம்ம உற்சவம் மிகச் சிறப்புடன் நடைபெறுகிறது. எல்லா மாதங்களிலும் பல்வேறு சிறப்புத் திருவிழாக்கள் நடைபெற்று வருகின்றன.

பூசை முறை வைகானச ஆகமப்படி நடைபெறுகிறது. பூசகர்கள், வைகானசர்கள், இவர்களை பட்டாசார் என்பார்.

இக்கோயிலில் வழிவழியாக பெருமாளுக்குத் தொண்டு புரியும் தொட்டாசார் சுவாமி மரபினரே முதல் தீர்த்தகாரராக மந்திர புஷ்பம் முதலிய கைங்கர்யங்களையும் அத்யாபகம், வேதபாராயணம் ஆகிய தொண்டுகளையும் செய்து வருகின்றனர். திவ்ய பிரபந்தம் ஓதாத நாளே இல்லை. நாள்தோறும் இருவேளையும் ஆழ்வார் பாசுரங்கள் ஓதப்படுகின்றன. காலையில் ஆண்டாள் நாச்சியார் திருப்பாவை சேவை சாற்றுமுறை, மாலையில் ஆழ்வார் பாசுரங்கள் — விசேஷ நாட்களில் அவ்வவ் ஆழ்வார்களின் பாசுரங்கள் சேவை சாற்றுமுறை நடைபெறுகின்றன. திருக்கடிகைப் பெருமானின் உற்சவங்களில் சிலவற்றின் விசேடச் செய்திகள்.

**சித்திரை மாதம்** : சோளசிம்மபுரம் திருத்தலத்தில் நடைபெறும் உற்சவங்களில் முதன்மையானதும் சிறப்புடையதுமான விழா பிரம்மோற்சவம் எனப்படும் சித்திரை பெருவிழா ஆகும். உற்சவருக்கு 9 நாள் நடைபெறும் இவ்விழாவில் முதனாளான த்வஜஆரோஹணம் எனப்படும் கொடி ஏற்றத்திற்கும், இறுதி நாள் ஆன 'த்வஜ அவரோஹணம்' எனப்படும் கொடி இறக்குதலுக்கும் பெருமாள் திருமலைக்குச் சென்று வருவது தனிச்சிறப்புடையதாகும். மேலும் மலையினின்று ஊரில் பலிஸாதிக்க வேண்டி சக்கரத்தாழ்வார் 9 நாட்களும் இருவேளையும் இறங்கி ஏறுவது வேறெங்கும் காணமுடியாத காட்சியாகும்.

ஒன்பதாம் நாளில் தீர்த்தவாரி நடைபெறும் சித்ரா பௌர்ணமி நாளான அன்றுஉற்சவர் கோயிலினின்றுதக்கான்குளம் என்னும் பிரம்ம தீர்த்தத்திற்கு எழுந்தருளும் காட்சி கண்ணுடையார் கண்டு களிப்பதற்குரியது. களிப்பதற்கல்லாமல் கவலையெல்லாம் மறந்தொழியக் காண வேண்டிய காட்சியுமாகும். தீர்த்தவாரி மண்டபத்தில் திருமஞ்சனம் முதலிய நடந்தபின் தீர்த்தவாரி நடைபெறும். பெருமாளின் சக்கரத்தாழ்வார் பிரம்மதீர்த்தத்தில் இறங்க அவருடன் பெருந்திரளாக பக்த ஜனங்களும் இரவென்றும் பாராது குளிரென்றும் பொருட்படுத்தாது நீரில் இறங்கிப் புனித நீராடுவர். பின்னர் பெருமாள் எட்டி மண்டபம் எழுந்தருளி எட்டி அப்பம் அமுது செய்து திருமொழிச் சாற்றுமறை கண்டயருளியபின் தீர்த்தம் பிரசாதம் விநியோகிக்கப் படும். இங்கு 'எட்டி அப்பம்' அமுது செய்வது பற்றிய சிறப்புச் செய்தி இவ்வாறு :—

ஸ்தல ஆசார்ய புருஷராக சுவாமி தொட்டர்சாரியார் பல்லக்கில் இவ்வழியாக வந்தபோது பல்லக்கு தூக்கும் ஸ்ரீ பாதம் தாங்கிகளுக்கு சொல்லமுடியாத பசிதாகம் ஏற்பட்டு மிகவும் கஷ்டப்பட்டார்களாம்.

அவர்களின் துன்பம் கண்டு பொறுக்கமுடியாத தயாவானனான அந்த மஹார்யர் தம் திருவடிகளால் அந்த உயிர்கொல்லி மரமான எட்டி மரத்தைத் தொட்டுவிட்டு அம்மரத்தின் பழங்களைப் பறித்துண்ணுமாறு பல்லக்கு சுமப்பவர்களுக்கு பணித்தாராம், "பக்தியும் நம்பிக்கையும் கொண்ட அவர்கள் ஆசாரியரின் நியமனப்படி எட்டிப் பழங்களைப் பறித்துண்டு பசிதாகம் தீர்ந்தனர். உயிர்கொல்லிப் பழம் உயிருக்கு அமுதமாகத் தித்தித்தது, கண்டு வியப்படைந்து சுவாமி தொட்டா சார்யரை வணங்கி வழிபட்டுப் போற்றி பலவாறு புகழ்ந்துரைத்தனர்.

இவ்வரலாற்று நிகழ்ச்சியைப் பின்புள்ளாரும் அறியவேண்டி பக்தோசிதப் பெருமாள் சித்திரா பவுர்ணமி நாளில் எட்டி மண்டபம் எழுந்தருளுகிறான். திருமொழிச் சாற்றுமறை தீர்த்தம், எட்டி அப்பம் விநியோகமாகும்போது சுவாமி மஹார்யர் பரம்பரையினருக்கு பரிவட்ட ஸ்ரீ சடகோபன் முதலிய மரியாதை நடைபெறுவது வழக்கம்.

**வைகாசி :** நரசிம்ம ஜெயந்தியும், காஞ்சி கருடசேவை புறப்பாடும் வைகாசித் திருவிழாக்களில் தனிச் சிறப்புடைய குறிப்பிடத்தக்க திருநாள்களாகும்.

நரசிம்ம ஜெயந்தி : சுக்லபக்ஷ பவுர்ணமி அன்று உற்சவர் திருமலைக்கு எழுந்தருள்வார். சாயம் சந்த்யாகாரத்தில் நரசிம்ம புராணம் வாசிக்கப்படும். பின்னர் மூலவருக்கும் உற்சவருக்கும் அலங்கார திருமஞ்சனம் – சேவை சாற்றுமறை – அர்ச்சனை உற்சவம் முதலியன நிகழும். பின்னர் உற்சவர் ஊர்க்கோயிலுக்குத் திரும்புவார்.

காஞ்சி கருடசேவை கோபுர தரிசனம். காஞ்சிபுரத்தில் வைகாசி மாதம் கருடசேவை நடைபெறும் நாளில் கடிகாசலத்திற்கும் தக்கானுக்கு கருடசேவை உற்சவம் நடைபெறும். கலி காலத்தில் அர்ச்சாரூபியான [விக்ரக வடிவிலிருக்கும்] பெருமாள் தன் அன்பருக்காகத் தன் திருக்கோலத்தைக் காட்டியருளிய அற்புதமான ஐதிஹ்யத்தை நினைவூட்டவே காஞ்சி கருடசேவைக் காட்சியைக் கடிகையிலும் பெருமாள் நடத்திக் காட்டுகிறார்.

சுவாமி தொட்டாசார்யர் காஞ்சிபுரத்தில் நிகழும் தேவ பெருமானுடைய பிரம்மோற்சவத்திற்கு வருஷம் தவறாது செல்வது வழக்கம். ஒருமுறை உடல்நலக் குறைவால் சுவாமி காஞ்சிபுரம் செல்ல முடியவில்லை. கடிகைத் தக்கான் குளத்தில் புனித நீராடி,

காஞ்சி கருடசேவைக் காட்சியை 'இழந்தேனே' என்று தம்மையே வெறுத்து தேவப்பெருமானைக்குறித்து ஐந்து சுலோகங்களைக் கூறித் தம் நிலைக்கு வருந்தி நின்றார். அவரது பக்திச் சிறப்பினை உலகிற்கு உணர்த்த காஞ்சிபுரத்துப் பெருமான் தக்கான்குளக்கரையில் ஆசார்யஸார்வபௌமருக்கு கருட வாஹன சேவையை நிகழ்த்திக் காட்டினார். இது இவ்வூரில் நிகழ்ந்த சத்தியமான ஒரற்புதமாகும்.

இன்றும் காஞ்சிபுரத்தில் பிரம்மோற்சவ மூன்றாம் திருநாளில் தேவாதிராஜன் கருடாரூடராய் பவனி வரும்போது கோபுர வாசலில் சிறிது தாமதித்து கற்பூர ஆரத்திக் காண்கிறார். இது சோளிங்கபுரம் தொட்டாசாரியருக்குச் சேவை ஸாதிப்பதாக அங்குள்ளார் அனைவரும் கூறுவர். காஞ்சியில் வாழ்பவரும், அருகில் உள்ள கிராமங்களில் வாழ்பவரும் காஞ்சி கருடசேவையைக் காண்பதற்காக முதல் நாள் இரவே காஞ்சிபுரத்தில் குழுமிவிடுவர்.

இந்நிகழ்ச்சிக்குச் சான்றாகத் தக்கான் குளக்கரையில் வரதராஜர் கோயில் ஒன்று அமைந்துள்ளது. அதில் காஞ்சி தேவப் பெருமாள் கருடாரூடராக விளங்கும் காட்சியை இன்றும் காணலாம்.

பரமபக்தரான தொட்டாசார்யருக்குக் காஞ்சி வரதராஜப் பெருமாள் கருடவாகன சேவை சாதித்ததை நினைவூட்டுவதாக, இவ்வூரில் வைகாசி பிரம்மோற்சவ மூன்றாம் திருநாளன்று கடிகை எம்பெருமானும் விடியற்காலையில் கருட வாகன புறப்பாடு கண்டருளுகிறார். புறப்பாடு நடந்ததும் சுவாமி மஹாார்யருக்குத் திருப்பரிவட்டம், திருமாலை ஸ்ரீ சடகோபன் முதலியன சாதிக்கப் பெறும்.

**ஆடி :** ஆண்டாள் திருவாடிப்பூர உற்சவம் பத்து நாள் நடைபெறும். இன்றோ திருவாடிப்பூரம்! எமக்காகவன்றோ இப்பாருலகில் குன்றாத வைகுந்தவான் போகம் தன்னை இகழ்ந்து அங்கு ஆண்டாள் அவதரித்தாள்! என்று ஆசாரியர்கள் போற்றுவர். அம்முறையில் 10-ஆம் நாள் திருவாடிப்பூரத்தன்று காலை ஆண்டாள் பெருமாளுக்கு திருமஞ்சனம் நடைபெறும். மாலையில் திருக்கல்யாணம் நால் வீதி புறப்பாடு நடைபெறும். இதனை சுவாமி தொட்டாசார்யரின் திருத் தகப்பனார் பெரியப்பங்கார் சுவாமி நடத்துவதாக ஐதீகம்.

**ஆவணி :** திருப்பவித்ரோற்சவம் திருமலையில் ஏழுநாள் நடைபெறும். முதல் நாள் உற்சவர் ஊர்க்கோயில் நின்று புறப்பட்டுத் திருமலைக்கு எழுந்தருள்வார் மாலையில் அங்குரார்ப்பணம்

கோஷ்டி தொடக்கம் நிகழும். ஏழுநாளும் இருவேளையும் ஹோமம் நடைபெறும். இறுதிநாளான சுவாதியன்று பூர்ணா ஆஹுதி முடிந்து உற்சவர் மூலவர் சன்னதிக்கு எழுந்தருள்வார். சேர்த்தி சேவை திவ்வியபிரபந்த வேதபாராயண சாத்துமறை, தீர்த்த விநியோகம் நடைபெறும்.

**புரட்டாசி :** நவராத்திரி திருநாள் : தாயார் மலையினின்று ஊர்க்கோயிலிற்கு எழுந்தருளி ஏறக்குறைய இரண்டு மாத காலம் உற்சவருடன் கூடியிருப்பது ஒரு விசேஷம். அதற்கும் மேலாக நவராத்திரி ஒன்பது நாளும் பெருமாள் தாயார் ஆகிய இருவர்க்கும் அலங்கார திருமஞ்சனம், சகஸ்ரநாம அர்ச்சனை, கோயிலினுள் புறப்பாடு, மஞ்சசேவை முதலியன சிறத்த விசேஷங்களாகும்.

**ஐப்பசி :** மணவாள மாமுனிகள் உற்சவம் 10 நாள் நிகழும். திரு மூலத்திருநாளன்று காலையில் மாமுனிகள் பல்லக்கில் மங்களா சாஷனம் புறப்பாடு கண்டருள்வார். பின்னர் பெருமாள், தாயார், மாமுனிவர் ஆகியோருக்கு அலங்கார திருமஞ்சனம், திருப்பாவை கோஷ்டி நடைபெறும். மாலையில் பெருமாளுடன் மாமுனிகளுக்கு 4 வீதி புறப்பாடு. ஆஸ்தானத்தில் திருவாய்மொழி கோஷ்டி, உற்சவம் முடிந்ததும் மணவாள மாமுனிகள் கந்தபொடி உற்சவம் கண்டருள்வது தனிச்சிறப்புடையதொன்றாம்.

**கார்த்திகை :** திருக்கார்த்திகை தீபோற்சவம் ஆன பின் பெருமானுக்கு தைலக் காப்பு சமர்ப்பிக்கப்படும். இங்கு உற்சவருக்குத் தைலக் காப்பு என்பது விசேஷம். கார்த்திகை சுக்ல பவுர்ணமி முதல் மார்கழி சுக்லபக்ஷ ஏகாதசி வரை பெருமாள் தைலக்காப்பு சாத்திக் கொள்வதால் திருமஞ்சனம் உற்சவம் முதலியன கிடையாது. மலையில் மட்டும் திருமஞ்சனம் உற்சவம் முதலியன சிறப்பாக நிகழும்.

**மார்கழி :** அத்யயன உற்சவம் என்னும் பகல்பத்து இராப்பத்து திருநாள் 21 நாள் தொடர்ச்சியாக நடைபெறும். பகல் பத்து இறுதிநாளன்று பெருமாளுக்கு மோகினித் திருக்கோலம் மிக விசேஷம். இரவு இரண்டு மணியளவிற்கே முக்கோடி ஏகாதசி. வைகுண்ட ஏகாதசி என்னும் உற்சவம் தொடங்கிவிடும். திருப்பாவை கோஷ்டி ஆனபின் பெருமாள் புறப்பாடு கண்டருளி வைகுந்த நீள் வாசல் வந்து சேர்வார். அங்கு திருவாராதனம் பெரிய மந்த்ரபுஷ்பம் முதலியன விசேஷமாக நடைபெறும். முதல் தீர்த்தக்கார வேத விண்ணப்பம் தொடங்கி அவருடன் இரண்டாம் தீர்த்தகாரர் ஸ்மிருதி;

இதிஹாஸபுராணம் விண்ணப்பிக்க முதல் தீர்த்தகாரர் ஸ்ரீ பாஷ்யம் விண்ணப்பிக்க தீர்த்தகாரர் மரியாதை பெறுவர். பிறகு கருடசேவை புறப்பாடு நடக்கும். பின்னர் அர்த்த மண்டபத்தில் பெருமாள், ஆண்டாள், ஆழ்வார், ஆசாரியர்கள் ஆகிய அனைவர்க்கும் அலங்காரத் திருமஞ்சனம் நடைபெறும். கண்படைத்த பயன் அதனைக் காண்பதே எனலாம்.

மறுநாள் முக்கோடி துவாதசி : கண்ணனுக்குத் தீர்த்தவாரி புறப்பாடு. விடியற்காலை தனுர் மாதம். திருப்பாவை சாற்றுமுறை முடிந்ததும் கண்ணணெம் பெருமான் மட்டும் தீர்த்தவாரி கண்டருள பிரம்ம தீர்த்தம் எழுந்தருள்வார். அலங்காரத் திருமஞ்சனமானதும் குளத்தில் கண்ணன் பக்தபரிஜனங்களுடன் தீர்த்தவாரி கண்டருள்வது அதியற்புதக் காட்சியாம். திருப்பாவை கோஷ்டி தீர்த்த விநியோகம் ஆனதும் கண்ணணெம் பெருமான் ஊர்க்கோயில் திரும்புவார்.

இராப்பத்து பத்தாம் திருநாள் : ஆழ்வார் திருவடி தொழல் காலை ஆழ்வாருக்கும் பெருமாளுக்கும் அலங்கார திருமஞ்சனம் மாலையில் பெருமாளுக்கு 4 வீதி புறப்பாடு கொட்டாய் உற்சவம் எனப்படும் கொட்டகையில் பத்திஉலா கண்டருளியபின் நம்மாழ்வார் உற்சவம், இது கந்தாடை பெரியப்பங்கார் சுவாமி உபய கட்டளையாம்.

மார்கழி ஆண்டாள் நீராட்ட உற்சவம்: மார்கழி இறுதியில் 3 நாளாக நீராட்ட உற்சவம் நடைபெறும். முதலிரண்டு நாட்களிலும் தனுர்மாத பூசை முடிந்தவுடன் ஆண்டாளுக்கு வீதி புறப்பாடு நடைபெறும். மூன்றாம் நாளான போகிப் பண்டிகையன்று மாலை ஆண்டாள் திருவிளக்குகள் ஏற்றிச் சகுனம் பார்க்கும் உற்சவம் இந்த ஊரில் மட்டும் நிகழும் சிறப்பான ஒன்றாகும். முன்னாளில் சகுனம் பார்க்கும் உற்சவம் ஊரிலுள்ள திருக்குளத்தில் நடைபெற்று வந்தது.

**தை மாதம்:** மகர சங்கராந்தி ஆன தைப்பொங்கல் திருநாளில் காலையில் பெருமாள் ஆண்டாளுக்கு அலங்காரத் திருமஞ்சனம் நடைபெறும். மாலையில் ஆண்டாள் திருக்கல்யாணம் நடைபெறும். போகிப்பண்டிகையன்றுதான் எல்லா ஊர்களிலும் ஆண்டாள் திருக் கல்யாணம் நடைபெறும். ஆனால் இவ்வூரில் மட்டும் தைப்பொங்கல் திருநாளில் ஆண்டாளுக்கும் பெருமாளுக்கும் திருக்கல்யாணம் நடைபெறுவது விஷேசம். இதுவும் கந்தாடை பெரியப்பங்கார் உபயமாகும். இவ்வாறு திருஆடிப்பூரத் திருக்கல்யாணம், சங்கராந்தித் திருக் கல்யாணம், ஆழ்வார் திருவடி தொழல் ஆகிய மூன்று நாட்களிலும் தொட்டாச்சார் வம்சத்தவர்க்கு – முதல் தீர்த்தகாரர்களுக்கு – இரட்டை மரியாதை நடைபெறும்.

5

பொங்கல் கழிந்த மறுநாள் கனுப்பாரிவேட்டை உற்சவம். இதனை மேற்குத்திக்குப் பார்வேட்டை என்றும் கூறுவர். விடியற் காலையில் பெருமாள் தனித்துத் தலைப்பாகை, குற்றுவாள், கேடய அலங்காரத்துடன் கிளிக்கூண்டில் புறப்பாடு கண்டருளி மேயத்திசைக் கிராமங்களுக்குச் செல்வார். திரும்பும்போது எறும்பி எனும் அசுவரே வந்தபுரம் கிராம மண்டபத்தில் திருவாராதனம், திருப்பாவை நடை பெறும். பின்னர் திருப்பாவை சாற்றுமறை தீர்த்த விநியோகம் நிகழும்.

எறும்பியில் நடைபெறும் திருப்பாவை சாற்றுமறைக்குத் தனிப் பெருமை உண்டு. அதன் வரலாறு :—

மணவாள மாமுனிகள் தம் சீடரான தேவராஜ குரு எனும் எறும்பி அப்பாவின் பிரார்த்தனைக்கு இணங்கி எறும்பி ஸ்ரீகிராமத் தில் ஒரு மாத காலமாகத் தங்கி திருப்பாவை உபந்யாஸம் செய்தாராம். அவரோ ஸ்ரீ ரங்கம் நம்பெருமானின் பரமபக்தர். அவரை விட்டு ஒரு மாதம் பிரிதல் என்பது கடினமாக இருந்ததாம், ஆனால் திருக்கடிகைத் தக்கானின் திவ்ய மங்களத் திருமேனி அவருக்கு மிக மிக ஆறுதலும் மகிழ்ச்சியும் தந்ததால் அவரிடத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டு அவரை மிக்வும் போற்றிப் புகழ்ந்து வட்திருவரங்கநாதன் என்று நாமகரணம் செய்தார். மேலும் எறும்பிகிராமத்தை வடதிருவரங்கம் என்றும் அங்கிருந்த ஒரு நீர்நிலையை வடதிருக்காவேரி என்றும் நாமமிட்டு அங்கு வாழ்ந்த தம் சீடர்களை அறிய மணவாளதாசர் என்று அபிமானித்தருளினாராம். ஸ்ரீமன் மணவாள மாமுனிகள் திரு உள்ளத்திற்கு உகப்பாக இன்றும் தக்கான் எறும்பியில் திருப்பாவை சாற்றுமறையைக் கண்டருள்கிறார்.

கிரிபிரதட்சினம் எனும் மலைச் சுற்றி வலம் வருதல்; தை மாதம் மூன்றாம் நாள் பெருமாள் நாச்சிமாருடன் கிளிக் கூண்டில் புறப் பட்டு கிரிபிரதட்சினம் கண்டருள்வார். ஏகாதசி மண்டபத்தில் சேஷ வாகனஉற்சவம் நடைபெறுவது விசேஷம். முற்காலத்தில் சப்தரிஷிகள் தை மாதத்தில் பெருமாளுக்கு பிரம்மோற்சவம் நடத்தியதை நினைவு ஊட்டும் உற்சவம் இது.

**மாசி மாதம் :** இத்தலத்து ஆசார்யரான சுவாமி தொட்டயா- சார்யரின் 10 நாள் உற்சவம் சிறப்புற நிகழும். விழா இறுதி நாளான மாசி உத்திராடத்தன்று சுவாமி தொட்டாசார் திருமலைக்கு எழுந்தருளி நரசிங்கப் பெருமாள், தாயாரை மங்களாசாஸனம் செய்து திரும்பி

ஊர்க்கோயிலில் பெருமாள், ஆண்டாள் ஆழ்வார், ஆசாரியர்கள், கேசவப் பெருமாள் ஆகியவர்களை மங்களாசாஸனம் செய்வார். பிறகு பெருமாளுக்கும் சுவாமி தொட்டயாசாருக்கும் அலங்காரத் திருமஞ்சனம் நடைபெறும். மாலையில் பெருமாள் ஆசார்யருக்கு நான்கு வீதி புறப்பாடு சேவை சாற்றுமறை தீர்த்த விநியோக கோஷ்டி மிகச் சிறப்பாக நடைபெறும். வெளியூரிலிருந்து சுவாமி மஹார்யரின் சீடர் களும் அன்பர்களும் பேரெண்ணிக்கையில் வந்து உற்சவத்தில் கலந்து கொண்டு ஆசி பெற்றுத்திரும்புவர்.

மணவாள மாமுனிகள் திருவத்தியயனம் : மாசி உத்திராடத் தன்றோ, மறுநாளோ கும்பகருஷ்ண, துவாதசி அன்று தான் மாமுனிகள் மண்ணுலகை விட்டு விண்ணுலகுக்கேகிய நாள். ஸ்ரீரங்கம் கோயில் நம்பெருமானுக்கு ஈடு காலட்சேபம் சாதித்து மாமுனிகள் ஆசார்யரானபடியால் சீடனாகிய நம்பெருமான் மாமுனிகள் பரம பதித்த நாளை நினைவு கூர்கிறார். அதுபோல் இங்கும் திருப்பாவை காலட்சேபம் சாதித்ததன் வாயிலாக தக்கானுக்கு ஆசார்யனாகினார் மாமுனிகள். தம் சீடர்களான எறும்பி அப்பன், கந்தாடை தொட்டயங்காரப்பை முதலியவர்கள் காரணமாக இத்தலத்திலும் மாமுனிகள் நினைவு நாள் அனுஷ்டிக்கப்படுகிறது. இவ்வாறு மாமுனிகள் நினைவுநாள் ஒரு சில திவ்ய தேசங்களில் மட்டுமே அனுசரிக்கப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

**பங்குனி மாதம் :** பங்குனி உத்திரத் திருக்கல்யாணம், உற்சவர், ஊர் திருக்கோயிலில் இருந்து மலைக்கு எழுந்தருளி தாயார் உற்சவருடன் அலங்கார திருமஞ்சனம், ஊர்வல உற்சவம் திருக்கல்யாணம் முதலியன கண்டருள்வார். கத்யத்ரய கோஷ்டி சிறப்பாக நடைபெறும். இரவில் சேர்த்தி சேவை. மறுநாட்காலை விசுவரூபம் ஆன பின் உற்சவர் திருமலையினின்று ஊர்க் கோயிலுக்கு திரும்பி எழுந்தருள்வார்.

**விசேச உற்சவங்கள் விபரம் :**

1 சித்திரை மாதம் : 1 சித்திரை பெருந்திருவிழா.
பத்து நாட்கள் நடைபெறும்.
தங்க கருட சேவை
திருத்தேர்
குதிரை வாகனம் வேடுபறி ஏசல்
2 இராமாநுஜர் விழா 10 நாட்கள்

2 வைகாசி மாதம் : 1 நரசிம்ம ஜெயந்தி

2 வசந்த உற்சவம்

3 வைகாசி கருட சேவை தொட்டாசார் சேவை.

4 நம்மாழ்வார் விழா 10 நாட்கள்

3 ஆனி மாதம் : 1 கோடைத் திருநாள் (3 நாட்கள்)

2 பரதத்துவ நிர்ணயம் கருட வாகன சேவை.

3 ஆதிகேசவப் பெருமாளுக்கு வருஷ திருநட்சத்திரமான திருவோண விழா.

4 ஆடி மாதம் : 1 ஆண்டாள் திருவாடிப்பூர விழா 10 நாட்கள்.

திருவாடிப்பூரத்தன்று திருக்கல்யாண புறப்பாடு.

2 ஆடி பௌர்ணமி கஜேந்திர மோட்சம் கருடசேவை.

3 ஜேஷ்டாபிசேகம், கவசம் களைந்து திரு அபிஷேகம் நடந்து பின் கவசம் அணிதல்.

5 ஆவணி மாதம் : 1 திருப்பவித்ரோற்சவம் – ஏழு நாட்கள் பெரியமலையில் நடைபெறும்.

2 ஸ்ரீ ஜெயந்தி – மறுநாள் உரியடி கண்ணனுக்கும் பெருமாளுக்கும் நான்கு வீதி புறப்பாடு.

6 புரட்டாசி மாதம் : 1 நவராத்திரி உற்சவம் – 10 நாள், பெருமாள், தாயார் இருவருக்கும்.

2 விஜயதசமி, குதிரை வாகனம்.

7 ஐப்பசி மாதம் : 1 டோலோற்சவம் எனும் ஊஞ்சல் திருவிழா ஐந்து நாள் நடைபெறும்.

2 மணவாள மாமுனிகள் 10 நாள் உற்சவம்

3 கடைவெள்ளிக்கிழமை

4 தீபாவளி ஆஸ்தானம்

5 வனபோஜனம்.

8 கார்த்திகை மாதம் : 1 பெரியமலையில் ஒவ்வொரு வெள்ளிக் கிழமையிலும் சிறியமலையில் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையிலும் உற்சவ புறப்பாடு. திருமஞ்சனம் முதலிய விசேஷம்.

2 கார்த்திகை தீபத் திருவிழா–சொக்கப் பனை கொளுத்துதல்.

3 திருமங்கையாழ்வார் 10 நாள் உற்சவம்.

4 அனுமத் ஜெயந்தி சின்னமலையில் ஸ்ரீ ஆஞ்சநேயருக்கு விசேஷ உற்சவம்.

9 மார்கழி மாதம் : 1 பகல் பத்து திருநாள்

2 வைகுண்ட ஏகாதசி.

3 முக்கோடி துவாதசி தீர்த்தவாரி உற்சவம்.

4 இராப்பத்து திருநாள். இறுதி நாளில் நம்மாழ்வார் பரமபதம் புகும் திருவடித் தொழும் விழா.

5 ஆண்டாள் மார்கழி நீராட்டம் 3 நாள்.

6 ஜனவரி முதல் தேதி திருப்படித் திருவிழா.

10 தை மாதம் :
1 பொங்கல் - சங்கராந்தி ஆண்டாள் திருக்கல்யாணம்.
2 கனுப்பாரி (பரி) வேட்டை.
3 கிரி பிரதக்ஷிணம்
4 தைப்பூசம்.
5 தை அமாவாசை தொடங்கி தெப்பல் உற்சவம் 3 நாள்.

11 மாசி மாதம் :
1 தவன உற்சவம் – 3 நாள்.
2 மாசி உத்திராடத் திருநாள் 10 நாள். (ஸ்வாமி தொட்டாசார் – அவதார உற்சவம்)
3 மாசி மகம் – தெப்பல் உற்சவம் 3 நாள்,

12 பங்குனி மாதம் :
1 யுகாதி (அ) தெலுங்கு வருடப் பிறப்பு உற்சவம். பஞ்சாங்க சிரவணம்.
2 பெரியமலையில் பங்குனி உத்திரத் திருக்கல்யாணம்.
3 பல்லவ உற்சவம் (நின்று போய் உள்ளது).

**கோயிலின் சமயம் :** இது வைணவ சமயக் கோயில் ஆகும். ஆயினும் பிற சமயத்தவரும் பெருமாளிடம் பக்தி கொள்ளும் முறையில் அவர்களையும் ஈர்க்கிறது. உற்சவம் காரணமாக அனைத்து இன சமய மக்களும் பல்வேறு வகையில் பயனடைகின்றனர்.

மன அமைதிக்கு இருப்பிடமாகத் தோற்றுவாயாக இருப்பதால் நாடோறும் நன்மை எய்தற் பொருட்டு இந்த நகரை நாடும் மக்கள், ஆண்கள், பெண்கள், சிறுவர், சிறுமியர், கிழவர், கிழவிகள் என்று எண்ணிலவர் ஆவர்.

**நிர்வாகம் :** இக்கோயில் இந்து சமய அறநிலையத்துறையின் கீழ் வருகிறது. 1926–க்குப் பின் அறங்காவலர்கள் நியமிக்கப்பட்டு நிர்வகிக்கப்பட்டு வருகிறது. ஸ்கீம் ஓ. ஏ. 411/1942–ன்படி நிர்வாகம் நடைபெற்று வருகிறது. 1936 முதல் நிர்வாக அதிகாரியால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது.

# திருக்கடிகைப் புராணம்

வேதவியாசர் என்னும் மாமுனிவர் உலகம் உய்ந்திடக் கோரி, நான்மறைப் பொருளை அனைவரும் அறிந்து உய்ந்திடுதல் அரிது என்று அறிந்துணர்ந்து தம் தவ ஆற்றலால் 18 புராணங்களை இயற்றினார். அவற்றில் பிரம்மகைவர்த்த புராணம் என்பதும் ஒன்று. அப்புராணத்தில் திருக்கடிகைத் தலப் பெருமையை ஸ்ரீ கடிகாசல க்ஷேத்ர மாஹாத்மியம் கூறுகிறது.

இந் நூல் பிருகு முனிவருக்கும் பராசர முனிவருக்கும் இடையே நடந்த உரையாடலாக 22 அத்தியாயங்களில் அமைந்துள்ளது. நான்முகன்ஸநகர் முதலிய பிரம்மரிஷிகளின் வேண்டுகோளுக்கிணங்கித் திருக்கடிகைத் தலப் பெருமையினைக் கூறுவதாக அமைந்துள்ளது. திருவேங்கிடமலையின் பெருமையை எடுத்துரைக்கக் கேட்ட அந்த ரிஷிகள், இடையே கடிகாசலப் பெருமையைக் கேட்டதால், அதனை முற்றிலுமாக அறிய வேண்டி நான்முகனை நோக்கி அடிபணிந்து கடிகாசல க்ஷேத்திரத்தின் பெருமையை முழுமையாகஎடுத்துக்கூறுமாறு வேண்டினர்.

பிரமனும் அவ்வாறே கூறும்போது இந்திரத்யும்னன் வரலாறு திருக்கடிகையின் பெருமை நரசிங்கப் பெருமான் பெருமை முதலிய வற்றை விரிவாகக் கூறினார். முதலினின்று ஏழு அத்தியாயங்களில் இந்திரத்யும்னன் என்னும் அரசன் விஷ்ணு பக்தனாய் பிரம்மதேஜன் என்னும் பிரம்மத் தன்மையை அடைந்து மோக்ஷம் பெற வேண்டிக் கடிகை மலைக்கு வருதல், தேவேந்திரனின் வேண்டுகோளுக்கு இணங்கிக் காலகேயர் என்ற அசுரக்கூட்டத்தலைவனான கும்போதரன் முதலியவர்களுடன் அனுமன் துணைபெற்றுப் போர் புரிந்து அவர்களை வெல்லுதல் ஆகிய செய்திகளைக் கூறி எட்டாவது அத்தியாயம் முதல் அவ்வரசன் நரசிம்மபுரியைத் தலைநகராகக்கொண்டு கடிகாசல க்ஷேத்திரத்தினைச் சிலகாலம் அரசாண்டு பின் வசிஷ்டமுனிவர் அனுமதி கொண்டு பிரம்ம தீர்த்தம் முதலிய புனித நீர்நிலைகளில் நீராடி நரசிங்கப் பெருமானைத் தொழ முற்படுதல் முதலிய செய்தி களைக்கூறி பதினோராவது அத்தியாயம் முதல் பிரம்மத் தன்மையை அடைய விரும்பிய விசுவாமித்திரர் தவம் மேற்கொண்ட செய்தி, வாமதேவர், யோக ஆஞ்சநேயரிடம் இருந்து அமுதம் பெற்ற செய்தி, விப்பிரசேகரர், நரசிங்கனைத் தொழுது தன் முன்னோரை உயர்கதிப் பெறச் செய்து, கடிகை மலையை வலம் வரும் முறை, அங்குள்ள புண்யதீர்த்தங்கள் அவற்றின் பெருமை அவற்றில் நீராடினோர்

அடையும் பேறு முதலிய செய்திகளைக் கூறி 20 அத்தியாய முதல் அரசன் வசிஷ்ட முனிவர் கூறியபடிப் புனிதநீர்நிலைகளில்நீராடி மந்திர உபதேசம் பெற்று ஸ்ரீ நரசிங்கப் பெருமானைத் திருவடி தொழுது பேறுபெற்று மோட்சம் அடைந்த செய்தி நரசிங்கப் பெருமான் கடிகையில் தோன்றிய காரணம் அவனைப் பூசை செய்வோர் ஆகிய செய்திகூறி முடிகிறது,

## ஸ்ரீ கடிகாசல மாஹாத்மியம்

கலியுகத்தின் தொடக்கத்தில் பிசாசு பேய் போன்றவற்றால் மக்களுக்குப் பெருந்துன்பம் உண்டாயிற்று. அத்துன்பத்தைத் துடைக்க விரும்பிய பிரமன் கடிகாசல க்ஷேத்திரத்தில் தன்பெயரில் அமைந்த தீர்த்தக் கரையில் நரசிங்கப் பெருமானைக் குறித்து கடுந்தவம் செய்தான். லக்ஷ்மிநரசிங்கப் பெருமான் அவன்முன் தோன்றி வேண்டியது யாதென வினவினார்.

"பிரம்ம பட்டத்தை அடைய விரும்பித் தவம் புரியும் அனுமனை அத்தவத்தினின்று தடுக்க வேண்டும். உலகைப் பிசாசு, பேய், நோய் நொடி முதலியவற்றினின்று பாதுகாக்க வேண்டும்" என்று பிரமன் வரம் வேண்டினான். அதற்கு முழு முதற் கடவுளான நாராயணன் யாதொரு கவலையுமில்லாமல் படைப்பு தொழிலை நடத்தி வருமாறு பிரமனுக்குக் கூறியருளி, அனுமனுக்குத் தன்னுடன் மலைக்குன்றில் வசிக்குமாறும் தம்மை நாடி வரும் பக்தர்களுக்கு வேண்டிய வரங்களை அளிக்குமாறும் கூறித் தமக்கிணையான பெருமையைத் தந்து கடிகைத் தடங்குன்றின்மீது அஞ்சனாபுத்திரனை நித்தியவாசம் செய்யக் கட்டளையிட்டார். அதுமுதல் நரசிங்கப் பெருமாளை நாடிவரும் பக்தர்கள் ஆஞ்சநேயரிடமிருந்தே அனைத்து நன்மைகளும் பெறலாயினர். கடிகை மலையில் நரசிங்கனை முன்னிட்டு அனுமனை ஆராதிப்பவர் சேவை செய்பவர் இறைத் தொண்டு புரிபவர் அனைவரும் அவன் அருளால் எண்ணிலாப் பேரின்பம் எய்தி இமையவரொடும் கூடுவர்.

**இந்திரத்யும்னன் கயிலை அடைதல் :**

திரேதாயுகத்தில் பாரத தேசத்தில் வடமதுரையைத் தலை நகரமாகக் கொண்டு இந்திரத்யும்னன் என்ற ஒரு அரசன் ஆண்டு வந்தான். பிறந்தபோதே தோள்களில் சங்கு சக்கரப் பொறியுடன் விஷ்ணு பக்தியுடன் பிறந்த அவன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக விஷ்ணு பக்திச் செல்வத்துடன் வளர்ந்து வந்தான்.

தக்க பருவத்தில் திருமகள் போன்ற ஒருத்தியை திருமணம் புரிந்து நீதிநெறி தவறாது நாட்டை ஆண்டு வந்தான். அவன் மனைவியும் அவனைப் போன்றே பரமவிஷ்ணு பக்தையாக வாழ்ந்து வந்தாள். அவர்களுக்கு தக்க பருவத்தில் ஒரு மகனும் பிறந்தான். இவ்வாறு வைணவத்திருவுடன் பொலியும் இந்திரத்யும்னன் எப்போதும் திருமாலடிபரவி அவன் திருஎட்டெழுத்தும் ஓதுபவனாய் மறந்தும் புறந்தொழாது அரச முறை வழுவாது ஆண்டு வந்தான்.

ஒரு நாள் வேட்டையாடத் தன் பரிவாரங்கள் புடை சூழ 'வாயு ஜங்கமம்' என்ற குதிரையின் மீதேறிக் காட்டிற்குப் புறப்பட்டான். ஒரு மானைக் கண்டு அதனை அம்பெய்து கொல்ல அதனைப் பின் தொடர்ந்து சென்ற அரசன் தன்பரிவாரத்தினின்று தனித்தவனானான். அம்மானும் அவன் கையிலகப்படாமல் தப்பிச் சென்று தன் இனமான கூட்டத்தில் சென்று சேர்ந்து கொண்டது. மான் கூட்டம் வில்லேந்திய அரசனைக் கண்டு அஞ்சி மேய்ந்த புல்லும் கடைவாய் வழிசோர மயங்கி எழுது சித்திரம் போல் நின்றது. அதில் ஒரு மான் மனிதக் குரலில் தங்களைக் கொல்ல வேண்டாமென்றும், கருணை புரியுமாறும் வேண்டியது. அந்நிலையைக் கண்ட அரசன் மனத்தில் நாட்டு மக்களைப் போன்றே காட்டு விலங்குகளும் காக்கப்பட வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. அவன் தன் செயலுக்கு மிகவும் வருந்தினான். வேட்டையாடுதலைத் தவிர்த்துத் தன் தலைநகரம் திரும்பினான். அவனுக்கு க்ஷத்திரியர்க்குரிய ராஜஸ குணம் போய் ஸாத்வீக குணம் தலையெடுத்தது. இந்திரத்யும்னன் தன் மகனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு தானும் தன் மனைவியுமாக ஸ்ரீ ஜெகந்நாத க்ஷேத்திரத்திற்குச் சென்று மோக்ஷம் வேண்டித் தவம் புரிந்து வந்தான்.

ஒரு நாள் ஹரிநாமத்தைக் கூறுவதற்கு மாறாக ஹரநாமத்தை வாய் குழறிக் கூறிவிட்டான். அன்றிரவு கனவில் அவன் கயிலை மலையில் சிவபார்வதி முன் தான் இருப்பதையும் சுற்றிலும் பிரமத கணங்கள் சூழ இருப்பதையும் கண்ட அவன் வியப்படைந்தான். சிவன் அவனைத் தன் நாமோச்சாரணம் செய்த பயனாகத் தன் அடியவன் ஆனதைக் கூறி அன்புடன் வரவேற்கக் கண்ட இந்திரத்யும்னன் மேலும் வியப்படைந்தான். எப்போதும் ஹரி நாம உச்சாரணம் செய்யும் பரமவிஷ்ணு பக்தனான தான் சிவலோகத்துக்கு வந்த வரலாறு கேட்டான். எந்த ஒரு ஜீவனும் எதனை மிகுதியாகப் பகை பாராட்டுகிறதோ அப்பகையாகவே அது மாறிவிடும் என்றெடுத்துக் கூறித் தானும் நாராயணனும் ஒன்றெனக் கூறி அவன் தன்னிடம்

வந்ததற்கு வேண்டிய வரம் வேண்டுமாறு சிவன் கூறினான். அது கேட்ட அரசன் தனக்கும் பிரம்மத்தன்மை வேண்டும் என்றும், மோக்ஷம் வேண்டும் என்றும் அவற்றைத் தருமாறு பரமசிவனிடம் வரம் வேண்டினான்.

பவானிபதி 'மோக்ஷ பிரதன், நாராயணன் ஒருவனே' தன்னால் மோக்ஷமளிக்க இயலாது எனக்கூறி வேறுவரம் வேண்டுமாறு கூறினான்; அரசனும் நாரயணனை அடைந்து பிரம்மதேசசையும், மோக்ஷத்தையும் பெறும் வழிகாட்டுமாறு வேண்டவும், சங்கரன் அதற்கு அகமிக மகிழ்ந்து இமயத்தின் தெற்கு பகுதியில் தொலை தூரத்தில் நரசிம்மபுரம் என்னும் க்ஷேத்திரம் இருக்கிறது. ஸப்தரிஷி களுக்கும், பிரகல்லாதனுக்கும் ஒரு கடிகைப் பொழுதில் அருள் புரிந்தான் நாராயணன் நரசிங்க ரூபத்தில்; கடிகை மலையில் திருக்கோயில் கொண்டுள்ளான். மிக்காற் வேதவிமலர் விழுங்கும் அக்காரக் கனியாக வீற்றிருக்கும் அவனைக் குறித்துத் தவம் செய்தால் அவன் போக மோக்ஷம் ஆகிய அனைத்தையும் தந்தருள்வான்" என வீட்டுப்பேறு அடைய வழி கூறினான்.

**அரசன் தன் மனைவியுடன் திருக்கடிகை நோக்கி புறப்படுதல்:**

கனவிலிருந்து விழித்தெழுந்த அரசன் தான் கண்ட கனவினை எண்ணி எண்ணி வியப்புற்றான். சிறிதும் தாமதியாமல் தன் மனைவி யுடன் திருக்கடிகை நோக்கிப் புறப்பட்டான். இமயமலைப் பகுதியை கடந்து செல்லும்போது தெற்குத் திசையிலிருந்து மிக்க மகிழ்ச்சி யுடையவர்களாய் எளிதில் பறந்து வருகிறவர்களாய் வான்வழிவரும் முனிவர்களைக் கண்டான். வாலகில்யர் என்னும் அம்முனிவர்களை வணங்கினான். அவர்கள் எந்த தெய்வத்தை வணங்கி மிக்க மகிழ்ச்சி யுடன் வருகின்றனர், என்று வினவினான்.

''இமயமலையினின்று தெற்குத் திசையில் 9000 யோஜனைத் தொலைவில் புண்ணியவாளர் புகழ்ந்தேத்தும் 'பயோஷ்னி' என்னும் 'வேகவதி, என்றும் கூறப்படும் ஆற்றின் வடக்கில் தென்மேற்குத் திசையில் மலைகளுக்கெல்லாம் திலகமாய் கடிகாசலம் என்னும் மலை விளங்குகிறது. அம்மலை உச்சியில் பிரகலாதனுக்கும் பிறமுனிவர்க்கும் கடிகைப் பொழுதில் இறங்கி அருள்புரிந்த பரமன் 'யோக நரசிங்க ரூபியாய்' வீற்றிருக்கிறார். அனுமத் தீர்த்தத்தில் நீராடி அப் பெருமாளைக் கண்டு தூய மனத்தராய் அடித்தொழுது மகிழ்ச்சியுடன் திரும்புவதாக வாலகில்ய முனிவர்கள் மறுமொழி புகன்றனர். அப்பெருமானைத் தொழவே தான் தன் மனைவியுடன் புறப்பட்டதாகக்

கூறிய அரசனுக்கு; கங்கையாறு, ஸ்ரீசைலம், திருவேங்கட மலை முதலியவற்றைக் கடந்து சென்று கடிகைமலையை அடைய வேண்டும் என்று வழிகூறிப் போயினர் வாலகின்ய முனிவர்கள்.

அம்முனிவர்களின் ஆசிபெற்று மன்னன் தன் மனைவியுடன் கங்கையாறு கடந்து ஸ்ரீ சைல மலையைச் சென்றடைந்தான். அங்கு வீற்றிருக்கும் ஜ்வாலா நரசிம்மனை வணங்கி வழிபட்டுத் திருவேங்கட மலையைச் சென்று கிட்டினான். கபில தீர்த்தத்தில் நீராடித் தூய மனத்தனனாய் திருவேங்கடமலையிலேறி ஸ்வாமி புஷ்கரணியை அடைந்து நீராடினான். முதலில் வராஹப் பெருமானை வணங்கிப் பின் செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருவேங்கடநாதனை வணங்கி வழிபட்டான். விண்ணோர் மண்ணோர்க்குக் கண்ணாகி நிற்கும் அவ்வெம்பெருமானை மூன்று நாள் அங்குத் தங்கி வழிப்பட்டான். அவனருள் கொண்டு புறப்பட்ட அரசன் திருமலையின் தெற்குத் திசை வழியாக இறங்கி பொன் முகலி எனும் "ஸ்வர்ணமுகரி" ஆற்றினை அடைந்தான். வடதிசை நோக்கி ஓடும் அதில் நீராடி தன் கடமைகளை செய்த அவன் அதன் வடகிழக்கில் பெரியதொரு ஆலமரத்தையும் இரண்டு அரக்கர்கள் அதன் கிளைகளைப் பற்றித் தொங்கிக் கொண்டிருப்பதையும் கண்டான். அவர்களும் பரம வைஷ்ணவனான இந்திரத்யும்ன மன்னனைப் பார்த்தனர். அவ்வளவில் அவ்விருவருள் ஒருவன் அச்சம் தரும் அரக்க வடிவினை ஒழித்து ஒளிவடிவுடன் வைஷ்ணவன் கோலத்துடன் விண்ணிலேறி மறையக் கண்ட அரசன் வியப்பெய்தி நின்றான்.

"உலகில் நரசிங்கப் பெருமான் அருளே அருள். நரசிம்ம தீர்த்தத்தின் ஒரு துளி நீரால் அரக்கன் மோக்ஷம் அடைந்தான்" என வானில் ஒரு குரல் ஒலிக்கக் கேட்டான். அரசன் தன் அருகில் நின்ற தேவ கன்னிகைகள் சிலரை அதுகுறித்து வினவினான். அவரும் வான மகளிர் கடிகாசலத்தில் சிலாபுஷ்கரணியில் நீராடி நரசிங்கனை வணங்கித் தம் உலகம் திரும்பும்போது, அவர்களுள் ஒருத்தியான ஊர்வசியின் தலைக் கூந்தலினின்று தெரித்த நீர்த்துளி பட்டதால் அரக்கன் சாப விமோசனம் பெற்று விஷ்ணுலோகம் சென்றான்" எனக் கூறினர். அரசன் தனக்கு அவ்வரக்கனின் வரலாறு கூறுமாறு தெய்வ கன்னியரை வணங்கி வேண்டினான்.

**அரக்க வரலாறும் தீர்த்த பெருமையும் :**

தீர்த்தாசலம் என்ற இடத்தில் சோமவிரதன் என்பான் தன் மனைவி அனசூயை என்பாளுடன் மகப்பேற்றிற்காக கடுந்தவம் செய்து வந்தான். அங்கிருந்து புஷ்கரக்ஷேத்திரம் சென்றும் மீண்டும் அங்கிருந்து

தேனுசைலம் சென்று தவம் செய்து வந்தான். தவமேற்கொண்ட அவன் ஒருநாள் மாலை நேரத்தில் பாறைப் பகுதியொன்றில் அரக்கன் ஒருவன் தன் மனைவியுடன் பலவாறு கலந்து மகிழ்வெய்தனைக் கண்டான். தன் பாவம் நீங்கக் கதிரவனை நோக்கி இருந்து பிராயச் சித்தம் செய்து கொண்டான். ஆயினும் அடங்காவெறியுடன் தன் மனைவியுடன் கூடி மகிழ்ந்தான். தாமஸகுணம் மிக்க அத்தம்பதிக்கு இரட்டைப் பிள்ளைகள் பிறந்தனர். பிறந்த பொழுதே அரக்க வடிவத்துடன் பிறந்த அவ்விருவரும் கொடுமையில் வளர்ந்தவராய் சில நாளில் தம் பெற்றோரை விட்டுப் பிரிந்து சென்றனர். அனுவிரதன் சுவிரதன் என்ற அவ்வரக்கர் இருவரும் சுவர்ணமுகரி ஆற்றின் வட திசையில் நின்ற ஆலமரத்தைப் பற்றி வாழ்ந்து வந்தனர். அவர்களின் சுவிரதன் என்பான் சாபம் நீங்கி விஷ்ணு லோகம் அடைந்தான். அனுவிரதன் சாபம் நீங்காமையால் அரக்கனாகவே உள்ளான் என்று கூறிய தேவகன்னியர் அவர்தம் வரலாற்றை மேலும் எடுத்துரைத்தனர்.

"அனுவிரத சுவிரதர் என்னும் இருவரும் முன் பிறப்பில் பாரியாத்திரை மலையில் வாழ்ந்த வேடர்கள் ஆவர். இணை பிரியாத சகோதரர்களான அவர்கள் அறிவுக் கூர்மையுடன் விலங்குகளை வேட்டையாடும் திறமை பெற்றிருந்தனர் வேட்டையாடிய விலங்கு களைத் தின்னும் இயல்பினர். ஒருநாள் காட்டில் அலைந்து திரியும் முனிவன் ஒருவனைக் கண்டு அனுதாபம் கொண்டனர். அவனுக்காக ஒரு குடிசை அமைத்துத் தந்து அவன் உண்பதற்குப் பழம், கிழங்கு முதலியவைகளைத் தேடித் தந்து தொண்டு செய்து வந்தனர். அவன் தன் தூய ஒழுக்கத்தைக் கண்டு தாமும் நல்லொழுக்கமுடையவராய் வாழ்ந்து நற்கதி அடைய விருப்பினர். தாம் நற்பேறு பெற ஒரு மந்திரத்தை உபதேசிக்குமாறு அம்முனிவனைப் பணிவன்புடன் வேண்டிக் கூறினர். அவரும் 'மிருகஜ்வ அஹம்' என்று ஏதோ ஒன்றைக் கூறி அவ்விடமிருந்து அகன்று போயினர்.

சகோதரர் இருவரும் பெருநம்பிக்கையுடன் முனிவன் கூறியதை மந்திரமாகவே எண்ணி ஓதிவந்தனர். சிலநாள் கழித்து அச் சொல்லின் பொருளுக்கேற்ப மான்வடிவு பெற்று மான்களாக மாறினர். அவர்களுக்கு மந்திரப் பொருள் தெரியாது. ஆயினும் குருவினிடத் திலும், மந்திரத்திடத்திலும், பக்தி சிரத்தை வைத்து அதனை ஓதி வந்ததால் அவ்வுருவம் பெற்றனர். மான்களாய் காட்டில் அலைந்து திரியும் அவ்விருவரும் ஒருநாள் தமக்கு மந்திரம் உபதேசித்த முனிவனைக் கண்டு அவனை அன்புடன் நெருங்கி வணங்கினர்.

முனிவன் உண்மையை அறிந்தான். அவர்கள் மீது பேரிரக்கம் கொண்டு தன்கைகளால் தடவிக்கொடுத்து தன் கமண்டல நீரைக் கொண்டு அவர்கள் மீது தெளித்தான். அவற்றின் காதுகளில் வாசுதேவ மந்திரத்தை எடுத்துக்கூறி நரசிங்கப் பெருமான் உறையும் கடிகாசலத்திற்குச் செல்லுமாறு பணித்தான். இறைவன் திருக்கோயில் கொண்ட ஏகசிலாமலையில் கீழ்த்தாழ்வரையில் விளங்கும் அனுமத் தீர்த்தத்தில் நீராடிப் பழைய வடிவம் பெறுமாறும் அம்மந்திரத்தை ஜெபம் செய்யுமாறும் எடுத்துரைத்தான். மான் வடிவு கொண்ட சகோதரர் இருவரும் முனிவனைத் தொழுது கடிகாசல மலைப் பகுதிக்கு வந்து சேர்ந்தனர்.

அனுமத் தீர்த்தத்தில் நீராடிய அளவில் மானுரு நீங்கி மனித உருப்பெற்றனர். அங்கேயே வாழ விரும்பிய சகோதரர் இருவரும் அனுமனையும் நரசிங்கப் பெருமானையும் தொழுது வணங்கி வாசுதேவ மந்திரத்தை ஜெபம் செய்துவந்தனர். ஒரு குடிசை அமைத்துக்கொண்டு வாழ விரும்பிய அவர்களிருவரும் அதற்கு உரிய கழி முதலியன கொண்டுவர கத்தி முதலிய கருவிகளுடன் புறப்பட்டனர்.

கடிகைமலையின் வடக்கில் பைரவ முனிவர் தவம் செய்யும் பகுதியை வந்தடைந்தனர். அங்கு வானுற ஓங்கி வளர்ந்திருந்த மூங்கில்களைக் கண்டனர். விப்பிரசேகரர் என்னும் மாமுனிவர் சிலா புஷ்கரனியின் கரையில் வளர்ந்திருந்த மூங்கில்களை வேடரிருவரும் வெட்டுவதை கண்டார்.

மிகப் புனிதமான இடத்தில் நெடுங்காலமாக வளர்ந்துவரும் மூங்கில்களை இரக்கமின்றி வெட்டிய அவ்வேடர் செயலுக்குக் கடுங்கோபம் கொண்டார். அவ்விருவரையும் அரக்கர் ஆகுமாறு சபித்து விட்டார். சாபம் பெற்ற அவ்வேடர்களில் சுவிரதன் என்பான் விரைந்து சென்று விப்ரசேகரர் திருவடிகளைப் பற்றிக் கொண்டு தன் செய்கையைப் பொறுக்குமாறு வேண்டினான். அவர்தம் செய்தியை ஞானக் கண்ணால் அறிந்த விப்பிரசேகரர் விலங்குகளைக் கொன்று திரிந்த அவன் புண்ணியபலன் காரணமாக அனுமத் தீர்த்தத் தில் நீராடி நன்மை பெற்றதாலும், சித்த சுத்தியுடன் தவம் புரிந்த காரணத்தாலும் தெய்வமகளிர் அனுமத் தீர்த்தத்திற்கு வந்து நீராடி நரசிங்கனை வழிபட்டுத் திரும்பும்போது ஊர்வசியின் தலைக்கூந்தல் நீர் தெறிக்கப்படும்போது அரக்க வடிவம் நீங்கி விஷ்ணுலோகம் சென்றடைவான் என்று சாப நீக்கம் கூறினார். அனுவிரதனும் அவரை சரண்புக முற்படுவதற்குள் அவர் அவ்விட்டகன்று சென்று

விட்டார். அதனாற்றான் சோமவிரதன் மக்களுள் சுவிரதன் விஷ்ணு லோகம் சென்றான். அனுவிரதன் அரக்கனாகவே ஆலமரக் கிளையில் தொங்குகிறான் என்று கூறி முடித்தனர். சோமவிரதன் செய்தியை அறிய விரும்பிய அரசனுக்கு சோமவிரதன் பற்றியும் எடுத்து-உரைத்தனர்.

**சோமவிரதன் வரலாறு** : மாஹிஷ்மதி எனும் நகரில் ஸமாதி என்றொரு வணிகன் இருந்தான். அவன் தன்குலத்தொழிலை அறமுறையில் செய்து பெரும் புகழ்பெற்று வாழ்ந்து வந்தான். அவனுக்கு சுரசை, விரசை என்று இரு மனைவியர் இருந்தனர். ஆயினும் அவன் மூத்தவளான சுரசையே மிக விரும்பி இளையவளான விரசையை வெறுத்துவந்தான். ஆயினும் விரசை கற்புக் கடன் பூண்டவளாய் அவனுக்கு யாதொரு குறையும் இல்லாதவாறு பணி செய்து வந்தாள். அவ்வணிகனுக்கு எல்லாச் செல்வம் இருந்தும் புத்திரச் செல்வம் இல்லாமையால் அவன் மனம்மிக வருந்தினான்.

பெரியோர் கூறியபடி மகப் பேற்றை அடைய விரும்பி அவன் கடிகாசலத்தை வந்தடைந்தான். அனுமத் தீர்த்தத்தில் நியமத்துடன் நீராடி நரசிங்க பெருமானைச் சிந்தனை செய்து வந்தான். இறைவன் இன்னருளால் பிரம்மத் தன்மை பெற்று சோமவிரதன் என்ற பெயரும் பெற்றான். ஒருநாள் ஸத்வகுணம் தலையெடுத்த காரணத்தால் நரசிங்கனை வழிபடும்போது தன் இருமனைவியிடத்திலும் பிள்ளைப் பேற்றினை வேண்டினான்.

கோயிலின்று வெளியே வந்த அவன் எப்போதும் மூத்தவள் சுரசைக்கே மகப்பேறு தந்தருள்க என்று வேண்டும் நான் திடீரென இருமனைவியருக்கும் மகப்பேற்றினை வேண்டிய காரணம் என்ன' என்று நெடுநேரம் சிந்தித்தான். ஒன்றும் புரியாமல் அன்று இரவினை அங்குக் கழித்தான். மறுநாட்காலை அனுமத் தீர்த்தத்தில் நியமத்துடன் நீராடிய அவன் அனுமனிடம் மீண்டும் தன் மூத்த மனைவிக்கே இரு பிள்ளைகள் பிறக்க வேண்டுமென வரம் வேண்டினான்.

சொன்ன சொல்லை மாற்றிக் கூறியதன் காரணமாகவே அவனுக்கு மூத்த மனைவி சுரசை ஆகிய அனுகுயைக்கு இருபிள்ளைகள் பிறந்தாலும், பிறந்த அளவில் அவ்விருவரும் அரக்கராக பிறந்தனர்.

சோமவிரதனின் இரண்டாம் மனைவிக்குப் பிறந்தவன் தேவ விரதன் என்பான் ஆவான் : அவன் பெண் வயிற்றுப் பேரனே உலகம் புகழும் துருவன் ஆவான்.

இவ்வாறு ஸமாதி என்னும் வணிகன் "சோமவிரதன்" என்று பிரம்மத் தன்மை பெற்றதும் மகப் பேற்றினை அடைந்ததும், கடிகாசலத்திறைவன் நரசிங்கப் பிரான் அருள் காரணமே என்று கூறித் தேவமகளிர் அரசனிடம் விடைபெற்றுச் சென்றனர். அரசனும் தன் மனைவியுடன் கடிகாசல யாத்திரையை மேலும் தொடர்ந்தான்.

**இந்திரன் வரவும், வேண்டுகோளும் :** இந்திரத்யும்னன் வழி நடந்து செல்லும்போது வழியிடையே தெய்வத் தன்மை வாய்ந்த நல்லோர் பலர் சூழ இளைஞனாய் அழகன் ஒருவன் தன்னெதிரில் வரக் கண்டான்.

வந்தவன் தன்னை இந்திரன் என அறிமுகம் செய்வித்துக் கொண்டு இந்திரத்யும்னனை பலவாறு போற்றிப் புகழ்ந்தான். இந்திரத்யும்னனும் இந்திரனும் ஒருவருக்கொருவர் அன்பு பூண்டு நல்லுரையாடினர். இந்திரன் தான் வந்த காரியம் குறித்து இந்திரத்யும்னனுக்கு பின்வருமாறு எடுத்துரைத்தான்.

"கும்போதரன் என்னும் காலகேய அரக்கர் கூட்டத் தலைவன் கடிகாசலப் பகுதியை வளைத்துத் துன்புறுத்துகிறான். அவன் நரசிம்மபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த சுரதன் எனும் செங்கோன் மன்னனை நாட்டை விட்டு துரத்தி மக்களையும் விரட்டி விட்டு அரக்கர் வாழும் பகுதியாக ஆக்கிவிட்டான். வேத வேள்வியைத் தடுத்தும் முனிவர்களைக் கொன்று தின்றும் சாதுக்களை நலிந்தும் அடாது செய்து திரியும் அரக்கர் காரணமாக கடிகாசல பகுதி மக்கள் அடையும் துன்பத்தை நேரில் கண்டு மனம் வருந்திய நான் திருக்கடிகை இறைவன் ஆகிய நரசிம்மன் திருவடி தொழுது நன்மக்களைக் காத்து நரசிம்மபுரத்தை மீண்டும் மக்கள் வாழிடமாகச் செய்யுமாறு வேண்டினேன்.

என்முன் நரசிங்கப் பெருமான் தோன்றி "இந்திரத்யும்னன்" என்னும் அரசன் பிரம்மத்தன்மை அடைந்து மோட்சம் வேண்டி என்னை நாடி வருவான். அவன் கும்போதரனை வென்று காலகேய அசுரக்கூட்டத்தை நாட்டினின்று அகற்றியோடச்செய்வான். அவனுக்கு துணையான என்னை நாடித் தவம் புரியும் அனுமனுக்குச் சங்கு சக்கரம் படைகளைத் தந்து அனுமனின் விருப்பத்தையும் நிறை வேற்றி அனுமனது உதவியுடன் இந்திரத்யும்னன் வெற்றி பெறச்

*செய்வேன். அவ்வரசன் வரும் வரை பொறுமையுடன் இரு என்று கட்டளையிட்டு மறைந்தார். இது வரை உன் வரவை எதிர் நோக்கியிருந்தேன். நாரத முனி வாயிலாக நீ கடிகாசலம் நோக்கி வருவதை அறிந்தேன். ஆதலால் விரைந்து உன்னை எதிர்கொள்ள வந்தேன். தாமதம் செய்யாமல் நீ அரக்கருடன் போர் செய்து கடிகாசலத்தை தீயோர் பிடியினின்று விடுவித்து நன்மக்களைப் பாதுகாப்பாயாக என்று அன்புடன் வேண்டினான் இந்திரன். ராஜஸத் தன்மையை முற்றிலுமாக அகற்றி ஸாத்துவிக குணத்தையே கொண்டு விளங்கும் இந்திரத்யும்னன் அசுரக் கூட்டத்துடன் போர் செய்யவிரும்பாது தயங்கி நின்றான்.*

**இந்திரன் அறிவுரையும், இந்திரத்யும்னன் போர் வேடம் பூணுதலும் :**

*"அரசே நற்றவ முனிவர் வாழ நன்மக்கள் மகிழ்ந்து வாழ அசுரர் பிடியினின்று அகற்றிக் கடிகாசலத்தைக் காப்பது உன் கடமை உனக்கு உதவ ஹனுமான் ஆகிய அஞ்சனாபுத்திரனுக்குத் திருவாழி திருச்சங்கு தந்து கட்டளையிட்டுள்ளார் நரசிம்மப்பெருமான். நரசிம்மபுர விடுதலையை விரும்பிய தேவரனைவரும் அருகிலுள்ள சிலாவடப் பகுதியில் கூடியுள்ளனர். நற்றவ மாமுனிவரும் மற்றவரும் உன் வரவை மிக்க ஆவலுடன் எதிர்பார்த்து நிற்கின்றனர். முதலில் உன் கடமையை கலங்காது செய். பின்னர் நீ வேண்டியபடி பிரம்மத் தன்மையையும், மோக்ஷத்தையும் உறுதியாக அடைவாய்" என்று போருக்குத் தயங்கிய இந்திரத்யும்னனுக்கு அறிவுரை கூறி அவனுக்கு உற்சாக மூட்டினான் இந்திரன். இந்திரத்யும்னனும் இராஜஸத் தன்மையை ஏறிட்டுக் கொண்டு அரக்கருடன் போர் புரியச் சித்தமானான்.*

**தேவர்கள் ஆயுதம் ஈதலும் முனிவர் ஆசிமொழி கூறலும் :**

*இந்திரத்யும்னன் அசுரருடன் போர் குறித்து நின்றபோது தேவர்கள் அனைவரும் அவனைப் போற்றிப் புகழ்ந்து ஊக்க மொழி கூறி உற்சாகப்படுத்தினர். இந்திரன் குதிரை தேர் வில்வாள் போன்றவற்றை நல்கி ஊக்குவித்தான். சூரியபகவான் தேர்ப்பாகனையும், தேர்க்குதிரைகளையும் தந்துவக் கடலரசன் மணிமாலையையும் படைகளையும் பிறகருவிகளையும் ஈந்துதவினான். காலன் தேர்க்கொடியினையும் பிறவற்றையும் படைத்துத்தர பிறதேவர்கள் அவரவர் அருட்கொடையாகப் பல்வகைப் போர்க் கருவிகளையும் போர் வீரர்களையும் படைத்து தந்தனர். முனிகணங்கள் ஆசிமொழி கூறி அவன் போரில் வெற்றி பெற வாழ்த்தின.*

**இந்திரத்யும்னன் நரசிம்மபுரத்தை அடைந்து அசுரரைப் போருக்கு அறைகூவி அழைத்தல் :**

*இந்திரத்யும்னன் நால்வகைப் படைகள் சூழ நரசிம்மபுரியை அடைந்தான். பிறழா இறையன்பும், தன்னம்பிக்கையும் கொண்ட அம்மாமன்னன் தேவகாரியம் செய்வதாக உறுதிபூண்டு வில்லில் அம்பேற்றிக்கேட்டார் உளம் துணுக்குறுமாறு பேரொலி எழுப்புமாறு செய்தான். திருமாலின் திருவடித் தாமரைகளில் சிந்தை வைத்துத் திருமாலின் ஆணையை நிறைவேற்ற முற்பட்ட அவ்வரசனின் வில் நாணொலி கேட்ட காலகேய அசுரர் மனம் மருகினர், நடுக்குற்றஞ் சினர், மெய்சோர்ந்தனர், மனம் கலங்கினர்.*

**கும்போதரன் ஏவலும், கரமுக துர்முகர்கள் வருதலும் :**

*நீண்ட நெடுங்காலமாகப் பகையறியாது வாழ்ந்த காலகேயர் தலைவன் கும்போதரன் திடீரென ஒலித்த வில்லின் நாணொலி கேட்டு சற்று திடுக்கிட்டான். தன்வலியறியாது தன்னோடு போர் புரிய வந்தவர் குறித்து வெகுளிச் சிரிப்புடன் இழித்து உரைத்தான். ஆயினும் உண்மை நிலையறிந்து வருமாறு தன் அடிமைகளான கரமுகன், துர்முகன் என்னும் இருவரை அனுப்பினான். அவர்களும் விரைந்து சென்று இந்திரத்யும்னன் நாற்படை சூழ நிற்கும் காட்சியை கண்டனர். தம் அரசனைச்சிறிதும் அஞ்சாது போர் புரிய வந்துள்ள இந்திரத்யும்னனையும் அவன் படைகளையும் கண்டு கலங்கினர். தமக்கு அழிவு வந்துவிட்டதென அஞ்சினர்.*

*அவ்விருவரும் திரும்ப விரைந்தோடிச் சென்று கும்போதரனை அண்டி அவன் காலடியில் வீழ்ந்தனர். போர் புரிய வந்துள்ளவன் இந்திரத்யும்னன் என்னும் அரசன் என்றும், தேவர்கள் தூண்டுதலால் அவர்தம் துணை பெற்றுக் காலகேயருடன் போர் புரிய வந்திருப்பதாக வும், தமக்கு அழிவு உறுதி என்றும், பயபக்தியுடன் எடுத்துக்கூறினர். அதனைக் கேட்ட கும்போதரன் இறுமாப்புடன் அவர்களை எள்ளி உரைத்தான்.*

*சிவபெருமான் தந்த வரத்தால் தேவர்களாலும் என்னை ஏதும் செய்ய முடியாத நிலையில் அற்ப மனிதனா என்னை அழித்துவிட முடியும் ? என்று கூறி தன்முன் நின்று அஞ்சாது நரனின் ஆற்றலைப் புகழ்ந்து கூறிய துர்முகனைக் கண்டித்துக் கூறவும் துர்முகன் அச்சத் துடன் அங்கிருந்து அகன்று சென்றான். கரமுகன் கும்போதரனைப் புகழ்ந்துரைத்து அவனுடன் போரிட வந்தவனின் அருகில் பேரழகி*

ஒருத்தி நிற்கின்றாள் என்று எடுத்துரைத்து அவனுடன் போர் செய்து அவளைக் கவர்ந்து வருதல் அல்லது அவளை கவர்ந்து வந்தால் அவள் பிரிவினை ஆற்றாது அவ்வரசன் தானே இறந்துபடுதல் உறுதி என்று உபாயம் கூறிடவும், கும்போதரன் கரமுகனைப் பலவாறு பாராட்டி பரிசுகள் நல்கினான்.

**அமாத்தியபுத்திரர்கள் போருக்குப் புறப்படுதல் :**

கும்போதரன் அருகில் நின்ற ஆற்றல் மிக்க மந்திரிகுமாரர்களை நோக்கிப் பகைவனை வென்று அவன் மனைவியைப் பிடித்து வருமாறு ஆணையிட்டான்.

அரசனின் ஆணைமொழி கேட்ட அளவில் பொங்கி எழுந்தனர் போர்ப் புகழ் விரும்பிய அமைச்சர் புதல்வர் எழுவர். அவ்வெழுவரும் கவசமணிந்து போர்க் கருவிகளை ஏந்தியவராய் மிடுக்குடன் தேரேறிப் பகைவருடன் போர் புரியப் புறப்பட்டனர். அவ்வளவில் பல பருந்து களும், கழுகுகளும், பிணந்தின்னிப் பறவைகளுடன் அவர்தம் தேர்க் கொடி மீதும் தேர்த்தட்டின் மீதும் வட்டமிட்டவாறு வந்தமர்ந்தன. தேர்க்கெதிர்த் திசையில் மண்மாரி பெய்யத் தொடங்கியது. அவர்தம் மனத்துள் அச்சம் ஏற்படுத்தும் வண்ணம் பல சகுனத் தடைகள் தோன்றின.

மந்திரி குமாரர்கள் எழுவரும் அவற்றைச் சிறிதும் பொருட் படுத்தாமல் வீரம் நிறைந்த நெஞ்சினராய் இந்திரத்யும்னன் இருக்கும் இடம் வந்தெய்தினர். இந்திரத்யும்னனும் அவ்வெழுவரையும் கண்ட அளவில் பெருங்கோபம் கொண்டு தன் வில்லை வளைத்து நாணொலி எழுப்பினான். அவ்வச்சமூட்டும் நாணின் ஒலியைக் கேட்ட தேர்க் குதிரைகள் தேரினின்று கழன்று கொண்டு நாற்றிசை நோக்கி வெருவி ஓடின. அவ்வீரர்களின் படைக் கருவிகள் கையினின்று தானாகவே நழுவி வீழ்ந்தன. அவர்களும் மனம் மருகிச் சற்று நேரம் செவிடர் போன்றவராய்ச் செய்வதறியாது திகைத்து நின்றனர்,

பின்னர் ஒருவாறு தம்மைத் தாமே தேற்றிக் கொண்டு மந்திரி குமாரர்கள் இந்திரத்யும்னனை நோக்கி மழையென அம்புமாரி பொழிந்தனர். அரசனும் நொடிப்பொழுதில் அவ்வெழுவரையும் அவர் தம் படைவீரர்களையும் கொன்றொழித்தான். மந்திரி புத்திரர் எழுவரும் எமபுரம் எய்தியது கண்ட எஞ்சிய அசுரர்கள் தப்பினோம், பிழைத்தோம் என்றோடிப் போய் தம் தலைவன் கும்போதரனுக்கு அமாத்திய புத்திரர் மரணம் குறித்து தெரிவித்தனர். இந்திரத்யும்னன் செயலைக் கண்ட தேவர் மாமுனிவர் மலர்மாரி பொழிந்து மகிழ்ந்தனர்.



**மஹாமாத்தியன் வருகையும் தோல்வியும் :—**

*தன் மந்திரி குமாரர்கள் எழுவரும் கொல்லப்பட்டழிந்தனர் என்ற சேதி கேட்ட கும்போதரன் பெரிதும் மனம் மாழ்கினான். சற்று நேரம் நின்று ஆலோசித்தான். பின் பாம்பெனச் சீறியெழுந்து தானே தன் பகைவனைக் கொன்றொழிப்பதாகக் கூறிப் போருக்குப் புறப்படலானான்.*

*ஒரு நரனை அழிக்கவா தலைவன் தானே புறப்படுவதென்று கூறித்தன் தலைவனைத் தடுத்துத் தானே புறப்பட்டுச்சென்று பகைவனை அழித்து அவனுடன் இருக்கும் பாவையைப் பற்றி வருவதாக மஹாசாஸ்தா என்னும் மந்திரி அவனிடம் போர் மேற் செல்ல அனுமதி வேண்டினான், கும்போதரனும் அவ்வுரை கேட்டு மகிழ்ந்து மஹாசாஸ்தாவிற்குத் தோள்வளையும் கர்ணபூஷணமும் பரிசாகத் தந்தனுப்பினான்.*

*மஹாசாஸ்தா எனும் அவ்வமைச்சன் நாற்படைகளுடன் புறப் பட்டுப்போய் பொங்கியெழுங் கடல் வளைத்ததுபோல் இந்திரத்யும்ன னைத் தன் படைகளுடன் சூழ்ந்து கொண்டான். அதுகண்ட தேவர் கள் இந்திரத்யும்னன் தனியொருவனாய் அப்பெருங்கூட்டத்தை எவ்வாறு வென்றிடக்கூடும் என்று கலங்கினர். தேவேந்திரன் நரசிங்கப் பெருமானை நினைந்து அரசனுக்குத் துணை அளிக்குமாறு வேண்டினான். அதுபோழ்து நரசிங்கப்பிரான் தம்மை நோக்கித் தவம் புரியும் வாயுவின் மைந்தன் அனுமனை நோக்கி வேண்டும் வரம் யாதென வினவவும் "தேவாதி தேவா! திருக்கடிகை மலைவாசா! உன்னருளால் திருப்பொலிந்த சேவடி என் சென்னியின்மேல் பொறித்து உன் வாசகமும் உருப்பொழிந்த நாவினேனை உனக்கு உரித்தாக் கினாய். ஆயினும் உன் திருவாழி திருச்சங்குப் பொறியால் ஒற்றுண்டு நின்று உனக்கே நான் ஆட்செய்ய விரும்புகிறேன்": என மாருதி மறுமொழி பகர்ந்தான். பெருமாளும் அவன் கருத்துணர்ந்து அவனுக்கு மற்றிரு தோள்களும் சங்காழியும் தந்தருளி சதுர்புஜ அனுமனான அவனை நோக்கி இந்திரத்யும்னனுக்கு உதவிட செல்லுமாறு ஆணை யிட்டார்.*

*அஞ்சனா புத்திரனும் திருவாழியைக் கையிலேந்திய உகப் புடையவனாய் புறப்பட்டுச் சென்று காலகேயரின் படைமீது பலத்துடன் பாய்ந்து வீழ அத்தாக்குதலுக்கு ஆற்றாது அப்படை சிதறி ஓடிற்று.*

தன் படைகளைத் தடுத்து நிறுத்தி உற்சாகம் ஊட்டிய மஹா சாஸ்தா அனுமனை நோக்கி வந்தான். ஆஞ்சநேயன் மஹாசாஸ்தாவின் தேர்க்கொடி மீது பாய்ந்து அதனை முறித்துக் கீழே விழச் செய்து தேரோட்டியையும் பாய்ந்து கொன்றான். மஹாசாஸ்தா பெருஞ் சினத்துடன் பவன குமாரன் மீது அம்புமழை தொடுத்தான். அதனைத் தடுக்கமுற்பட்ட இந்திரத்யும்னன் மீதும் சரமாரி பொழிந்தான்.

இந்திரத்யும்னன் தன் தெய்வக் கணைகளால் அவ்வம்பு மழையை அழித்தொழிக்கவும் இராமதூதன் பெருவிசையுடன் அசுரன் தன் தேர் மீது குதிக்க அத்தேர் பொடிப் பொடியாய்ப் போயிற்று. தன் ஆற்றலால் பிரிதொரு தேரைப் படைத்து மஹாசாஸ்தா பெரு வீரத்துடன் போர்புரிய இந்திரத்யும்னன் ஓரம்பால் அவன் தலைக் கிரீடத்தை அறுத்து வீழ்த்திப் பிறிதொரு கணையால் அவனது மார்புக் கவசத்தைப் பிளந்து விழச் செய்தான். அவனைப் படையின்றி நிற்கச் செய்த அரசனது பராக்கிரமத்தை தேவரும் முனிவரும் வியந்து பாராட்டினர். அவ்வளவில் அருகு நின்ற பெரியதோர் ஸாலமரத்தைப் பறித்தெடுத்து மஹாமாத்தியன் அரசனைக் கொல்ல முற்பட்டான். வாயுபுத்திரன் மஹாசாஸ்தாவை தடுத்து நிறுத்தி அம்மரத்தைக் கொண்டே மஹாசாஸ்தாவை வாய் பிளந்து இறக்குமாறு அடித்து வீழ்த்தினான். வாயுகுமாரனின் ஆற்றலைக் கண்டு அஞ்சிய எஞ்சிய அசுரர்கள் அவனருளால் உயிர் பிழைத்தவராய் விரைந்தோடிச் சென்று தம் தலைவன் கும்போதரனுக்கு மஹாசாஸ்தாவின் மரணத்தை எடுத்துரைத்தனர்.

## தூம்ராக்ஷ பீமாக்ஷர்கள் தோற்றமும் முடிவும் :

ஒரு குரங்கால் மஹாபலம் வாய்ந்த மஹாசாஸ்தா கொல்லப் பட்டான் என்பதனைக் கும்போதரனால் நம்ப முடியவில்லை. ஆற்றலுக்குப் பெயர் பெற்ற அமைச்சன் மஹாசாஸ்தாவின் மரணம் அவனைச் சிறிது நிலை குலையச் செய்தது. ஆயினும் அஞ்சா நெஞ்சினனாய்த் தன் முன் நிற்கும் தன் இரு புதல்வர்கள் தூம்ராக்ஷன் பீமாக்ஷன் என்பார்க்குத் தீங்கிழைத்த அக்குரங்குடன் அவ்வரசனைப் போரில் கொன்று வெற்றிவாகை சூடி வருமாறு ஆணையிட்டான்.

தூம்ராக்ஷ பீமாக்ஷர்கள் அக்கினியை உபாசனை செய்து பெரு வேள்வி செய்து பேராண்மை பெற்றனர். பெரு வீர மிடுக்குடன் தேரேறிப் போர்க்களம் நோக்கிப் புறப்பட்டனர். அவ்விருவர் தோற்றமும் கண்டார்க்குப் பேரச்சம் தருவதாய் அமைந்தது

படையுடன் புறப்பட்ட அவர்களைச் சூழ்ந்து பிணந்தின்னி பறவைகள் கூட்டமாகச் சென்றன. கொடிய நரிகள் அவர் எதிர் நின்று ஊளையிட்டன : சுழன்று சுழன்று மண்மாரி பெய்தது. கொடிய சூறாவளிக் காற்றடித்தது. காரணமின்றியே திடுமென அவர்தம் தேரோட்டிகள் தேரினின்று நழுவிப் பூமியில் விழுந்தனர். தேரில் பூட்டப் பெற்ற குதிரைகள் பேரச்சம் அடைந்தனவாய் உடல் வியர்த்தன. கொடிய அவ்வரக்கர் தம் இடக் கண்கள் தீய சகுனம் கூறுவனபோல் துடித்தன. அவர் தம் கையிலேந்திய விற்கள் வினைபுரியாத போதே நானறுந்து தரையில் விழுந்தன. இவ்வாறு பல தீய சகுனங்கள் உண்டாயிடவும் அவ்விருவரும் அஞ்சாது போர்களம் புக்கனர்.

இந்திரத்யும்னன் கும்போதரனுடைய மக்கள் தன்னுடன் போருக்கு வருவதைக் கண்டு நன்கு கவனமாக சிந்தித்தான், பெரும் போர் நிகழும் என்றுணர்ந்தான். அஞ்சனைமகனை நோக்கி மிக்க கவனத்துடன் இருக்குமாறு வேண்டினான். நரசிங்கன் நமக்கே வெற்றி தருவார் என்று கூறி அனுமனையும், தன் படைவீரர்களையும் உற்சாகப்படுத்தினான்.

தூம்ராக்ஷன் அனுமனை அழிப்பதாக உறுதிபூண்டு பாதாளபேதி என்றழைக்கப்படும் தன் யானை மீதேறி அனைவரும் வியந்து காண அனுமனை நோக்கி விரைந்தோடி வந்தான், அனுமனும் அவனை அச்சுறுத்த வேண்டி அவ்வானையின் மண்டை மீது பெருவிசையுடன் ஓங்கி அறைய அத்தாக்குதலுக்கு ஆற்றாது பாதாளபேதியானை பெரிதாய் ஓலமிட்டு பிளிறியது. கொடிய பாம்புகள் போன்ற அம்புகளைக் கொண்டு தூம்ராக்ஷன் அனுமனுடன் போர்புரிய அவனும் தன் சக்கரப் படை கொண்டு அவ்வனைத்தையும் வீணாகச் செய்தான். தூம்ராக்ஷன் அனுமனை வெல்லமுடியாதென அறிந்து அவனது ஆற்றலுக்கு அஞ்சி பாதாளத்தில் சென்று மறைந்தான்.

அவன் தம்பி பீமாக்ஷன், அண்ணன் தூம்ராக்ஷனைக் காணாது அனுமனால் விழுங்கப்பட்டானோ என்று ஐயுற்று அனுமனைக் கொல்ல முற்பட்டான். வில்லெடுத்து அம்பு பூட்டுமுன் அனுமன் பீமாக்ஷன் மீது பாய்ந்து அவன் கன்னத்தில் விசையுடன் ஓங்கி ஓரறை அறைந்தான். அதனைப் பொறுக்கமாட்டாது குருதி கக்கிக் கொண்டு பீமாக்ஷன் தேரினின்று கீழே நழுவி விழுந்து ஒரு நாழிகைப் பொழுது மயங்கிக் கிடந்தான். அஞ்சனை மைந்தனின் அற்புதச் செயலைக் கண்டு தேவர் மாமுனிவர் போற்றிப் புகழ்ந்தனர். அரக்கர் கள் துளக்குறு நெஞ்சினராய் அங்குமிங்கும் அலைந்தோடலாயினர்.

சிறிது நேரத்தில் மூர்ச்சை தெளிந்தெழுந்த அசுரமகன் பீமாக்ஷன் யானை மீதேறி அனுமனுடன் போர் புரிய முற்பட்டான். அனுமன் யானையுடன் அசுரனைக் கொல்வதாகப் பாய்ந்திட பீமாக்ஷன் தன் மாயையால் வானில் சென்று மறைந்தான். யானை இரத்தம் கக்கிச் செத்தது. அருகிலிருந்த அரக்கர் கூட்டம் மாமிசப் பிண்டமாக மண்மீது மடிந்து விழுந்தது.

வாதாத்மஜன் பீமாக்ஷனைத் தேடித் திரிந்தான். பீமாக்ஷன் அனுமன் கண்ணுக்கு இலக்காகாது வானில் மறைந்து நின்று வஞ்சனையாகக் கடும்போர் புரியத் தொடங்கினான். அவ்வப்போது வெளிப்பட்டும் மறைந்தும் போர் புரியும் அவனது ஆற்றலைக் கண்டு மாருதியே வியந்தான். அவன் வெளிப்படும் வாய்ப்பு நாடிப் பொறுத்து நின்ற அனுமன், மேகத்திடையே மதிபோன்று தோன்றிய பீமாக்ஷனைக் கண்டான். கண்ட அளவில் அவனிரு கால்களையும் நழுவவிடாதே பற்றிக்கொண்டு கரகரவென சுற்றிச் சுழற்றிப் பெரு விசையுடன் வானில் எறிந்தான். நூறுயோசனைத் தொலைவில் மாமிச மலையென விழுந்திறந்தான் பீமாக்ஷன்,

இந்திரத்யும்னன் வாதாத்மஜன் சாதனையை வியந்து அவனைத் தன் கைகளால் ஆரத் தழுவிக் கொண்டான். வானில் தேவதுந்துபி முதலிய இசைக் கருவிகள் முழங்கின. பூ மழை பொழிந்து தேவர்கள் அனுமனைப் போற்றினர். நன்று நன்று என்று முனிவர்கள் பாராட்டினர்.

**கும்போதரன் வருகை :**

பொருபடை ஆழி சங்கேந்தி போர்புக்கு அசுரரைப் பொன்று வித்துத் தன் இரு கண்மணிகளையும் அழித்த அனுமனின் ஆற்றலையும் இந்திரத்யும்னன் செயலையும் கேட்ட கும்போதரன் புத்ரசோகம் தாங்காது க்ஷணகாலம் மெய்மறந்து மூர்ச்சையுற்ற நிலையில் இருந்தான். பரமசிவனைப் பூசித்துப் பலவரங்கள் பெற்று மிடுக்கனாய்த் தேவர்க்கும் முனிவர்க்கும் பிறர்க்கும் தீங்கிழைத்துத் திரிந்த அவன் தன்னந்தனியன் ஆனவன் போல் செய்வதறியாது, திகைத்து நின்றான். ஒருவாறு மனம்தேறி நாசம் வந்துற்றகாலை நல்லதோர் பகையை பெற்றேன் என்று உள்ளம் தேறிப் போர்ப்புகழ் வேட்டு யுகாந்த காலத்தில் கொழுந்து விட்டெரியும் தீப்போல் தன்னிரு கண்களும் கோபத் தீயால் சிவக்க ஆறாச் சினத்துடன் இந்திரத்யும்னனுடன் போர் செய்ய புறப்பட்டான்.

கும்போதரன் தேரேறிப் புறப்பட்ட அளவில் முன்பு போலவே பலகொடிய உற்பாதங்கள் தோன்றின. அவனும் அவற்றைப் பொருட் படுத்தாமல் போர்வெறி கொண்டு விரைந்து தேரைச் செலுத்தினான்.

போர்க் களத்தில் இணையில்லா வீரர்களான இந்திரத் யும்னனும் கும்போதரனும் நேருக்கு நேர் நின்று கடும்போர் புரியத் தொடங்கினர். அதனைக் காண தேவர்கள் வானில் கூடினர். அவர்கள் 'இந்திரத்யும்னன் வெல்க' என்று மகிழ்ச்சி ஆரவாரம் செய்து அவனை ஊக்குவித்தனர். நற்றவ மாமுனிவரும் அவன் வெற்றி பெற ஆசி மொழிகள் புகன்றனர் நிருதராக்ஷசனும் பிற நிருதரும் 'கும்போதரன் வெல்க' என்று ஆர்ப்பரித்து வாழ்த்தினர்.

கும்போதரன் மிக்க திறமையுள்ள இந்திரத்யும்னனை குறித்து சில கொடுங்கணைகளைத் தொடுத்துப் போர் செய்தான். அதனால் இந்திரத்யும்னனின் வில்லறுபட்டுக் கை நழுவிக் கீழே விழுந்தது. அவனது தேர்க் குதிரைகள் காலொடிந்து வீழ்ந்தன.

இந்திரத்யும்னன் வேறொரு தேரேறிக் கும்போதரனுடன் போர் புரிந்தான். கும்போதரனின் ஆற்றலைப் பாராட்டினான். அஞ்சாது காந்தர்வ அஸ்திரத்தையும் இந்திரன் தந்த சில அம்புகளையும் கும்போதரன் மீதும் அவன் படைவீரர்கள் மீதும் தொடுத்தான். அவற்றால் தன் படைவீரர் சிலர் யமலோகம் அடையக் கண்ட அசுரபதி கும்போதரன் அரசனை நோக்கி ஆக்னேயம் என்னும் நெருப்புக் கணையை எய்தான். அது தன்னை அடைந்தழிப்பதற்குள் அரசன் வாருணம் என்னும் அம்பால் அதனை நொடிப் பொழுதில் அணையச் செய்தான். கும்போதரன் வேறு பிற அம்புக் கணைகளைத் தொடுத்து அம்பு மழையாகப் பொழிந்து அரசனையும் அனுமனையும் தாக்கினான். அனுமனும் தன்னாழிப் படை கொண்டு கும்போதரன் விடுத்த அனைத்து அம்புகளையும் ஆற்றலிழக்கச் செய்தான். கும்போதரன் தன் அம்புகள் வீண் ஆனது கண்டு அனுமனை வியந்து பாராட்டினான்.

பெருந்தவத்தால் பெற்றதும், நித்திய பூஜை போன்றவற்றால் போற்றப்பட்டதுமான சூலப் படையைக் கையிலேந்தி அனுமனை நோக்கி "மதம் பிடித்த குரங்கே" நீ எம் படை வீரர்களை மிகவும் அலைக்கழித்துவிட்டாய். இப்போது திரிபுரம் எரித்தவன் எனக்கீந்த இம்முத்தலை வேலை எறிந்து உன்னைக் கொன்று உன் அரசனையும்

கொன்று போரில் இறந்துபட்ட அசுரர்களின் மனைவிமார்களின் கண்ணீரைத் துடைத்திடுவேன். இது உறுதி" என்று கூறி மிக்க வேகத்துடன் அச்சூலப் படையை மந்திரித்து அனுமன் அரசன் முதலியோரை அழிப்பதாக எறிந்தான்.

திரிசூலப்படை பிரளயகாலத்து நெருப்பெனச் சீறிப் பேரொளிப் பிழம்பாய் அனைத்தையும் சுட்டெரிப்பதாய் வந்தது. அதன் வெம்மைக் காற்றாது தேவர்களும் பிறரும் அஞ்சி ஓடினர். மூவுலகும் அதன் ஒளிக்காற்றாது இருண்டன. பிரளய காலம் வந்துற்றதோ எனத் தோன்றிற்று. எங்கும் பிணமலையெனக் காணப்பட்டது. போர்க் களம் இரத்தகளமாகக் காணப்பட்டது.

இந்திரத்யும்னனும் மதி மயங்கிய நிலையில் இருந்தான். கும்போதரனோ அட்டகாசம் செய்து பெருநகையுடன் பெருமகிழ்ச்சி யுடன் பகைவன் அழிந்தான் என்று மகிழ்ந்தான். அனுமன் இந்திரத் யும்னனை அணுகித் திரிசூலத்தை அழிக்க வல்ல நாராயண அஸ்திரத்தை எய்யுமாறு அரசனுக்கு நினைவூட்டினான். இந்திரத்யும் னனும் துணிவு கொண்டு ஸ்ரீமந் நாராயண அஸ்திரத்தை மந்திரித்து கும்போதரனின் முத்தலை சூலம் ஆற்றலழிந்தனையுமாறும் உலகம் அமைதிக்கொள்ளுமாறும் கூறி எய்தான். எவராலும் தாங்க ஒண்ணாததும் அரக்கர் அசுரர்களை அழித்தொழிக்க வல்லதும் ஆகிய அக்கணை கோடி சூரிய பிரகாசத்துடன் புறப்பட்டுச் சூலப் படையினைத் தாக்கியது. உத்தமமான அவ்விரண்டு தெய்வப் படைகளும் ஒன்றோடொன்று மோதிய காட்சியினை எவராலும் காண இயலவில்லை. வானில் பொறுத்தற்கு அரிய பேரொளிப் பிழம்புகள் பெருஞ்சோதியுடன் ஒன்றோடொன்று மோதிக்கொண் டால் எவர்தான் அதனைக் காண முடியும்? ஸ்ரீ நாராயண அஸ்திரம் மிக எளிதில் திரிசூலப் படையினை ஆற்றலிழக்கச்செய்து முழுமை யாக அதனை அழித்துவிட்டு மீண்டும் அரசனின் அம்பறாத் தூணியை வந்தடைந்தது.

தன் முயற்சியில் தோற்ற கும்போதரன் நாணத்தால் தலை கவிழ்ந்தான். துன்பப் பெருமூச்சு விட்டான்; போரை தவிர்த்துத் தன் எஞ்சிய அசுரப் படைகளுடன் பாதாளம் சென்று மறைந்தான்.

அது கண்ட தேவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர், வான முழுதும் தேவ துந்துபிகளும் பிற இசைக் கருவிகளும் இந்திரத்யும்னன் வெற்றி குறித்துப் பெரு முழக்கம் செய்தன. வானினின்று கற்பகம்

மந்தாரம் முதலிய தெய்வத்தன்மை வாய்ந்த மலர்களை அனுமன் இந்திரத்யும்னன் ஆகியோர்மீது பூமழையெனப் பொழிந்து மகிழ்ந் தனர். முனிவர்கள் கவலை தீர்ந்த மனத்தராய்த் தவ வேள்விகளை முன்னிலும் சிறப்புடன் செய்ய முற்பட்டனர். நாற்றிசையும் நறுமனப் பூங்காற்று வீசத்தொடங்கியது. எல்லா ஜீவராசிகளிடத்தும் களிப்பும் மகிழ்வும் குடிகொண்டது.

**இந்திரத்யும்னன் அரச முடிசூடுதல் :—**

கடிகாசலத்தைத் துன்புறுத்தி வந்த காலகேய அசுரர் கூட்டம் முற்றிலுமாக அழிய விஜயஸ்ரீயுடன் விளங்கும் இந்திரத்யும்னனைத் தேவர்களும் தவமுனிவர்களும் வரம் பல தந்து வாழ்த்தி மகிழ்ந்தனர். இந்திரத்யும்னன் தேவேந்திரன் அடிபணிந்து தான் பிரம்மத் தன்மை பெற்று மோக்ஷம் பெற விரும்புவதாகக் கூறினான். இந்திரன் சில காலம் பூமியில் தங்கி அப்பகுதியை பரிபாலித்து மக்களை மகிழ் வுறுத்திய பின் நரசிங்கப்பெருமான் அருளால் அவன் மோக்ஷம் அடைவது உறுதி எனத் தெரிவித்தான்,

தேவேந்திரன் 'நரசிங்கப்பிரான் அனுமதி பெற்று இந்திரத்யும் னனுக்கு அரச முடி சூட்ட முற்பட்டான். அமராவதிக்கு ஒப்பாக நரசிம்மபுரம் அலங்கரிக்கப்பட்டது. நான்கு திசையினின்றும் புனித நீர் கொண்டுவரப்பட்டது. நான்மறை அந்தணர் ஆசிமொழி கூற வானவர் நறைதோய் நாண மலர் தூவ நன்னெறிக்கு இறையோர் முன்வினை செய்திட இந்திரன் இந்திரத்யும்னனுக்கு அரச முடி சூட்டி மகிழ்ந்தான்.

அமரர் கோமான் அனுமனைக் கை கூப்பி வணங்கி கடிகா சலத்தினின்று அசுரக் கூட்டம் அழிந்தோடவும் தேவர் மாமுனிவர் துன்பம் துடைத்திடவும் செய்தது குறித்து பலபடப் பாராட்டி அக் கடிகைப் பகுதிக்கு 'ஹனுமத்புரி' என்று பெயரிட அனுமதி கேட்டுப் பெற்றான். அது முதல் கடிகாசலம் ஹனுமத்புரி என்றும் நரசிம்மபுரி என்றும் அழைக்கப்படுகிறது. சுரமுனிவர்கள் தத்தம் எண்ணம் இனிது ஈடேறியதால் மகிழ்ச்சியுடன் தத்தம் இடங்களுக்குப் போய்ச் சேர்ந்தனர்.

ராஜரிஷியான இந்திரத்யும்னன் தனக்கு வானவர் இட்ட கட்டளைப்படி அனுமத்புரி ஆகிய நரசிம்மபுரத்தில் நல்லாட்சி செய்யத் தொடங்கினான். நாற்றிசைக்கும் காட்டிற்கும் ஓடிச்சென்று அஞ்சி வாழ்ந்த மக்கள் அனைவரையும் தத்தம் வீடு திரும்பச் செய்தான்

அவர்கள் நாயகன் அல்லன்; நம்மை ஈனி பயந்த தாயென கருதுமாறு ஆட்சி புரிந்தான். தவமாமுனிவர்கள் யாதொரு இடையூறும் இன்றி நற்றவம் வேள்வி போன்றவற்றைச் செய்து மகிழ்ந்தனர். அங்கு நீதியும் விளைவும் தருமமும் நிறைந்து நிதிகள் மற்று யாவையும் நெருங்கின எட்டுத் திசையும் புகழ் மணக்க இனிது ஆட்சி புரிந்தான் இந்திரத்யும்னன். அதனால் ஓங்கிய பெருஞ்செல்வம் நீங்காது நிறைய அனைத்துயிர்களும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தன.

**இந்திரத்யும்னன் வசிஷ்டரை அடிபணிந்து தன் விருப்பம் கூறல் :**

ஒருநாள் இந்திரத்யும்னன் தன் மனைவியுடன் பொற்பல்லக்கில் ஏறி திருக்கடிகை நாதனைத் திருவடி தொழப் புறப்பட்டான். சிலா புஷ்கரணிக் கரையை அடைந்து தன் குருவான வசிஷ்டரின் ஆசிரமத்தைக் கண்டான். மரஞ்செடி கொடிகள் நிறைந்த அப்பகுதி தெய்வீகப் பொலிவுடன் அமைதி குடிகொண்டு விளங்கிடக் கண்டான். பல்லக்கினின்று இறங்கிய மன்னன் தன் மனைவி, பரிஜனங்களுடன் வசிஷ்ட மகரிஷியைக் கண்டு பயபக்தியுடன் அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

இம்மையில் தான் பிரம்மத் தன்மை பெற்று மோக்ஷம் பெறுவதற்கான வழி கூறுமாறு வேணவாவுடன் வேண்டினான். வசிஷ்ட மகரிஷியும் கடிகாசல க்ஷேத்திரப் பெருமை தீர்த்தங்களின் சிறப்பு நரசிங்கப் பெருமானின் அருட்சிறப்பு விசுவாமித்திரர், வாமதேவர் விப்பிரசேகரர் முதலியோர் கடிகைமலையில் தவம் புரிந்து கடிகை எம்பெருமானின் இன்னருளால் தத்தம் விருப்பங்களை நிறைவேற்றிக் கொண்டமை முதலிய செய்திகளை எடுத்துக்கூறி இந்திரத்யும்னன் மோக்ஷம் பெறுவதற்கான வழிமுறையினையும் எடுத்தியம்பினார்.

**விசுவாமித்திரர் பேறு பெறுதல் :**

மண்ணுலகில் மாயை என்னும் நகரை காதி மன்னன் புதல்வன் விசுவாமித்திரர் நீதிநெறி வழுவாது ஆண்டு வந்தார். ஒருமுறை காட்டிற்கு வேட்டையாடச் சென்ற அவரும் அவர்தம் பரிவாரங்களும் பசி தாகத்தால் மிகத் தவிப்பெய்தி தெய்வச் செயலால் வசிஷ்ட முனிவர் ஆசிரமத்தை வந்தடைந்தனர். தம் ஆசிரமத்திற்கு எதிர் பாராது விஜயம் செய்த மன்னனையும் மற்றவரையும் இனிதே வரவேற்று விருந்தோம்ப முற்பட்டார் வசிஷ்டர். நினைத்ததெல்லாம் தரவல்ல தெய்வ பசுவான காமதேனுப் பசுவைக் கொண்டு மிகச் சிறந்த முறையில் மன்னனைப் பரிவாரத்துடன் விருந்து செய்து

மகிழ்வுறச் செய்தார். விசுவாமித்திரர் அத்தெய்வப் பசுவை தனக்கே தந்திடுமாறு வேண்டியபோது காமதேனு விரும்பினால் அதனை அழைத்து செல்லலாம் எனக் கூறினார் வசிஷ்டர். காமதேனுவோ வசிஷ்டரைப் பிரிய மறுத்தது. அதனை வலுக்கட்டாயமாக இழுத்துச் செல்ல முற்பட்ட மன்னனின் போர்வீரர்களைக் கொம்பாலும், குளம்பாலும் தாக்கி ஓடச் செய்தது. கோபம் கொண்ட விசுவா மித்திரர் வசிஷ்டருடன் போர் புரியத் தொடங்கித் தோற்றுப்போனார். 'க்ஷத்திரிய பலத்திலும் பிரம்ம பலமே பலம்' என உணர்ந்தறிந்து பிரம்மத் தன்மை வேண்டித் தவம் புரிய முற்பட்டார். கதிரவன் தன்னைக் குறித்துத் தவம் செய்யும் விசுவாமித்திரரைக் கடிகாசலத் திற்குச் சென்று தவம் செய்யுமாறும் கடிகேசன்தான் எவர்க்கும் பிரம்மத் தன்மையை அளிக்க வல்லவன் என்றும் கூறி வழிப்படுத்தி அனுப்பினான்.

கடிகை மலையில் நரசிங்கப் பெருமானைக் குறித்து கடுந்தவம் புரிந்தார் விசுவாமித்திரர். அவர் நெடுங்காலம் பட்டினி கிடந்து தவம் மேற்கொண்டார். அவரை சோதிக்க விரும்பிய தேவேந்திரன் பூத்துக் கனிந்து விளங்கும் ஐந்து இலந்தைப் பழமரங்களை அவர் முன் தோற்றுவித்தான் கண் திறந்து பார்த்த விசுவாமித்திரர் அப்பழங் களைக் கண்டதும் பசி உணர்வு கொண்டார். உடனே அகக் கண்ணால் உண்மை உணர்ந்தார். தம் தவத்திற்கு அமரர்கோன் இடையூறு செய்ய விரும்புகிறான் என்றுணர்ந்து அவ்வைந்து இலந்தை மரங்களையும் இலை காய்கனி அற்றுப் போகுமாறு தம் தவ ஆற்றலால் சபித்து விட்டார்.

ஏனெனில் அப்பழங்களைத் தின்பவர் ஆசைக்கு அடிமையாய் சிற்றின்பச் சேற்றில் ஆழப் புதைந்து அதனின்று கரையேறுவதென்ப தில்லை. மீண்டும் கடுந்தவம் செய்கையில் சூரியன் தோன்றி லக்ஷ்மி தீர்த்தத்தில் நியம நிஷ்டையுடன் நீராடி சுமங்கலி பூசை செய்து உறுதியுடன் தவம் மேற்கொள்ளுமாறு கூறினான். அவர் தம் கடுந் தவத்திற்கு அஞ்சிய தேவர்கள் தேவர்கோனுடன் நரஹரியை நண்ணி விசுவாமித்திரருக்குப் பிரம்மத்தன்மை அளிக்குமாறு வேண்டினர். அவரும் வசிஷ்டமுனிக்குக் கட்டளை இட விசுவாமித்திரர் வசிஷ்டர் வாயால் "பிரம்ம ரிஷி" என்று அழைக்கப்படவும் பெருமகிழ்ச்சி அடைந்தார். மேலும் நரஹரியின் ஸாலோக்கியம் என்னும் பதவியை அடைய விரும்பி கடிகாசலத்தை மூன்று முறை வலம் வந்து மேலும் தவம் புரிந்தார். அதனாலுவந்த நரசிங்கப் பெருமான் ஸாலோக்கியப் பதவியைத் தந்தருளினார். இவ்வாறு கடிகைமலையில் தவம் செய்து

நரசிங்கப் பெருமானை முறையாக வழிபட்டதால் விசுவாமித்திரர் என்னும் மன்னர் பிரம்மத்தன்மையும் ஸாலோக்கிய வாசத்தையும் பெற்றதல்லாமல் ஸப்தரிஷிகளில் ஒருவராய் என்றும் நரசிங்க சுவாமியை ஆராதித்து வருகிறார்.

**வாமதேவர் வரலாறு :**

கிருதயுகத்தில் 'மஹாதபஸ்' என்னும் முனிவரொருவர் இருந்தார். அவர் தம் மகனுக்கும் சிஷ்யர்களுக்கும் வேதவேதாங்களை முறைப்படி கற்பித்து முடித்தார். அவருடைய மகன் வாமதேவர் என்பார் தனக்கு வேதவேதாங்களை ஓதுவித்த தந்தைக்கு குருதட்சணையாக என்ன தருவது எனத் தந்தையிடமே விருப்பம் கேட்டார். தந்தை மறுத்திடவும் தனயன் வாமதேவர் மிக வற்புறுத்திக் கேட்டதால் மஹாதபரும் அடுத்துவரும் பங்குனி மாதத்தில் தம் தந்தையார் சிராத்தம் வருவதாகவும் அதற்கு அமுதம் கொண்டு வந்து உதவினால் நன்றென்றும் கூறினார். வாமதேவரும் ஓமெனக் கூறிப் புறப்பட்டார். ஆயினும் அமுதம் பெறும் முறையறியாது குழம்பினார், தம் தந்தைக்கும் குருவான அகஸ்திய முனிவரிடம் சென்றால் அவர் அமுதம் கொணரும் வழி கூறுவார் எனக் கருதி அகத்தியர் இருக்கு மிடம் நாடிச் சென்றார்.

அகஸ்திய மகரிஷி கடிகாசலத்தின் ஒரு மலையான கிரிகை ரிகத்தில் தவம் செய்து வந்தார். அவரை அடைந்து வணங்கி வழி பட்ட வாமதேவர் தம் தந்தை செய்யவிருக்கும் பித்ருசிரார்த்தத்திற்கு அமுதம் உதவுவதற்கான உபாயம் கூறிடுமாறு பணிவுடன் வேண்டினார்.

அகத்தியர் அனுமனை பூசித்து அமுதம் பெறுமாறு வாம தேவருக்கு கூறினார்.

**அனுமன் வரலாறு**

மந்தரமலையில் வாயுதேவன் அஞ்சனாதேவியுடன் சேர்ந்து மகிழ்ந்தான். அவர்க்கு ஆஞ்சநேயர் பிறந்தார். மருத்தின் புத்திரரான மாருதி பிறந்தபோதே பெரும்பசி கொண்டவராய் கீழ்வானில் உதய மாகும் சூரியனை மாதுளங்கனியென்று கருதி அதனைப் பறிக்க அதன் மீது தாவிப் பாய்ந்தார். அதுகண்டு தேவர்கள் மருண்டு நின்றனர். தம் அருகில் வந்த மாருதியை சூரியன் தேன் நிறைந்த தாமரைக் கொடியால் தடவிக் கொடுத்து சோர்வினை போக்கினான். வேதம்

வியாகரணம் முதலிய கல்விகளை கற்பித்து தன் உண்மை கூறித் திருப்பி அனுப்பினான். அதுமுதல் நவவியாகரண பண்டிதன் ஆனான். மேலும் சூரியன் மாருதிக்கு, அவனை நினைந்து துதிப் போர்க்கு அளவற்ற ஆற்றல் புகழ், மனத்துணிவு, அச்சமின்மை உறுதியான தேக ஆரோக்கியம், அறிவுடமை, சொல்வன்மை ஆகிய அனைத்தையும் தரவல்ல ஆற்றலையும் அருளினார். இவற்றையே புத்திர் பலம் யசோ தைரியம், நிர்பயத்வம் அரோகதா" அஜாட்யம் வாக்படுத்வம்ச ஹனுமத் ஸ்மரணாத் பவேத்" என்பர் முன்னோர்.

மற்றொருமுறை சந்திரன் உதயமாகும்போது அதன்மீது மாருதி தாவி எழப் பாய்ந்தார். சந்திரன் பனிமழை பொழிந்து மாருதியை குளிரச் செய்தான். அவ்வழி ஐராவதமேறி வந்த தேவர் கோனான இந்திரனை அண்டித் தன்னைக் காக்க வேண்டினான். இந்திரன் தன் வஜ்ஜிரப் படையால் மாருதியின் கன்னப்பகுதியில் ஓங்கி அறைந்தான். அதனால் மூர்ச்சையுற்ற மாருதியைக் கண்ட வாயு தேவன் மனம் வருந்தினான். கோபம் கொண்டு உலகில் காற்றில்லாமல் இருக்கச் செய்தான். இந்திரன் மாருதியைப் போற்றிப் புகழவும், மாருதி மூர்ச்சை நீங்கச் சந்திர மண்டலத்தை நெருங்கினான். இந்திரனின் வஜ்ஜிராயுதத்தால் ஹனுவில் அடிபட்ட தழும்பு நின்றமையால் மாருதிக்கு ஹனுமான் எனப் பெயர் வந்தது. தன்னிடம் வந்த ஹனுமனின் அரிய செயலுக்கு வியந்த சந்திரன் காணிக்கையாக அமுத கலசத்தை தந்தான். அனுமனும் அதனை அவனிடமே வைத்துவிட்டு வேண்டும்போது கேட்டுப் பெருவதாகக் கூறி மண்ணுலகிற்கு வந்து சேர்ந்தார்.

**ஹனுமன் கடிகை மலைக்கு வருதல் :**

மாருதி கடிகை மலைக்கு வந்து நரசிங்கப் பெருமானை நோக்கிச் சங்கும் ஆழியும் பெறக் கடுந்தவம் புரிந்தார். தம் பெயரால் ஒரு தீர்த்தத்தையும் உண்டாக்கி அதனை அனுமத்தீர்த்தம் என்று புகழடையச் செய்தார்.

**ஔத்தாலிக முனிவர்க்கு அனுமன் அருள் புரிதல் :**

ஔத்தாலிகர் என்னும் முனிவர் பசுச் செல்வத்தை விரும்பி நரசிம்மனை நோக்கி தவம் புரிந்து வந்தார். அவனது அனுமதிபெற்று அனுமனை பலவாறு போற்றும் ஒரு துதிமாலையை இயற்றினார். ஔத்தாலிகரின் துதியை கேட்ட அனுமார் மிக மகிழ்ச்சி அடைந்தார். அத்துதி நூல் கொண்டு அனுமனை துதித்தால் நல்லறிவு, ஆயுள்,

ஆரோக்கியம், பெருஞ்செல்வம் முதலிய எல்லா நன்மைகளும் உண்டாம். அஞ்சனை மைந்தனை அடிபணிந்தோர் வறுமை நீங்குவர். பாவம் அற்ப ஆயுள் மரணம் உண்டாகாது.

ஔத்தாலிகரின் புகழுரை கேட்ட அனுமன் அவர் வேண்டும் வரம் யாதெனக் கேட்டார். அவரிடத்தில் அழிவில்லாத பக்தி வேண்டிய முனிவர்க்கு அப்படியே ஆகுக என்று அருள் புரிந்தார். ஆஞ்சநேயர் மேலும் அம்மலைத் தாழ்வரையில் விளங்கும் ஒரு நீர் நிலையைக் காட்டி அதில் அனுமன் தனது நேமியினால் புனிதப்படுத்த வேண்டவும் அவ்வாறே அனுமன் அத்தீர்த்தத்தை தமது நேமியால் தொட்டு சக்கரத்தீர்த்தம் என்று பெயரிட்டார். இவ்வாறு ஔத்தாலிக முனிவர் பசுச் செல்வத்தையும் பிறவற்றையும் அனுமன் காரணமாக பெற்று மகிழ்ந்தார்.

**அகத்தியரது ஆணை :**

கடிகை மலையின் கிழக்கு மலை உச்சியில் அனுமன் தவம் செய்கிறார். வேண்டியவர்க்கு வேண்டியன யாவையும் வேண்டியபடி கிடைக்க அருள்புரிய வல்லவர் அஞ்சனா புத்திரர். அவரது பெயரில் அங்கு அனுமத் தீர்த்தம் என்று ஒன்று உள்ளது. ஞாயிற்றுக்கிழமை தவறாது அதில் நீராடி அனுமனை சிந்தை செய்தால் அவர் அமுதமும் தந்தருள்வார் என்று கூறி கடிகை மலையின் பெருமையை எடுத்துறைத்தார் அகத்தியர்.

**கடிகை மலையின் பெருமை :**

கடிகை மலையைச் சுற்றிலும் பதினான்கு சிகரங்கள் உள்ளது. கிழக்குப் பகுதியில் நான்கு. தெற்கில் ஒன்று. மேற்கில் மூன்று. வடக்கில் மூன்று வடகிழக்கில் மூன்று என்று அமைத்துள்ளன. கடிகை மலை கிருதயுகத்தில் பொன்மயமாயும், திரேதாயுகத்தில் வெள்ளிமலையாயும், துவாபரயுகத்தில் தாமிர வண்ணத்துடனும், கலியுகத்தில் கற்பாறையாயும் விளங்கும். கிரிகைரிகத்தின் மேற்குப் பக்க மலையில் ஏக சிலா பர்வதத்தின் உச்சியில் ஹேமகோடி என்னும் பொன்னாலான விமானம் ஒன்று உண்டு. அவ்ஹேமகோடி விமானத்தில் ஹிரன்யகசிபுமகன் பிரஹலாதன் வேண்டுகோளுக்கிணங்கி அச்சம் தரும் வடிவம் நீங்கி அழகியான்தானே அணியுருவம் தானே என்று போற்று முறையில் நரம் கலந்த சிங்க வடிவுடன் யோக நிலைத்தோற்றத்தில் யோக நரசிங்கனாய்த் தோன்றி அருளினார். தன்னைக்குறித்து தவம் புரிந்தவசிஷ்டர், கச்சயபர், அத்திரி, ஜமதக்னி

கௌதமர், பரத்வாஜர் விசுவாமித்திரர் ஆகிய ஏழு தவமா முனிவர்களுக்கு கடிகைப் பொழுதில் மோட்சம் அளித்த காரணத்தால் அம்மலை கடிகாசலம் எனப் பெயர் பெற்றது.

**கிரி பிரதக்ஷிணம் :**

அகத்தியரை வாமதேவர் கடிகை மலையை அடைந்து செய்ய வேண்டுவன குறித்துக் கேட்டபொழுது கடிகை மலையை வலம் வந்து தவம் புரியத் தொடங்கவேண்டும் என்றார். கடிகை மலையை வலம் வருவதால் அளவற்ற நன்மைகள் உண்டாம். ஒன்றை அடைய விரும்புகிறவர் முதலில் கடிகை மலையை வலம் வருதல் வேண்டும். பிரம்மதீர்த்தம் முதலிய குளங்களில் நீராடியபின் நியமநிஷ்டையுடன் வலம் வருதலை மேற்கொள்ள வேண்டும். மலையை வலம் வருவதற்கு இருவழிகள் உள்ளன. ஒன்று மஹாபிரதக்ஷிணம் என்றும் மற்றொன்று ஆந்தர பிரதக்ஷிணம் என்றும் கூறப்படும்.

முதலில் பிரம்மதீர்த்தத்தில் நீராடி அக்னி தீர்த்தம் சோம குண்டம் பத்மஸரோவரம் வால்மீக தீர்த்தம், வஜ்ர தீர்த்தம் முதலிய வற்றில் நீராடி கடிகை மலையை வலம் வருதல் மஹாபிரதக்ஷிணம் எனப்படும்.

பிரம்மதீர்த்தத்தில் நீராடிவிட்டு பைரவ தீர்த்தம் ஹலாவர்த்த தீர்த்தம், வராஹதீர்த்தம், புண்டரீக தீர்த்தம், கருட பாபவிநாசன அமிர்த குண்டவாம ரத்ன வசிஷ்டாதி தீர்த்தங்களிலும் லக்ஷ்மி தீர்த்தத்திலும் நீராடி கடிகைமலையை வலம் வருவது ஆந்தர பிரதக்ஷிணம் எனப்படும் உட்சுற்று ஆகும்.

கடிகை மலை வலம் வருதலைச் செய்து பிரமன் படைப்புத் தொழிலையும் குபேரன் நவநிதிக்கிழமையும், இந்திரன் வாணவர் தலைமையும் பெற்றுச் சிறந்தனர்.

**வாமதேவர் கடிகாசலத்திற்கு வருதல் :**

அகஸ்தியர் ஆணையைத் தலைமேற்கொண்ட வாமதேவர் மகிழ்ச்சியுடன் கடிகாசலத்தை நோக்கி நடந்தார். அனுமத்பர்வதத்தை அடைந்தார். நியம நிஷ்டையுடன் ஒருமாத அளவு தவம் செய்வதாக உறுதி பூண்டார். முதலில் பிரம்ம தீர்த்தத்தில் நீராடி அகஸ்தியர் கூற்றுப்படி இருமுறையிலும் கடிகைமலையை வலம் வந்தார். கர்ப்பிணிப் பெண் அடிமேலடியிட்டு நடப்பதுபோல் வலம்

வரும் போது அடிமேலடிவைத்தே நடந்து வலம் வந்தார். அனுமத் பர்வதத்தின் வடக்கில் சிறுகுடில் அமைத்துக்கொண்டு வேதமா முனிவர்களுடன் அனுமனைக் குறித்து தவம் புரிந்தார். புலன்களை அடக்கித் தவம் புரிந்தார். அவ்வாறு தவம் புரியும் நாளில் ஞாயிற்றுக் கிழமையுடன் கூடிய மாசி மாத பௌர்ணமி வந்துற்றது. அடுத்து வரும் பங்குனி மாதத்திற்குள் அவர் தந்தைக்குக் கூறியபடி அமுதம் கொண்டு போய் உதவ வேண்டும். அதனை மனத்துள் கொண்ட வாமதேவர் காலையெழுந்து தூயராய் அனுமத் தீர்த்தத்தை அடைந் தார். மும்முறை நீரினை ஆசமனம் செய்து தூயசிந்தையுடன் மேற்கு முகமாய் விளங்கும் சிறிய திருவடியை நாபியளவு நீரில் அமிழ்ந்து வேத மந்திரங்களை ஓதியவாறு முப்பது முறை நீராடினார். பின்னர் கரையேறி அனுமனைக் குறித்து ஸ்தோத்திரம் செய்தார். வாமதேவர் தவத்திற்கு மனம் மகிழ்ந்த ஹனுமர் அவர் வேண்டியபடி அமுதம் தர விரும்பினார். அப்பொழுதே தன்னை வணங்க வந்த சந்திரனைக் கண்டு வாமதேவர்க்கு அமுதம் அளித்திடுமாறு ஆணையிட்டார்.

சந்திரனும் மகிழ்ச்சியுடன் வாமதேவர்க்கு அமுத கலசத்தை ஈந்தான். அவரும் அதனைப் பணிவுடன் கைகளில் வாங்கிக்கொண்டு அனுமனையும் அனைத்துலகிற்கும் தலைவனாய் விளங்கும் அக்காரக் கனி நரசிங்கப் பெருமானையும் பல்கால் போற்றிப்புகழ்ந்து தம் தந்தை இருப்பிடத்தை நோக்கி வேகமாக நடந்தார். வாமதேவரின் தந்தை மஹாதபஸ் அமுதத்தைக் கொண்டு பித்ருசிரார்த்தம் நிறைவேற்றினார். சொன்னபடி குருதக்ஷிணையாக அமுதத்தைக் கொண்டு கொடுத்த வாமதேவரைப் பலவாறு போற்றி வாழ்த்தினார்.

வாமதேவர் மோக்ஷத்தை விரும்பி மீண்டும் கடிகை மலைக்கு வந்தார். யோக நரசிங்கனைக் குறித்து மோக்ஷம் வேண்டி மாதவம் புரிந்தார். மாதவனும் ஒரு நொடிப் பொழுதில் கடிகை மலை உச்சியில் தோன்றியருளி வாமதேவர்க்கு மோக்ஷம் அளித்தார். வாமதேவர் கடிகைப் பொழுதில் மோக்ஷம் பெற்ற காரணத்தினாலும் கடிகைக்குப் அப்பெயர் வந்தது.

**பிருதுலோமர் பேறு பெற்ற வரலாறு :**

கௌதமரிஷியின் பெண் வயிற்றுப் பேரனாவார் பிருதுலோமர் என்பர். ஆசார ஆஹார நியமம் உடைய அவர் கடிகாசலத்தில் விஷ்ணுஸாலோக்கியம் வேண்டித் தவம் செய்து வந்தார். மூன்று வேலையும் தவறாது காயத்திரி மந்திரம் கூறும் அவர் இடைவிடாமல்

நரசிங்கனைக்குறித்து ஹரிமந்திரத்தால் ஜெபம் செய்து வந்தார். அவர் தம் மனைவியுடன் யோக நரசிம்மன் வீற்றிருக்கும் மலைவழிப் பாதையைச் செப்பனிட்டு வந்தார். மலையேறும் வழியில் முளைத்து மண்டிக் கிடந்த புற்களையும், முட்களையும் அரிவாள் கொண்டு அகற்றும் பணியில் மிக்க முயற்சியுடன் ஈடுபட்டார். அவ்விருவரும் திருப்படிகளைச் செப்பனிடும் தொண்டில் தம்மை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டதைக் கண்ட தவமாமுனிவர்கள் அவர்களை மகிழ்ந்து பாராட்டினர். பிருதுலோமர் அம்முனிவர்களை நோக்கி, "ஐயன்மீர்! காயத்திரி மந்திரம் எல்லா நன்மையும் தரவல்ல தென்பர், அதனிலும் சிறந்தவை ஹரி மந்திரமும், ஹரிபக்தியும் என்பர்: பிரம்மஞானிகளின் ஆசிமொழி இவ்வனைத்திலும் சிறந்த தென்பர் பெரியோர். ஆதலால் பிரம்ம ஞானிகளான நீவிர் எமக்கு விஷ்ணுஸாலோக்கியம் கிடைக்க அருள்புரிய வேண்டும்" என்று பணிவுடன் விண்ணப்பித்தார், அம்முனிவர்களும் நரசிங்கனிடம் அதனை விண்ணப்பிக்க நரசிங்கப்பெருமான் பிருதுலோமரும் அவர் மனைவியும் விஷ்னுஸாலோக்கியம் புகுமாறு செய்தார். கடிகமலை வழிப்பாதைகளை செப்பம் செய்கிறவர்க்கு அனைத்து நன்மையும் அருள்வான் அழகிய சிங்கன். அத்தொண்டினைச் செய்ய இயலாத வரும் பிருதுலோமரின் வரலாற்றைக்கேட்ட அளவில் அளவிறந்த நன்மை அடைவர்.

**கடிகைமலை சிந்தாமணி மலை ஆதல் :**

வெங்கதிரோன் குலத்திற்கோர் விளக்காய்த் தோன்றிய சக்கரவர்த்தித் திருமகன் இராமனின் மனைவி சீதையை, அரக்கன் கவர்ந்துசென்றான் என்று கேட்ட இராமனின் தம்பி பரதன், இராமனுக்கு உதவி புரியும் எண்ணத்தினால் கடிகைமலை அருகே நாற்படையுடன் வந்து சேர்ந்தான். அங்கு பரத்துவாஜ முனிவரது ஆச்சிரமத்தைக்கண்டு தன் படைகளைத் தொலைவில் நிறுத்திவிட்டுத் தம்பி சத்துருக்கனுடன் பரத்துவாஜ முனியைககண்டு வணங்கினான். பரதன் வந்த கருத்தை உணர்ந்தறிந்த பரத்துவாஜ முனி தேவகாரியத் திற்காகத் தோன்றிய இராமன் இராவணனைப் போரில் கொன்று தன் மனைவி சீதையுடன் வானர வீரர்கள் சூழ விரைந்து திரும்பி வருவதையும் கூறி நந்திக கிராமம் செல்லுமாறு பணித்தார். தொலை வழி நடந்த துன்பம் தீரப் பரதனுக்கும் அவனது நால்வகைப் படைக்கும் கடிகேசன் அருளால் மிகச்சிறந்த விருந்தளித்து மகிழ்வுறச் செய்தார். காட்டில் வாழும் முனிவர் நாட்டாரும் இட இயலாத் விருந்தளித்தமை குறித்து வியந்த பரதனை நோக்கிக் கடிகைத் தடங் குன்றின்மேல் அக்காரக்கனி அமர்ந்துள்ளான். அம்மலையின்

**சத்ருஞ்செயன் புத்திரலாபம் :**

*புண்ணியபுரத்தினை சத்துருஞ்செயன் என்பான் நீதிநெறி வழுவாது ஆண்டு வந்தான். எல்லாச் செல்வமிருந்தும் மகப்பேறாகிய செல்வம் இல்லாது மனம் கவன்றான். அனைத்தையும் வெறுத்துத் தன் மனைவியுடன் காச்யபமுனியை நாடிச் சென்றான். அவரடி பணிந்து தன் மனக்குறையை எடுத்துரைத்தான். அவர் கடிகை மலைக்குச் சென்று அங்கு புத்ர காமேஷ்டியாகம் செய்யுமாறு கூறினார். காசியபரின் அனுமதியைப் பெற்றுப் பக்தர்களும் பகவர் களும் பழமொழி வாய் முனிவர்களும் வாழும் கடிகையில் நரசிங்கனைக் குறித்து மகப்பேறு வேண்டி சத்ருஞ்செயன் புத்ரகாமேஷ்டியாகம் செய்தான். பரந்தாமன் கருணையாலும் பரமனடியார் அருளாலும் மகப்பேற்றை அடைந்து மனைவி மக்களுடன் பலகாலம் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து இறுதியில் வானுலகம் புக்கான்.*

**பிங்களகன் எனும் மாலை தொடுப்பவர் செய்தி :**

*பிங்களகன் என்னும் வணிகன் மற்றெச்செல்வம் பெற்றிருப் பினும் மக்கட் செல்வம் இல்லாமையால் ஊரவரால் பழிக்கப்பட்டான். பரமவைஷ்ணவ பக்தன் "வரதந்து" என்ற தன் குலகுருவிடம் சென்று தன் குலம் தழைத்தோங்க வழிகூறுமாறு வேண்டினான். வரதந்து முனிவரும் கோபால மந்திரத்தை உபதேசித்து கடிகை நாதனுக்கு நற்றொண்டு புரிக எனக் கூறினார். வரதந்துவின் ஆணைப்படி பிங்களகன் கடிகைமலையை வந்தடைந்தான். புத்திர ஸம்பத் வேண்டி நரசிங்கப் பெருமானை நோக்கித் தவம் செய்தான். புனித நீர் நிலைகளில் நியமத்துடன் நீராடி கடிகைமலையை மஹா பிரதக்ஷிணம், ஆந்திர பிரதக்ஷிணம் முதலியன செய்து கோபால மந்திரத்தை முப்போதும் ஜெபித்து வந்தான். விரைவில் நரஹரியின் நல்லருளால் புத்திர பௌத்திரச் செல்வங்களும் பெற்று மகிழ்ந்தான்.*

*போகங்களால் சுகமெய்திய அவன் மோக்ஷத்தில் ஆசை கொண்டான். வரதந்துவின் கட்டளைப்படி கடிகேசனுக்குத் தன் மனைவியுடன் மலர்களைத் தொடுத்து மாலை கட்டி அளிக்கும் நல்ல தொண்டினை மேற்கொண்டான். திருமாலுக்கு மிகவும் உகப்பான திருமாலை தொடுத்து ஸமர்பிக்கும் தொண்டினை மிக்க மகிழ்ச்சியுடன் செய்து வந்தான்.*

அறவோர்க்கு அளித்தும் அந்தனர் ஓம்பியும் திருமாலடியார்களுக்குத் தன்னாலான பணிகளை உகப்புடன் செய்து வந்தான். ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கண்டால் எம்பிரான்தன சின்னங்கள் இவர் இவரென்று மகிழ்ந்து, தொழுது, வலம் வந்து, தன்னால் இயன்ற அளவிற்குத் தான தருமங்கள் செய்து உகப்பித்தான். திருத்துழாய் கொண்டும் செண்பகமல்லிகையோடு செங்கழீமுர் இருவாட்சி எண்பகர் பூவும் கொண்டும் மாலை கட்டித் திருமாளுக்கு அநன்யப்ரயோஜனாய் மாலை சாத்தி வந்த அவனை 'மாலாகாரர்' என்றே அழைத்தனர்.

ஒருநாள் வான்வழிச் செல்லும் நாரதமுனியின் வீணையினின்று நழுவிய நரசிங்கப் பெருமானின் திருத்துழாய் மாலை இழிந்து வந்து அவன்தலைமுடியில் படிந்தது. அப்பொழுதே பரமவைஷ்ணவனாய் பிங்களகன் விஷ்ணுலோகம் அடைந்தான். பிங்களகனின் வரலாறு அற்புதமானது.

**இந்திரன் இந்திரபதவி பெறுதல் :**

அனுமத்புரியில் ஸத்தியவிரதன் எனும் பரமவிஷ்ணுபக்தன் இருந்தான். அவன் நற்குண நற்செயல்கள் நிறைந்தவன். புலன்களை அடக்கிச் சித்த சுத்தியுடன் தவம் புரியும் அவன் கடிகைமலையை வலம் வருதலைத் தவறாது மேற்கொண்டான். மலைவலம் வந்த பின்னரே பிறவேளையில் கவனம் செலுத்துவான். பரந்தாமன் அடியோர்களையும் பெரியோர்களையும் கண்டால் வேரற்றமரம்போல் அவரடி வீழ்ந்து வணங்குவான். நாள்தோறும் திருமலை ஏறிச் சென்று நரசிம்மனைத் தொழுவதைத் கடமையாகக் கொண்டிருந்தான். ஒருநாள் அவன் மலையேறும்போது மிகவும் களைப்பு அடைந்தான். அவனுக்கு விசிறி வீசிக் களைப்பு நீக்கி மகிழ்வுறுத்தினான் இந்திரன். பரம வைஷ்ணவனுக்குத் திருஆலவட்ட கைங்கரியம் செய்த காரணத்தால் தான் இந்திரன் தேவர்களுக்குத் தலைவனானான்.

**நிசாகர முனிவர் தவம் :**

கடிகையின் வடக்கில் நரசிம்மனை நாடித் தவம் புரியும் நிசாகர முனிவரின் ஆச்சிரமம் ஒன்று உண்டு. அவர் உலகம் நிறைந்த புகாழாளர். சந்திரனைப் பிரியாது ரோகினி அவனுடன் இருப்பது போல் அவருடைய தர்மபத்தினியும் அவரை இணைபிரியாது அவருக்கு பணிவிடை செய்து வாழ்ந்தாள். அவர் சிஷ்யர்களுக்கு வேதம் ஓதுவித்தும் வேள்வி செய்தும் தவம் புரிந்து வந்தார். அவர்தம்

சிஷ்யர்களில் கௌத்ஸர் என்பார் ஒருவர். தேவதாவிச்வாஸத்துடன் தம் ஆசாரியர், ஆசாரிய பத்னிக்குத் தொண்டு செய்து வந்தார். அவர் ஒருநாள் காட்டில் அற்புதக் காட்சியொன்று கண்டார். அதனைத் தம் குருநிசாகர முனிவரிடம் தெரிவித்தார்.

**கௌத்ஸர் கண்ட காட்சி :**

குருவுக்குரிய பழம் முதலியன கொண்டு வருவதற்காக கௌத்ஸர் காட்டுள் சென்றார். அவற்றை எல்லாம் தேடி அமைத்துக் கொண்டவர் பகல் வந்துற்றதால் பாபவிநாச தீர்த்தத்தில் நீராடிவிட்டு நித்யக் கடமைகளை செய்து கொண்டிருந்தார்.

முன்பின் பார்த்திராத அற்புத வடிவமைந்த மானொன்று நீர் குடிக்க முற்பட்டு மருண்ட பார்வையுடன் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்டு பெருவியப்படைந்தார். அவ்வளவில் மலைக் குகையினின்று மூரிநிமிர்ந்து முழங்கிக் கொண்டு புறப்பட்ட சிங்க மொன்று மலைமுகடுகளெல்லாம் எதிரொளிக்குமாறு பேரொளியுடன் அம்மான் மீது பாயக் கண்டார். நடுநடுங்கிப் போன அம்மானைக் கௌத்ஸர் தொட்ட அளவில் அது மறைந்துவிட்டது. சிங்கமும் சிங்க வடிவம் நீங்கி அரக்கன் ஒருவன் வடிவில் நின்று சற்று நேரத்தில் பேரொளிப் பிழம்பாக மாறிற்று. பின்னர் வானில் சூரியமண்டலங்கள் போல் பொன் நிகர் விமானங்கள் தோன்றின. வைணவச் சின்னம் தரித்த பல இளைஞர்கள் வரிசையாக அச்சுந்தர உருவத்தை வரவேற்க அவனும் அவர்களுடன் சேர்ந்து மறைந்தான். சற்று நேரத்தில் ஏதும் அங்கு நிகழ்ந்ததாகத் தெரியவில்லை. அதனையெல்லாம் கண்டு சிந்தை கலங்கிச் செய்வதறியாது குருவின் ஆச்சிரமத்திற்குத் திரும்பினார் கௌத்ஸர்.

**ஹரிதத்தன் சாப விமோசனம் பெற்றது :**

நிசாகர முனிவர் கொத்ஸர் கூறியதைக் கேட்டு தவ ஆற்றலால் நிகழ்ந்ததை அறிந்து கொத்ஸருக்கு உண்மையை எடுத்துரைத்தார்.

வைகானச குலத்தில் புண்யதமர் என்றொரு விஷ்ணுபூஜகர் இருந்தார். அவர் மிகவும் ஆசாரசீலராய் திருமாலடித் தொண்டு செய்து வந்தார். இறைவன் இன்னருளால் அவருக்கு ஒரு மகன் பிறந்தான். நற்குண நற்செயல்கள் நிறைந்த ஹரிதத்தன் என்ற அவனை தந்தை மிகவும் விரும்பினார். மகனும் தந்தை மனம் கோணாதவாறு நல்லொழுக்கத்துடன் விளங்கினான்.

புண்யதமர் ஹரிதத்தனை குல வித்தையான வைகானஸ ஆகம சாஸ்திரங்களைக் கற்றுக் கொள்ள தூர்வாச முனிவரிடம் ஒப்படைத்தார். அவனும் அவரிடம் ஸகல சாஸ்திரங்களையும் பிழையறக் கற்று முடித்தான். ஆனால் குருதக்ஷிணை கொடாது கல்வியை முடித்த அவனைக் குறித்து தூர்வாச முனிவர் வெறுப் படைந்தார். தக்ஷிணை இல்லாமல் யாகமும், குருதக்ஷிணை இல்லாமல் கற்ற கல்வியும் பயனில்லை என்றன்றோ பெரியோர் கூறுவர். "கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக் கண் தப்பித் தான் பொருளே போல் தமியவே தேயுமால்" என்றன்றோ கூறப் பட்டுள்ளது.

ஆதலால் வெறுப்புற்ற தூர்வாசர் ஹரிதத்தனை அரக்கவடிவில் சிலகாலம் அலைந்து திரிந்து கடிகைமலைப் பகுதியில் நிசாகர முனிவர் ஆசிரமத்தருகே நல்லோர் தரிசனத்தால் சாபம் நீங்கி விஷ்ணுலோகம் அடைவானாக என்று சபித்து விட்டார். அரக்க வடிவில் திரியும் அவன் எவ்வுருவைக் காண்கிறானோ அவ்வுருப்பெற்று இன்புறுமாறும் கூறினார். ஆதலால் மானைக் கண்டு இன்புற முற்பட்ட சிங்க வடிவில் இருந்த அவன் நிசாகர முனிவர் ஆசிரமத்தருகே பாபவிநாச தீர்த்தத்தை பருகியதாலும் கௌத்ஸரது தரிசனத்தாலும் பொல்லா வடிவு நீங்கிப் புண்ணியலோகம் பெற்றுப் போனான் என்று ஹரிதத்தன் வரலாற்றை எடுத்துக் கூறினார். நல்லோர் இணக்கமும் பார்வையும், பாபவிநாச தீர்த்தமும், பெறற்கரிய நன்மை பயங்கும் என்பது உண்மை.

**ஔர்வர் வரலாறு :**

இலங்கைத் தீவில் ஔர்வர் என்றொரு முனிவர் இருந்தார். அவர்தம் மனைவி சுருதகீர்த்தி என்பாள் கற்பிற் சிறந்த அருந்ததி போன்று அவருக்குத் தக்க பணிவிடை செய்து வாழ்ந்து வந்தாள். பரமவைஷ்ணவரான ஔர்வர் புத்திரப் பேற்றை விரும்பிக் கடுந்தவம் செய்தார். நியம நிஷ்டையுடன் கடுந்தவம் புரியும் அவருக்காக வேண்டி பிற முனிவர்கள் கூட்டமாய்க் கூடி ஸ்ரீ மந் நாராயணனை நினைந்து தவம் செய்ய இறைவனும் அவர் முன் தோன்றி அவர் வேண்டுவது யாதென வினவினார். ஔர்வ முனிக்குப் புத்திரப்பேறு அளித்த ருளுமாறு அம்மாமுனிவர் பரந்தாமன் பாதம் பணிந்து வேண்டினர். அதற்கு வைகுண்ட வாசன் ஜம்பூத்தீவில் கடிகாசலம் என்றொரு பகுதி இருக்கிறது. அங்கு ஏகசிலா பர்வதத்தின் ஹேமகோடி விமானத்தில் தான் கோயில் கொண்டிருப்பதாகக் கூறி அதன் மேற்கு திசையில் சிலாகூட மலையில் அத்ரி முனிவர் அனுசூயையுடன் மகப் பேற்றினை விரும்பித் தம்மைக் குறித்துத் தவம் செய்வதாகவும், அத்ரி முனிவரிடம் சென்று நல்லாசி பெறுமாறு ஔர்வர்க்குக் கூறுமாறு கூறி மறைந்தார்.

நாராயணன் அருளியதைத் தவமாமுனிவர்கள் ஒளர்வரிடம் கூறினர். ஒளர்வரும் தம்மனைவியுடன் புறப்பட்டு இலங்கையிலிருந்து காதம் பல கடந்தும் காடுமேடு நடந்தும் கடிகை மலையைச் சென்று அடைந்தார். அங்கு அத்திரி முனிவர் ஆசிரமத்தை அடைந்து அவரை வணங்கி இறைவன் அருளியதை எடுத்துரைத்தார். அத்திரி முனிவர் ஆணைப்படி வஜ்ரதீர்த்தத்தில் நீராடி நரசிங்கப் பெருமானை நினைந்து தவம் மேற்கொண்டார். ஒளர்வருக்கு சிலகாலம் கழித்து ஒரு மகன் பிறந்தான். அவனுக்கு 'உக்கிரதபஸ்' என்று பெயரிட்டு மகிழ்ந்தார்.

பின்னர் சிலகாலம் கழித்து அத்திரி அனுசூயை தம்பதிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவளுக்கு சீலவதி என்று பெயர் இட்டுச் சீராட்டிப் பாராட்டி மகிழ்ந்தனர்.

அத்திரியும் அனுசூயையும் தம்மகள் சீலவதியை ஒளர்வர் மகன் உக்கிரதபஸிற்குத் திருமணம் செய்து கொடுத்தார்கள். உக்கிரதபஸ் சீலவதியை அழைத்துக் கொண்டு தெற்குத் திசையில் விளங்கும் தாமிரவருணி நதிக்கரையில் குடிலமைத்துக் கொண்டு வாழத் தொடங்கினான். அங்கு அவன் தன் குல ஒழுக்கம் கெட்டுப் பொது மகளிர் தொடர்புடன் வாழு நாளில் பல கொடிய நோய்க்கு ஆளானான். உடல் முழுதும் பெருவியாதி பரவப்பெற்று புண்ணும் புழுவும் தோன்றி கெட்ட நாற்றமடிக்கத் தொடங்கிற்று

அவ்வருவருப்பான நிலையிலும் முகம் கோணாமல் நெஞ்சு வெறுக்காமல் அவன் மனைவி சீலவதி அவனுக்குப் பணிவிடைகள் செய்து வந்தாள். அவனோ துர்மானியாய் அவளை வெறுத்து இழித்தும் பழித்தும் பேசி வந்தான். கண்டவர் எல்லாம் வெறுத்து ஒதுக்க மரணம் நிச்சயம் என்ற நிலைக்கு வந்தபோது சீலவதி செய்வ தறியாது திகைத்தாள். ஒருநாள் தெய்வக்குரல் ஒன்று அவளை நோக்கி 'உக்கிரதபஸ் பிணி நீங்கிக் கட்டுடல் பெற்றுப் பலகாலம்வாழ விரும்பினால் கடிகாசலம் சென்று வஜ்ரதீர்த்தத்தில் நீராடி நரசிம்மனை போற்றிப் பணியுமாறு' கூறியது.

பிறவிக் குருடனுக்குக் கண் கிடைத்தாற் போன்று அவ்வுரை கேட்ட சீலவதி அகமிக மகிழ்ந்தாள். அழுகிப்போன உடலுடன் இருக்கும் தன் கணவனை தோளில் சுமந்தவாறு மென்மையாக வட திசை நோக்கிப் புறப்பட்டாள். நாட்கள் பல ஆயின; நடை தளர்ந் தாள்; கணவன் மூர்ச்சையுற்ற நிலையிலிப்பதைக் கண்டஞ்சினாள்.

தெய்வவாக்கு பொய்யாமோ என்று கலங்கினாள். மறுநாள் பொழுது விடிவதற்குள்ளாகக் கடிகாசலம் சென்று சேரலாம் என்று உறுதி கொண்டிருந்தது வீணாமோ என்று வருந்தினாள். சூரியன் அஸ்தமிக்கத் தொடங்கியது. இரவு இருள் கவியத் தொடங்கியது. அவள் நெருப்பினை மூட்டித் தீக்கடவுளை வழிபட்டு 'இரவு வராதிருப்பதாக' என ஆணையிட்டாள். அதனால் கவியத் தொடங்கிய இருள் அகன்று விட்டது. பகற்காலம் கழியாது வானில் சூரியன் தன் வெம்மை குன்றாமல் ஜொலிக்கத் தொடங்கியது.

ரிஷி முனிவர்கள் அவ்வக்காலத்திற்குறிய கடமைகளை செய்ய முடியாது போயிற்று. மாலையில் சூரியனை வருத்தும் மந்தேஹர் எனும் அசுரக் கூட்டம் பலம் பெற்று அதனை துன்புறுத்தத் தொடங்கியது. தீமைகள் ஓங்கத் தொடங்கின தேவர்கள் அது கண்டஞ்சி சீலவதியின் தாய் அனுசூயையை நெருங்கி அறம் கெட இருப்பதையும், அதருமம் ஓங்குவதையும் எடுத்துக்கூறி சீலவதியைத் தன் ஆணையைத் திரும்ப பெறுமாறு செய்யும்படி வேண்டினர்.

தேவர்கள் வேண்டுகோளுக்கிணங்க அனுசூயை சீலவதி இருக்குமிடம் விரைந்து சென்று அவளைப் பலவாறு ஆறுதல் கூறித் தேற்றி இரவு வர அனுமதிக்குமாறு கூறினாள். சீலவதி ஆணையினால் உலகமே துன்புறுவதையும், தேவர்களும் முனிவரும் நல்லறம் கெடுவதையும் எடுத்துக் கூறிப் பொது நன்மைக்காகத் தன்னலம் விடுமாறு எடுத்துரைத்தாள். தாயின் சொல்லைத் தட்டாது சீலவதி 'இரவு உண்டாகுக' எனக் கூறக்காலச் சக்கரம் முறைப்படி இயங்கத் தொடங்கியது. தேவர் முதலியோர் மகிழ்ச்சி அடைந்தனர். மேலும் தேவ காரியத்திற்கு துணைபுரிந்த அனுசூயையை நோக்கி சீலவதியை அவள் கணவனுடன் வஜ்ரதீர்த்தத்தில் நீராடி நன்மை பெறுமாறு கூறினர். அத்ரி அனுசூயை தம்பதிக்கு முத்தேவரும் தாமே மக்களாக பிறப்பதாகவும் வரம் கொடுத்தனர்.

சீலவதி உக்கிரதபாவுடன் வஜ்ரதீர்த்தத்தில் மூழ்கி நரசிம்மனைக் குறித்துத் தவம் செய்த அளவில் உக்கிரதபஸ் வஜ்ரம் போன்ற உடற்கட்டமைந்த இளைஞனாய் மாறினான். அவ்விருவரும் உறுதியான ஆரோக்கியம் பெற்று மகிழ்ந்தனர். அவ்விருவரும் மக்கட் செல்வமும் பிற செல்வமும் பெற்று நெடுங்காலம் இனிது வாழ்ந்தனர்.

முத்தேவரும் அத்திரி அனுசூயை தம்பதிக்குக் கொடுத்த வரத்தின்படித் திருமாலின் அம்சமாகத் தத்தாத்திரேயரும், பிரமனின் அம்சமாய் சந்திரனும் சிவனின் அம்சமாய் தூர்வாசரும் மக்களாய்ப் பிறந்தான்.

**கச்யபர் தவம் :**

அனுமத் தீர்த்தத்தின் அருகில் தெற்கில் மலைத் தாழ்வரையில் கபிலர் மகன் கச்யபர் தவம் செய்து வந்தார். அவர் மனைவி தரும விரதை கற்பிற் சிறந்த நற்றவ ஒழுக்கம் உடையவள். அவள் தன் கணவனுக்குப் பணிவிடை செய்வதில் தவறாதவள். ஒருநாள் அவருக்காக பழம், கிழங்கு முதலியன பறித்து வரவேண்டிக் காட்டிற்குச் சென்றாள். ஓரிடத்தில் நன்கு பழுத்து முற்றிய |விளாங்கனிகள் வீழ்ந்திருப்பதைக் கண்டாள். மகிழ்ச்சியுடன் அவற்றைப் பொறுக்கி எடுத்துக் கூடையிலிட்டுத் திரும்ப முற்பட்டாள்,

**புலி பேசுதல் :**

அப்போது புலியொன்று அவளை வழிமறித்து மனிதக் குரலில் தன் பசி தீருமாறு தனக்கு ஒரு பழம் தருமாறு வேண்டியது. அதன் பேச்சைக் கேட்ட அவள் வியப்படைந்தாள். ஆயினும் தன் கணவன் பசிதீர்ந்த பின்னரே எதனையும் யாருக்கும் கொடுக்க முடியும் என்று உறுதியாகக் கூறினாள். வேண்டுமெனில் தன் கணவன் பசியார உண்டபின் தானே எஞ்சிய பழங்களைக் கொண்டு வருவதாகவும், புண்டரீக தீர்த்தக் கரையில் அவர் பசியுடன் காத்துக்கொண்டிருப்பார் என்றும் கூறினாள் தருமவிரதை. அதற்குப் புலி தான் ஒரு நாழிகை வரை அவள் வருகைக்குக் காத்திருப்பதாகவும், காலதாமதமாயின் தான் தன்னுயிரை விட்டுவிடும் என்றும் கூறி அவளை விரைந்து திரும்பி வருமாறு வேண்டியது. அண்மையில்தான் புண்டரீக தீர்த்தம் உள்ளதென்று கூறி அவள் புறப்பட்டாள். புண்டரீக தீர்த்தம் என்ற சொல்லைக் கேட்ட அளவில் பூர்வஜென்ம ஞானம் வரப்பெற்ற அப்புலி அவ்வுத்தமியை நோக்கி புண்டரீக தீர்த்தம் இருக்குமிடம் பற்றிக் கேட்டது. அதன் வார்த்தையைக் கேட்டு வியப்புற்ற தருமவிரதை புலியை நோக்கி அதன் வரலாறு கூறுமாறு வேண்டினாள்,

**தருமவிரதன் செய்தி :**

நர்மதை நதிக் கரையில் தருமவிரதன் என்றொரு அந்தணன் தன் மனைவி மக்களுடன் காட்டில் வசித்து வந்தான். வேதவேதாங்களை அறிந்துணர்ந்த அவன் சிஷ்யர்களுக்கு முறைப்படி வேதம் கற்பித்து வந்தான். வேள்விக்காகப் 'பலா இலை பறிக்கச் சென்ற அவன் காட்டில் ஒரு முனிவர் கூட்டத்தைக் கண்டான். அவர்கள் வைதிக நெறியையும், வேதத்தினையும் கைவிட்டு வெறும் தருக்க வாதப் போரில் ஈடுபட்டிருந்தனர். தருமம் அறியாப் பேதைகளான அவர்களைக் கண்டுதருமவிரதனும் உரையாடத் தொடங்கினான்.

அவர்களின் தருக்கவாதத்தில் மிகவும் ஈடுபட்டான். அவன் மனைவி எவ்வளவு எடுத்துரைத்தும் கேளாது பஞ்சமஹாயக்ஞம் யாகம் போன்ற அனைத்தையும் அறவே கைவிட்டான். வேதங்களையும் வேள்விகளையும் துறந்த அவன் ஒருநாள் வியாச முனிவரைக் கண்டான்.

தருமவிரதன் வியாசரைக் குதர்க்கமாக சில பேசிட வெறுப் படைந்த வியாச முனிவர் அவனைப் புலியாகப் போகுமாறு சபித்தார். தருமவிரதன் தன் பிழை பொறுத்தருள வேண்டினான். 'புலி வடிவில் அவனும் அவன் மனைவியும் அலைந்து திரியும்போது கடிகை மலைக்கு வருவர்; அங்கு ஒரு குளத்தில் நீர் குடிக்க இறங்கும்போது நரசிங்கப் பிரான் அருளால் புலி வடிவம் நீங்கிப் புண்ணிய வடிவம் பெறுவர் என்று வியாசர் சாப நீக்கமாகக் கூறினார்,

தருமவிரதனும் அவன் மனைவியும் புலிவடிவில் அலைந்து திரிந்தவராய்க் கடிகை மலைப் பகுதியை வந்தடைந்தனர். வியாசரின் அருளால் நரசிங்கனையும், ஸப்தரிஷிகளையும் நினைப்பவனாய் யாருக்கும் யாதொரு தீங்கும் இழைக்காமல் தன் துணையுடன் வாழ்ந்து வந்தான். பரமன் இன்னருளால் அவர்கள் ஒரு குளத்தைக் கண்டனர். தாகம் தீரத் தண்ணீர் குடிக்க அதில் இறங்கிய அளவில் தற்செயலாக அதில் மூழ்கிப் புலியுரு நீங்கித் தெய்வ வடிவம் பெற்று விஷ்ணு லோகம் சென்றடைந்தனர்.

**கலகண்டன் சாபம் நீங்குதல் :**

தருமவிரதன் வரலாற்றினைக் கூறிய புலி தன் வரலாறு கூறியது. 'தாயே! முற்பிறப்பில் கந்தர்வ நகரத்தில் சித்திரரதன் எனும் கந்தர்வ அரசனுக்குப் பல பிள்ளைகள் இருந்தனர். நான் மூத்த பிள்ளை. என்பெயர் கலகண்டன் ஆகும். எம் தந்தை எங்கட்கு வீணையிசை கற்பிக்குமாறு நாரத முனிவரை வேண்டினான். எங்கட்கு வீணை கற்பிக்கும் நாரத முனிவர் இசை குறித்து கேலி செய்தேன். நாரதன் என் மீது கோபம் கொண்டு இசை அறிந்தும் இசை அறியாதவன் போல் பரிஹாஷம் செய்த காரணத்தால் புலியாகப் பிறக்குமாறு சாபமிட்டார். என் பிழைகளை உணர்ந்து என்னை மன்னிக்குமாறு நாரதரை பலமுறை வேண்டினேன். நாரதரும் எனக்குச் சாப நீக்கமாக கடிகை மலைப் பகுதியில் புலித் தம்பதிக்கு மகனாய்ப் பிறந்து அலையும் நாளில் புண்டரீகதீர்த்தம் அருகே கச்யபமுனிவரின் மனைவி தருமவிரதையைத் தடுத்து விளாங்கனி வேண்டும்போது,

புண்டரிகதீர்த்தம் என்று அவள் கூறுவதைக் கேட்ட அளவில் பூர்வ ஜென்ம நினைப்புப் பெறுவான் என்றும் அவ்வளவில் புலிவடிவம் நீங்கிப் புண்ணிய புருஷனாய் கந்தருவனின் வடிவம் பெற்று விமானம் ஏறித் தண்ணுலகம் புகுவான்' என்று அருளினார். அவ்வாறே கலகண்டன் புலிவடிவம் நீங்கித் தண்ணுலகம் சென்றடைந்தான்.

புண்டரீக தீர்த்தத்திற்குத் தனித்ததொரு பெருமை உண்டு. கார்த்திகை மாதத்தில் நியமத்துடன் நீராடுபவர் பிறவித் துயர் நீங்கி பேரின்ப உலகம் அடைவர். இம்மண்ணுலகிலும் வேண்டியன பெற்றின்புறுவர்.

**விப்பிரசேகரர் வரலாறு :**

விப்பிரசேகரர் என்பார் ஓரந்தனர். அவர் முன்னோர் புஞ்சிக்கியர் முதலியோர் ஆவர். புஞ்சிக்கியர் பிறப்பால் அந்தனரா யினும் மிகவும் முரட்டுத் தன்மை வாய்ந்தவர்களாய் இருந்தனர். இழிசெயலையே மேற்கொண்டு கண்டவரெல்லால் பழிக்கப்படும் நிலைக்கு ஆளாயினர். குலவொழுக்கம் கெட்டு நற்செயலில் சிறிதும் ஆசையில்லாது இழிபழி செயல்களையே மிக விரும்பி அவற்றையே செய்து வந்தனர். ஆசாரியர்களைப் பகைத்த அவர்கள் பிரம்ம பந்துக்கள் என்று பழிக்கப்பட்டனர். அதனால் பிரம்மரிகஷிகள் அவர்களைக் கூட்டமாகப் பிரம்ம குலத்தினின்று விலக்கிவிட்டனர். மிகக்கொடிய அவர்கள் மரணமடைந்தபோது பிசாசுகளாகப் போயினர். அவர்தம் உடல்களைப் பினந்தின்னிப் பறவைகளும் விலங்குகளும் கூடத் தீண்டவில்லை. நாயும், நரியும் அவற்றை தொட மறுத்தன, பருந்தும் தீண்டாப் பாவிகளான அவ்வுடல்களிலிருந்து ஒரு விதமான பொறுக்க முடியாத (துர் நாத்தம்) இழிந்த நாற்றம் எழுந்து காடு முழுவதும் பரவியது. இவ்வழிந்த நாற்றத்தைப் பொறுக்க இயலாத முனிவர்கள் அவற்றைச் சாம்பலாகுமாறு சபித்தனர்.

புஞ்சிக்கியர் வமிசத்தில் பிறந்த தேவலர் என்பவர் இழிநிலை அடைந்த தம் முன்னோர்களைக் கரையேற்ற விரும்பினார். அவர்கள் நன்னெறி பெறுவதற்காக வேண்டி விந்தியமலையில் கடுந்தவம் புரிந்தார். பிரம்மஞானியும் பரம வைஷ்ணவருமான தேவலர் தம் கமண்டலுவின் புனித நீராலும் அச்சாம்பலை கரைத்து முன்னோரை நற்கதி அடையச் செய்ய முடியவில்லை,

தேவலரின் மூத்த பிள்ளை விப்பிரசேகரர், பரம வைஷ்ணவர். அனைவரிடமும் இதமும் பிரியமுமாக நடந்து கொண்டார். அகஸ்திய முனிவரின் சகோதரர் ஆணைப்படி கடிகாசலத்தை வந்தடைந்தார்.

வல்விசரஸ் என்னும் வராஹதீர்த்தக் கரையில் முன்னோர்களைக் கரையேற்றக் கருதி கடுந்தவம் செய்தார். கோபத்தை அறவே விட்டுப் புலன்களை அடக்கியவராய்த் தவம் புரிந்தார். எல்லா உயிர் களிடமும் மிகவும் இரக்கம் கொண்டொழுகினார். வைணவர்களைக் கண்டால் அவர்கள் பாதங்களில் வேரற்றமரம்போல் விழுந்து வணங்கு வார். கடிகைப் பிராணையே நெஞ்சில் கொண்டு கடிகை மலையை வலம் வருதலை தவறாமல் மேற்கொண்டார். திருமலையேறித் திருமாலை வணங்க முற்படும் பாகவதர்களுக்கு விசிறிவீசி களைப்பை போக்குவார். மலைவழிப் பாதையில் முளைத்துக் கிடக்கும் புற்பூண்டுகளைப் பறித்தெறிந்து நல்வழி அமைக்கும் தொண்டு செய்தார், தம் மனைவியுடன் வைஷ்ணவர்களுக்கு திருஅமுது படைத்தும், தம் சக்திக்கு ஏற்பப்பொருள் உதவி புரிந்தும் வணங்கியும் அவர்களின் ஆசிபெற்று இன்பமாக வாழ்ந்தார்.

ஹேமகோடி விமானத்தின்கீழ் வீற்றிருக்கும் நரசிம்மப் பெருமானை சொல்மாலையால் போற்றிப் புகழ்ந்தார். அவர் தம் தொண்டிற்கு மனம் உகந்த நரஹரி விப்பிரசேகரர் வேண்டியபடி அவர் தம் முன்னோர்க்கு மோக்ஷமளித்து அவருக்கும் அருள்புரிந்தார்.

**கயையிலும் சிறந்ததுகடிகை :**

சததர்மன் என்னும் அந்தணன் வில் வித்தையில் நிபுணன், அவன் யவனர் வாழ் பகுதிக்குச்சென்று அவருடன் கூடிக் களித்தான். தன் மனைவி மக்களை மறந்து விற்போரிலும் பிறவற்றிலும் மிக்க ஆர்வத்துடன் ஈடுபட்டான். அவன் தன் மனைவி மக்களை அறவே மறந்தான். வைதிக நெறியைத் துறந்தான். புறநெறி மேற்கொண்டு மதுமாமிசம் போன்றவற்றைக் கைக்கொண்டான். யவன மங்கை ஒருத்தியை மணந்தும் வாழத்தொடங்கினான். தங்களை நினையாத அறவே மறந்த அவனை அவன் தன் மனைவி மக்கள் எப்போதும் நினைந்தனர் அவன் செயலுக்கு வருந்தினர். அவன் மகன் விஷ்ணு தத்தன் என்பான் பிறவியிலிருந்தே மிக நல்லவன். சாத்திரங்களை நன்கு பயின்ற காரணத்தால் தன் தந்தையின் நடத்தைக்கு வருந்தினானே தவிர தந்தைமீது கோபம் கொள்ளவில்லை. "பெற்ற தகப்பன் தரித்திரனோ, பதிதனோ, அங்கஹீனனோ நீசர்க்கு வேலை செய்பவனோ எவனோ ஆக ஆகினும் தந்தை மதிக்கப்பட வேண்டும்" என்றல்லவோ நூல் கட்டளை! பதிதனான சததர்மன் மரண மடைந்தான்.

அறநெறி மறந்து புறநெறியாண்ட சததர்மன் நரகமடைந்தான். அவனை நற்கதி அடையச் செய்ய வேண்டி விஷ்ணுதத்தன் பல நூல்களை ஆராய்ந்தும் பலரோடு கூடியும் விவாதித்தான். யாதவகிரியில் கல்யாணதீர்த்தக் கரையில் தவம் மேற்கொண்டான். ஆயினும் விருப்பம் நிறைவேறவில்லை. புருகுத்ஸர் என்ற முனிவரை அடி பணிந்து தன் தந்தையை நகரச் சேற்றினின்று விடுவிக்க வழிகூறுமாறு வேண்டினான், அவரும் அவன் தன் தந்தையின் அஸ்திக் கலசத்தை ஏந்திச்சென்று கயாஜேத்திரம் அடைந்து கங்கையில் கரைத்து பித்ரு தாப்பணம் செய்தால் கதாதர பகவான் மகிழ்ச்சி அடைந்து அவன் தந்தையின் பாவத்தைப் போக்கி மோக்ஷம் அளித்திடுவான் என்று கூறினார்.

விஷ்ணுத்தத்தன் கயை செல்ல முற்படுதல். அவ்வுரை கேட்ட விஷ்ணுதத்தன் தன் மனைவியுடன் கயாக்ஷேத்திரத்தை நோக்கிப் புறப்பட்டான். அப்போது ஆகாயத்தில் குரலொன்று ஒலித்தது.

**அசரீரி விஷ்ணுதத்தனுக்குக் கடிகையின் பெருமையை எடுத்தரைத்தல் :**

விஷ்ணு தாத்தா! உன் தந்தைக்கு நற்கதி கிடைக்க வேண்டும் எனில் கடிகை மலைக்குச் செல். அங்கு நரசிம்ம தீர்த்தக் கரையில் உன் தந்தைக்கு சிரார்த்தம் செய்தால் அவன் நற்கதி பெறுவான். ஏனெனில் கயாக்ஷேத்திரத்திலும், கடிகாசல க்ஷேத்திரம் பெருமை வாய்ந்ததெனப் பகவானே அருளியுள்ளார். ஒரு முறை தேவர்கள் பிரமன் தலைமையில் கயை கடிகை எனும் இரண்டு க்ஷேத்திரங்களையும் துலாக் கோலில் இட்டு எது புண்ணியம் மிக்கது என்று அறிய முற்படும்போது கடிகாசலம் வைத்த தட்டு கனத்திட நரசிம்ம க்ஷேத்திரமான கடிகையே கயையிலும் பெருமை மிக்கது என்ற முடிவுக்கு வந்தனர். கடிகாசலத்தின் ஏகசிலாமலை உச்சியில் இறைவன் கோயில் கொண்டுள்ளார். அவர் வீற்றிருக்கும் ஹேமகோடி விமானத்திலிருந்து சுற்றிலும் யோஜனை அளவு தூரம் நரசிம்ம க்ஷேத்திரம் ஆகும். அப்பகுதி முழுதும் இம்மை, மறுமை ஆகிய இருமைக்கும் நன்மை தரவல்லதாம பித்ருக்களை நினைந்து நரசிம்ம தீர்த்தக்கரையில் சிரார்த்தம் செய்ய கயையினும் இருமடங்கு நன்மை உண்டாம். நரசிங்கப்பெருமானின் கட்டைவிரலினின்று தோன்றிய தீர்த்தமொன்று நரசிம்ம தீர்த்தம் எனப்படுகிறது. அது கங்கையிலும் புனிதமானது. அத்தீர்த்தக்கரையில் இங்குண மரங்கள் நிறைந்த காடு ஒன்று உள்ளது. நரசிம்மத் தீர்த்தக் கரையில் தானம், தவம்,

தர்ப்பணம் செய்தவர்க்கு மோக்ஷம் கிடைப்பது உறுதி. ஆதலால் நெடுந்தொலைவில் உள்ள கயைக்குச் செல்வதினும் கடிகாசலத்திற்கு விரைந்து செல்" என்று வானில் எழுந்த குரல் கூறியது.

விஷ்ணுதத்தன் ஆகாசாவாணியை ஆண்டவனின் ஆணையாகக் கொண்டு கடிகாசல க்ஷேத்திரத்திற்குச் சென்றான். நரசிம்ம தீர்த்தக் கரையில் தன் தந்தையை நினைந்து ஸ்ரீ நரசிங்கப் பெருமான் பிரீதி அடைவாராக என்று நம்பிக்கையுடன் இருமுறை கூறியவாறு சிராத்தம் பித்ருதர்ப்பணம் முதலியவற்றைச் செய்தான். அவ்வளவில் அவன் முன்னால் இறந்த பித்ருக்கள் தோன்றி அவன் தந்தையை எண்ணிக் கடிகாசலத்தில் சிராத்த தர்ப்பணம் செய்வதாக உறுதி கொண்ட அளவில் அவன் தந்தை கொடிய நரகை விட்டு விஷ்ணு லோகம் அடைந்ததாகக்கூறி அவனது முயற்சியைப் பாராட்டி அவனை ஆசீர்வதித்தனர். விஷ்ணுதத்தன் நீண்ட வாழ்நாள் பெற்றுத் தன் மனைவியுடன் மக்கட் செல்வமும் பெற்று இனிது வாழ்ந்து இறுதியில் மோட்சமும் அடைந்தான்.

## இலக்குமியின் திருக்கல்யாணம் எனும் அமிருதவல்லித் தாயார் திருமணம் :—

கடிகைமலை பதினான்கு சிகரங்களுடன் அழகுற விளங்குகிறது. அதன் வடக்கு மலையுச்சியில் பிரம்ம நீர்த்தக் கரையில் பிரமன் நான்மறை ஓதித் தவம் புரிகின்றான். அதனை அடுத்த பகுதியில் பெரிய குளம் ஒன்று உள்ளது. அதுதான் லக்ஷ்மி தீர்த்தம் ஆகும். திருமகள் திருப்பாற்கடலில் தோன்றி நாராயணனை மணம் செய்து கொண்டதுபோல் மேலும் ஒருமுறை மண்ணில் அவதரித்து நாராயணனை மணம்புரியத் திருக்கடிகைப் பகுதியைத் தேர்ந்தெடுத்தாள் அவள் அப்பெரிய தடாகத்தில் ஆயிரம் இதழ்த் தாமரையில் அழகுற அவதரித்தாள். அவளைத் தேவ கன்னியரும் கந்தருவ மகளிரும் முனிகண்ணியரும் போற்றிப் புகழ்ந்தனர். இரண்டு வெள்ளை யானைகள் தம் துதிக்கைகளில் தீர்த்தகலசம் ஏந்தித் துதித்து நின்றன. தேவர்கள் மலர்மாரி பொழிந்து மகிழ்ந்தேத்தினர். திருமகளும் தன் அருட்பார்வையால் அனைவர்க்கும் மகிழ்ச்சி தந்து இன்புறச் செய்தாள்

திருமகள் பிரிவினை ஆற்றாத திருநாராயணன் கருடப் பறவையேறி அவளைத் தேடியவாறு வான் வழியாக வந்தார். இமயமலை ஆரியாவர்த்தம் விந்தியமலை திருவேங்கடமலை ஆகிய பகுதிகளையெல்லாம் கண்குளிரப் பார்த்துக் கொண்டு வரும்போது வாமதேவர் முதலிய முனிவர்களாலும், பிரமன், சிவன், இந்திரன்

முதலிய தேவர்களாலும் பூமழை பொழிந்து போற்றிப் புகழும் கடிகை மலையைக் கண்ணுற்றார். குபேரவனம் போன்றதொரு அழகிய பூஞ் சோலை அதன் நடுவில் அலையெறியும் திருப்பாற்கடல் போன்ற பூந்த டாகம்ஆகியவற்றைக்கண்டு மகிழ்ந்தார். தெய்வத்திருமாமகள் ஊஞ்சல் ஒன்றில் அமர்ந்து இனிதாடியும் அவ்வப்போது மயிலென நடந்தும் தெய்வத் தோழியர்களுடன் தேவரும் முனிவரும் போற்றிப் புகழ விளையாட்டயர்வதைக் கண்டார். அளவிலா மகிழ்ச்சி அடைந்து பறவையரசிடமிருந்து கீழிறங்கித் திருமாமகளருகே சென்று நின்றார். கமலக்கண்ணன் அருகில் நிற்கக் கண்ட கமலவல்லி நாணத்தால் தலை குனிந்தாள். அவள் தன் கரகமலத்தினில் பிடித்திருந்த கமலவல்லியை வினையாகப் பற்றினார். திருமால், திருமகளை அன்புடன் தழுவித் தம் மடியிலிருத்திய திருமாமகள் கொழுநனைத் தேவரும் முனிவரும் கண்டு போற்றிப் புகழ்ந்தனர்.

அத் தெய்வத் தம்பதியர்க்கு உடன் திருமணம் புணர்த்தினர் திருநாராயணனும் முன்பு திருப்பாற்கடலில் அமுதத்துடன் கிடைத்த திருமகள் அப்போது மீண்டும் அம்ருதவல்லியுடன் கிடைத்த காரணத்தால் அவளை அம்ருதவல்லி எனப் பெயரிட்டழைத்து திருமகளின் அருட்பார்வை எவருக்கெல்லாம் கிடைக்கிறதோ அவரெல்லாம் எல்லாச் செல்வமும் பெற்றின்புறுவர் என்றருளினார். ஒரு வெள்ளிக்கிழமை நன்னாளில் லக்ஷ்மி தீர்த்தக்கரையில் லக்ஷ்மியை மணம் புணர்ந்த காரணத்தால் திருக்கடிகையில் வெள்ளிக்கிழமைக்கும் லக்ஷ்மி தீர்த்தத்திற்கும் தனிப் பெருமை உண்டாயிற்று. தேவர் கோனும் குபேரனும் திருமகளைத் தனித் தனிச் சிறப்புறத் துதித்து அளவிலாச் செல்வங்களை அடைந்து நனிமகிழ்ந்தனர். வஸந்த காலமாகிய இளவேனில் பருவத்தில் திருமாமகளைத் திருமால் மணம் புணர்ந்த காரணத்தால் வெள்ளிக்கிழமையில் லக்ஷ்மி தீர்த்தத்தில் நீராடிச் சுமங்கலிப் பெண்களைப் பூசிப்பதாலும் தவம் செய்வதாலும் தானம் தருவதாலும் அஷ்டஐச்வர்யம் என்னும் அளாவிலாச் செல்வங்களைப் பெறலாம்.

விசுவாமித்திர முனிவர் லக்ஷ்மி தீர்த்தத்தில் நீராடி நரசிங்கப் பெருமானைக் குறித்துத் தவம் புரிந்த காரணத்தினாற்றான் பிரம்மத் தன்மை பெற்று உயர்ந்தார்கள். லக்ஷ்மி தீர்த்தக்கரையில் ஆடை வெற்றிலை, பூ, பழம், வெல்லம், பால், மஞ்சள் ஆகியவற்றில் எதனைத் தானமாகத் தந்தாலும் ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மனைப் பூசித்தாலும் சுமங்கலைப் பூசை செய்தாலும் துன்பம் நீங்கிச் செல்வம் பெற்றுச் செழிப்புற வாழலாம்.

**பிரம்ம தீர்த்தப் பெருமை :**

திருக்கடிகை மலையின் பெருமை இறைவனின் அருள்பாலிக்கும் தன்மை ஆகியவற்றை எடுத்துக் கூறிய வசிஷ்ட முனிவர் அங்குள்ள தீர்த்தங்களின் பெருமைகளையும் இந்திரத்யும்னனுக்கு எடுத்துக் கூறினார். ஏகசிலா பர்வதத்தின் தெற்கே பிரம்ம தீர்த்தம் இருக்கிறது அப்பகுதியில் சிம்சுபா எனும் மரத்தினடியில் நரசிம்மனின் அருள் பெற்றுப் பைரவ முனிவர் புண்ணிய தீர்த்தங்களைக் காத்து வருகிறார். அவர் ஆற்றல் காரணமாகப் பேய் பிசாசு முதலியன அங்கு நெருங்கா.

சுவாரோசிஷ மந்திரத்தில் இந்திரன் வேதங்களை நோக்கி அவை பரம்பொருளாகக் கருதுவது யாரை என்று வினவினான். பிரமனே முழுமுதற் கடவுள் என்று வேதங்கள் மறுமொழி கூறின. பிரமனும் தொழுதேத்தும் பெருமை உடையவனும் நாராயணனுக்குப் பிரியமானவனும் தேவர் மாமுனிவர் போற்றும் புகழுடையவனும் ஆகிய சிவனே பரம்பொருளாக விளங்கிடவும் அவனை மறுத்துப் பிரம்மனைப் பரம்பொருள் என்று கூறியது தகாது என்று கூறி இந்திரன் தன் வச்சிரப் படை கொண்டு வேதங்களைத் தாக்கினான். அதற்கு அஞ்சி ஓடிய வேதங்கள் பிரமனிடம் அடைக்கலம் புக்கன. பிரம்மன் தன் ஓம்கார முழக்கத்தால் வச்சிரப் படையை இந்திரன் மீதே தாக்குமாறு திரும்ப ஏவினான். தானேவிய படை பேராற்ற லுடன் தன்னையே தாக்க வருவது கண்டஞ்சிய இந்திரன் சங்கரனை அடைக்கலம் பற்றி நிகழ்ந்தது கூறினான். சிவனும் கோபம் கொண்டு தன்னைப் பரம்பொருள் என்று கருதியதற்கு தண்டனையாக பிரமனின் ஐந்து தலைகளில் ஒரு தலையைக் கிள்ளியெறிந்து அவனை நான்முகன் ஆக்கினான், தலையறுபட்டமையால் ஏற்பட்ட அங்க ஹீனக்குறையைப் போக்கிடப் பிரமன் கடிகாசலம் வந்தடைந்தான். நரசிங்கனைக் குறித்துத் தவம் இயற்றியும் ஒரு தீர்த்தக் கரையில் வேள்வி முதலியன செய்தும் தன் குறை நீங்கக் கடிகை நாதனை நோக்கிக் குறையிரந்தான், அவன் நாடோறும் புனித நீராடி வேள்வி செய்து திருமாலைப் போற்றி செய்த காரணத்தால் அத்தீர்த்தத்திற்கு பிரம்ம தீர்த்தம் எனப் பெயர் உண்டாயிற்று.

வியாழக்கிழமையில் பிரம்ம தீர்த்தத்தில் நீராடி நரசிம்மனை நினைத்தால் வேண்டியதெல்லாம் பெறலாம், அதில் தூயமனத்தன னாகி நீராடி நம்பிக்கையுடன் அங்கு பித்ருதர்ப்பணம் முதலியன செய்பவன் குலம் தழைத்தோங்குமே தவிர வமிசம் ஒருபோதும் அழிவு எய்து தல் இல்லை. அத்தீர்த்தக்கரையில் மரம் செடி வைத்து வளர்ப்பவர் இம்மையிலும் மறுமையிலும் பேரின்பம் அடைவது

உறுதி. மாசி மாதத்தில் சூரியன் உதிக்கும் போது பிரம்ம தீர்த்தத்தில் நீராடிக் கடிகேசனாகிய நரசிங்கனை முழுமனத்துள் நினைந்து போற்றி புகழ்பவன் எல்லாப் பாவங்களும் நீங்கிப் பேரின்பம் பெருவாழ்வு பெறுவது உறுதி.

**பைரவ தீர்த்தமும் ஹலாவர்த்த தீர்த்தமும் ;**

பிரம்ம தீர்த்தத்தின் அருகில் பைரவர் காக்கும் பைரவ தீர்த்தம் ஒன்றுண்டு. அதில் குறிப்பாகத் திங்கட்கிழமையில் நீராடுகிறவர்களைப் பூதபிசாசு பேய்கள் நெருங்க மாட்டா. அதில் நீராடும் புண்ணியவாளரைக் கண்டு அஞ்சி தூரவிலகிடும்.

பைரவர் வசிக்கும் மலை இமயத்துடன் போட்டியிடுவது போல் வானுற ஓங்கி வளர்ந்து கொண்டே போயிற்று அதனால் சூரியசந்திரர்களில் இயக்கம் தடைபட்டது. பைரவர்க்கு அஞ்சிய தேவர்க்கோன் பலராமரிடம் முறையிட்டான். பலராமர் தம் கலப்பையைக் கொண்டு அம்மலையை கீறி இழுத்திட அது வளர்ச்சி அறுபட்டது. அது முதல் சாதாரணமாகி நின்றது. பலராமர் அம்மலைச் சிகரத்தினை ஹலத்தினால் கீறிய இடத்தினின்று புனிதநீர் பெருக்கெடுத்தோடியது. அதற்குத் தேவர் மாமுனிவர் 'ஹலாவர்த்த தீர்த்தம்' என்று பெயரிட்டுப் போற்றினர். அதில் நீராடுவதால் அளப்பரிய நன்மை அடையலாம். சந்திரன் குருபத்தினியுடன் கூடிய பாவத்தையும் அகலிகை இந்திரனுடன் கூடிய பாவத்தையும் ஹலாவர்த்த தீர்த்தத்தில் நீராடிப் போக்கிக் கொண்டனர்.

**கௌதம தீர்த்தம் :**

பைரவர் ஆச்சிரமத்திற்கு அருகே கௌதம முனிவர் தவம் செய்கிறார். இந்திரன் தன் பகைவனான துவாஷ்டிரனைக் கொன்ற பாவத்தைக் கழுவ கௌதம முனிவரது ஆற்றலால் அமைந்த கௌதம தீர்த்தத்தில் நீராடிப் பாவம் போக்கிக்கொண்டான். நரசிங்கப் பெருமானின் அற்புதத்தைக் காணவிரும்பிய இந்திரன் அதில் நீராடிப் கோடிக்கணக்கான சூரியர்களுடைய ஒளியையும் விஞ்சும் பேரொளிப் பிழம்பாக விளங்கிய நரசிங்கப் பெருமானின் தோற்றம் கண்டு அஞ்சித் தன் பிழை பொறுக்க வேண்டினான். வைகாசி மாதப் பௌர்ணமி நாளிலும் சனிக்கிழமைகளிலும், கௌதம தீர்த்தத்தில் நீராடினால் எண்ணற்ற நன்மைகள் பெறலாம்.

**அகஸ்திய தீர்த்தம் :**

இவற்றையெல்லாம் கேட்ட வாமதேவர் அமுதம் பெறவிரும்பி அகஸ்திய முனிவர் வாழும் கடிகாசலத்திற்கு வந்தார். அகஸ்தியர் கிரிகைரிகம் எனுமிடத்தில் தபோவன அமைத்து வாழ்ந்து வந்தார். அவரது ஆற்றலால் அங்கு அகஸ்திய தீர்த்தம் தோற்றுவிக்கப்பட்டது. அங்கு முன்பு மகாலட்சுமி வேகவதி என்னும் பெயரில் தவம் செய்த போது அவள் பெருமை அறிந்த சபரி என்பாள் பழம் கிழங்கு முதலியனவற்றை அன்புடன் அவளுக்குக் கொண்டுதந்துதவி வந்தாள். இராவணன் வான்வழியாக செல்லும்போது வேகவதியின் அழகினால் அவள்மீது மோகம் கொண்டு அவளைக் கவர முற்பட்டான். சபரி எவ்வளவு தடுத்துக் கீறியும் அவன் அடாச் செயலை விட்டானில்லை. வேகவதி இராவணனைக் குறித்து அடுத்துவரும் திரேதாயுகத்தில் தாணே பெண்ணாய்ப் பிறந்து அவனை அழிப்பதாக சாபமிட்டாள். அவ்வாறுகூறிய அளவில் சிந்துவார மரத்தினடியில் வேகவதி மறைந்துவிட்டாள்.

இராணவணன் அவமானத்துடன் தன் நாடு திரும்பினான். அகஸ்திய தீர்த்தத்தில் செவ்வாய்க்கிழமையில் நீராடித் திருமாலைப் பூசிப்பவர். பிறன்மனை நயத்தலாகிய குற்றம் நீங்கிப் பிறநன்மையும் பெறுவர்.

**அனுமத் தீர்த்தம் :**

கடிகைமலையின் கிழக்குமலை உச்சியில் அனுமன் நரசிங்கப் பிராணைக் குறித்துத் தவம் செய்கிறார். அவரது பெயரில் அங்கொரு தீர்த்தம் உள்ளது, பொன்வண்ணத் தாமரைகள் நிறைந்த அனுமத் தீர்த்தத்தின் கரையில் பொன்மயமான மரங்கள் செழித்துக் காணப் படும். அந்நீரிணைத் தீண்டிய பசுபக்ஷிகளும் பொன் வண்ணம் பெறும். அனுமன் கொண்டு வந்து நிறுத்திய பொன் வண்ண நாவல் மரமும் அங்குக் காணப்படும். வைணவர்களும், சைவர்களும் வேற்றுமை இன்றி அதில் நீராடி அனுமனைத் தொழுது வலம் கொண்டு அளப்பரிய நன்மைகளைப் பெறுகின்றனர். சூரியன் அனுமனுக்கு அருள்புரிந்த ஞாயிற்றுக்கிழமைகளில் நீராடுபவர் நினைத்ததை அடைந்து எண்ணறு நலம் பெறுவர்.

இராமன் இராவண வதத்திற்குப் பின்னர் சீதையிடன் புஷ்பக விமானமேறி அயோத்திக்குத் திரும்பும்போது அனுமனுடைய வேண்டு கோள் காரணமாக அம்மலையில் சற்றுத் தாமதித்தார். அவர் தம்

மனைவி சீதையுடன் அதில் நீராடி மகிழ்ந்தார். அனுமத் தீர்த்தம் என்ற பெயர் சூட்டி உகந்தார். பின்னர் புஷ்பக விமானமேறி அயோத்திக்குத் திரும்பினார். இராமனுக்குந்த காரணத்தினாலும் அனுமனுக்குப் பிரியமான காரணத்தினாலும் பேறு பெற்றது அனுமத் தீர்த்தம். காலையில் நியமத்துடன் நீராடிப் பட்டினி கிடந்து மலைவலம் வந்து பரமனைத் தொழுகின்றவர்க்கு அனுமன் அருள்பாலிப்பார்.

**வஜ்ரதீர்த்தம் :**

புத்திரப் பேற்றினை விரும்புகிறவர், நோய் நொடி நீங்க விரும்புகிறவர், அங்கஹீனத்தைப் போக்க விரும்புபவர், ஆகிய அனைவரும் ஆதரிப்பது அத்திரி முனிவர் ஆச்சிரமத்தின் அருகிலுள்ள வஜ்ஜிரத் தீர்த்தமாகும். அத்திரி முனிவர் தம் மனைவி அனுசூயையுடன் புத்திரப் பேற்றினை விரும்பி வஜ்ஜிர தீர்த்தக் கரையில்தான் தவம் புரிந்தார். அத்திரியின் மகள் சீலவதி. பொல்லா ஒழுக்கம் மேற்கொண்டு உடல் உறுப்புகள் குலைந்தழிய நாற்றமெடுக்கும் நிலைக்கு வந்த தன் கணவனை வஜ்ரதீர்த்தத்தில் நீராடச் செய்யவும் அவன் பொல்லாத் தொழுநோய் நீங்கிப் பொன்மேனி பெற்று தன்மனைவியுடன் பலகாலம் இனிது வாழ்ந்தான். வஜ்ரதீர்த்தத்தில் மனைவியுடன் நீராடி நரசிங்கப் பெருமானை பூசிப்பவர் உடலுறுதியும் மகப்பேறும் பெற்றின்புறுவர்.

**வராஹ தீர்த்தம் :**

ஹலாவர்த்த தீர்த்தத்தின் வடக்கே பெருங்காடு ஒன்றுண்டு. ஜாம்பவான் மகள் ஜாம்பவதிக்குப் பன்றி ஒன்று தன் கோரைப் பற்களாலும் கால் நகங்களாலும், பாறையினருகே வளர்ந்திருந்த வல்லிக்கிழங்கை தோண்டியெடுக்க முற்பட்டுப் பூமியினை கிளறிய பகுதியினின்று தோன்றிய நீர் நிலையே வராஹதீர்த்தம் எனப்படும். அதற்கு வல்லி தீர்த்தம் என்றும் சிலாபுஷ்கரணி என்றும் வேறு பெயர் உண்டு. காலையிலோ, மாலையிலோ அதில் நீராடி நாரணனை நினைந்தால் எல்லாச் செல்வமும் பெற்று இனிது வாழலாம். சித்திரை ஐப்பசி ஆகிய விஷு நாளிலும், ஆடி, தை என்னும் அயனங்களிலும் சூரிய சந்திர கிரஹண காலங்களிலும் சிலா புஷ்கரணியில் நீராடினால் தீர்த்தக்கரையில் தர்ப்பனம் முதலிய செய்தால் இம்மலையில் எல்லாப் பேறுகளையும் பெற்று இன்புற்று வாழ்ந்து மறுமையில் மோக்ஷம் அடைவது உறுதி.

**பாண்டவ தீர்த்தம் :**

அனுமத் தீர்த்தத்தின் வடக்கு மலையின் உச்சியில் பாண்டவர்கள் தவம் செய்தனர். அவர்களுள் அருச்சுனன் கடுந்தவம் புரிந்து



**பாண்டவர் தீர்த்தம்** (நந்தவனம் — சிறிய மலை அடிவாரத்தில் உள்ளது)

நன்மை அடைந்தான். அவர்கள் நீராடிப் பேறுபெற்ற தீர்த்தம் பாண்டவ தீர்த்தம் எனப்படும். வராஹ தீர்த்தத்தில் நீராடிய பின் பாண்டவ தீர்த்தத்தில் நீராடித் தானம் முதலியன செய்தால், ஆயிரம் பசு தானம் செய்த புண்ணிய பயனைப் பெறுவர். அருச்சுனன் சிவனிடம் பாசுபத அஸ்திரம் பெற்றுக் கண்ணனையே தேராட்டியாகக் கொண்டு கௌரவர்களை வென்றது நரசிங்கப் பெருமான் அருளால் ஆகும். மலை உச்சியில் ஹேமகோடி விமானத்தில் விளங்கும் எம் பெருமானை நேரில் கண்டு வணங்காது அறியாமையால் கல்லிலோ, மரத்திலோ அவனைப் பூசிப்பதால் எந்த நன்மையும் உண்டாகாது.

பாண்டவர்களுக்குப் பாட்டன் முறைமை உடையவனும், அத்திர கோத்திரத்தில் பிறந்தவனும் ஆகிய புதன் பாண்டவ தீர்த்தக் கரையில் பன்னிரண்டாண்டு கடுந்தவம் புரிந்து திருமாலுக்குத் தொண்டு புரிந்த பின்னரே மீண்டும் தேவர் பதம் பெற்றான்.

ஹேமகோடி விமானத்தின் கீழ் விளங்கும் நரசிங்க பெருமானை துர்வாச முனிவர் மிகவும் பக்தியுடன் போற்றிப் புகழ்ந்தார். நரஹரி அன்புடன் தம் திருத்துழாய் மாலையை அவருக்கு அருளினார். துர்வாச முனிவர் நரசிம்மரின் பிரஸாதமான திருத்துழாய் மாலையை முறையே தலை, கழுத்து, காது, இருதோள்கள் ஆகிய உறுப்புக்களில் அணிந்து மீண்டும் இறைவன் அருளை வியந்து துதித்தார். துர்வாஸ முனிவரது தோற்றத்தைக் கண்டு அங்கிருந்த புதன் அடக்கமின்றிச் சிரித்துவிட்டான். இறைவன் முன்னால் மிக்கார் வேதவிமலர் சன்னதியில் அடக்கமின்றி தன்னைக் கேலி செய்த புதனை துர்வாஸர் பூமியில் பிறந்திடுமாறு சாபமிட்டார். புதன் தன் செய்கைக்கு அஞ்சித் தன்னை மன்னிக்கும்படி மாமுனிவரிடம் வேண்டினான்.

'எம்பெருமானின் மாலை முதலிய பிரஸாதம் அவன் அருளால் மட்டுமே கிடைக்கும் தன்மையது. ஆதலால் புதன் கடிகைமலையில் 12 ஆண்டுக் காலம் நரசிங்கப் பெருமானை தொண்டு செய்து போற்றுவதால் மட்டுமே மீண்டும் தேவர் பதம் அடைவான்' என்று துர்வாஸர் புதனுக்கு சாப நீக்கம் கூறினார்.

புதன்கிழமையில் பாண்டவதீர்த்தத்தில் நீராடுவது சாலச் சிறந்தது. அங்கு இன்சொல்லே பேசுதல் வேண்டும். அடக்கத்துடன் இருத்தல் வேண்டும்.

**இந்திரத்யும்னன் நரசிம்ம கவசம் உபதேசிக்கப் பெறுதல் :**

*இவ்வாறு கடிகைத் தலப் பெருமையை எடுத்துக் கூறிய வசிஷ்ட முனிவரை மீண்டும் அடிபணிந்து தான் வேதப் பிரானின் மேதகு பொற்பதம் அடைய விரும்புவதை இந்திரத்யும்னன் தெரிவித்தான். வீட்டுப் பேற்றினை விரைந்தளிக்கவல்ல நரசிம்ம கவச மந்திரத்தை மன்னனுக்கு வசிஷ்ட முனிவர் உபதேசித்தார். சிலா புஷ்கரணியில் மும்முறை ஆசமனம் செய்து நியமத்துடன் நரசிம்மகவச மந்திரத்தை ஜெபித்தான் மன்னன். பின்னர் வசிஷ்டருடன் வரத் தன் மனைவியுடன் கடிகை மலையேறத் தொடங்கினான் மன்னன்.*

**நரசிம்ம தீர்த்தத்தில் நீராடி நரசிங்கனை நினைதல் : -**

*வழியிடையே ஒரு தீர்த்தத்தைக்கண்ட மன்னன் அதன் வரலாறு கூறுமாறு வசிஷ்டரை அடிபணிந்து வேண்டினான். "அரசே! வாமதேவர் முதலிய மஹாத்மாக்களுக்குக் கடிகைப் பொழுதில் மோக்ஷம் அளித்த நரசிங்கப்பெருமான் தன் அருளால் நரசிம்ம தீர்த்தத்தை உண்டாக்கினார். பிரமனின் தலையைக் கிள்ளியெறிந்த தால் பிரம்மஹத்தி தோஷம் நிறையப்பெற்ற பரமசிவன் பார்வதியால் உணர்த்தப்பெற்று தன் பிரமதகணங்கள் சூழ நரசிம்ம தீர்த்தத்திற்கு வந்தான். நரசிங்கனைச் சிந்தை செய்து தன் பாவம் நீங்கப் பார்வதி யுடன் நரசிம்ம தீர்த்தத்தில் நீராடி மீண்டு கயிலை மலைக்கு உரியவன் ஆனான் என்று கூறினார். மிகப்புனிதமான நரசிம்ம தீர்த்தத்தில் வசிஷ்டர் அனுமதியுடன் நீராடிய மன்னன் மாதவனை மனத்தால் நினைந்து மெய்மறந்து நெடுநேரம் நின்றான்.*

**மன்னன் மலை உச்சியை அடைதல் :—**

*இந்திரத்யும்னன் மனைவியுடன் வசிஷ்டர் வழிகாட்ட கடிகை மலை உச்சியை அடைந்தான். ஹேமகோடி விமானத்தைக் கண்டு விம்மிதம் அடைந்தான். ஹேமகோடி விமானத்தினெதிர் கம்பீரமாக நிற்கும் சிகரத்தை வியப்புடன் பார்த்தான்.*

*அக்கொடு முடியில்தான் பிரஹல்லாதன் தவம் செய்து பேறு பெற்றான். தன் சொற்குக் கீழ்ப்படியாத மகனைக்கல்லில் கட்டிக்கடலில் வீழ்த்திடுமாறு இரணியகசிபு தன் ஏவலர்க்கு ஆணையிட்டான். அவர் களும் அவ்வாறே பிரஹல்லாதனைக் கல்லில் கட்டிக் கடலில் இட்டனர்.*

பிரஹல்லாதன் சிறிதும் வருந்தாது கற்றூணைப் பூட்டிக் கடலினுட் பாய்ச்சினும் நற்றுணையாவது நமோ நாராயணமே என்று நரசிம்மப் பெருமானையே நெஞ்சில் வைத்துத் தெளிந்த சிந்தனையாயிருந்தான். அவனைக் காப்பாற்றிக் கரையேற்றினார் நரஹரி. 'ஹேமகோடி' என்று தொடங்கும் மந்திரமாலை கொண்டு இறைவனை துதித்துக் கரையேறினான் பிரஹல்லாதன்.

அவன் தவம் புரிந்து உயர்ந்த சிகரத்தின் தெற்குப் பகுதியில் சங்க தீர்த்தமும் மேற்குப் பகுதியில் சக்கர தீர்த்தமும் இருக்கின்றன. அவை இரண்டும் கடிகை மலையின் இரு கண்கள் போன்று விலங்குகின்றன. அவற்றில் பேறு வேண்டுவார் நீராடுதல் வேண்டும். பிரமன், சங்கரன், சந்திரன், குபேரன், சூரியன் போன்றோர் அவற்றில் நீராடிப் பேறு பெற்றனர்.

குபேரன் நாரதர் வாயிலாக சங்கதீர்த்தத்தின் பெருமையைக் கேட்டுச் செல்வத்திற்கு அதிபதியாக விரும்பித் திருமகளைக் குறித்து தவம் செய்தான். விச்சிரவஸின் புதல்வனான அவன் கடிகையில் நரசிம்மனைத் தொழுது பரமனடியார்க்குத் தொண்டு செய்து வந்தான். திருமால் அடியார்கள் இளைப்பு நீக்க அமுதக்கொடிகளை நட்டு வளர்த்தான். பட்டினிக்கிடந்து பரந்தாமனைத் தியானித்து வந்தான். திருமகளைக் குறித்த ஸ்ரீஸூக்தபாராயணத்தை இடைவிடாமல் செய்தான். மஹாலக்ஷ்மி அவனுக்கு அருள் செய்ய வேண்டி அமுத கொடிகளைக் கைகளில் ஏந்தியவளாய் அவன் முன் தோன்றி அவன் வேண்டியவாறு தனாதிபதித்துவம், பெருங்கொடைத்தன்மை போன்றவற்றைத் தந்தருளினாள். அமுதக்கொடி அடியில் தாமரை கொடிகளைக் கையிலேந்தித் தோன்றிய காரணம் பற்றி மஹாலக்ஷ்மியைத் தேவர் மாமுனிவர்கள் அமிருதவல்லி என்று போற்றிப் புகழ்ந்தனர். அப் பெயராலேயே மஹாலக்ஷ்மி இங்கு அழைக்கப்படுகிறாள்.

இரண்டு மலைகளிடையே புகழ் வாய்ந்த சங்கர தீர்த்தமிருப்பது ஏற்கனவே கூறப்பட்டது. ஔத்தாலிக முனிவர் வேண்டியபடி அவருக்கு அருள்புரிய விரும்பிய ஆஞ்சநேயர் தமக்கு நரசிங்கப் பெருமான் அருளிய சுதர்சன சக்கரத்தைப் பொருத்தித் தூய்மை ஆக்கியதால் அது சக்கர தீர்த்தம் என வழங்கப்படுகிறது.

அதில் நீராடினாலும் அதன் பெயரைக் கூறினாலும் அளவற்ற நன்மை உண்டாம். வசிஷ்டர் கூறியபடி சங்குசக்கர தீர்த்தங்களில் நீராடிய மன்னன் விரைந்து ஹேமகோடி பவனத்தை வந்தடைந்தான்.

**இந்திரத்யும்னன் மோக்ஷம் புகுதல் :**

**தவமுனிவர்கள் பிரமனைப் போற்றுதல் :**

*இந்திரத்யும்னன் நரசிங்கப் பிரானைக் கண்டான். கண்ணாரக் கண்டு கழிகாதலுற்றான். எம்மனா ! என் குல தெய்வமே ! என்று கண்கள் அசும்பொழுகக் கும்பிடு நட்டமிட்டாடி வாய் விட்டாற்றினான்.*

*நரசிம்மனைத் தன்னுள் கொண்ட அப்பொன் விமானம் சிந்தா மணியைத் தன்னுள் வைத்திருக்கும் பேழை போன்று காணப்பட்டது. சிங்கங்களால் சுமக்கப்படும் அவ்விமானத்தைக் கண்டு மயிர்க்கூச் செறிந்தான்.*

*செடியாய வல்வினைகள் தீர்க்கும் அங்நெடியவனை—கடிகைக் கோமானை நரசிங்கப் பிரானைப் பலவாறு போற்றிப் புகழ்ந்தான், ஆராத மனக்களிப்போடு அழுத கண்ணீர் மழை சோர நினைந்து உருகினான்.*

*நரசிங்கப் பிரான் நாடி வந்த மன்னனை அன்போடு நோக்கி வசிஷ்டர் முன்னிலையில் பிறந்த நாள் தொடங்கி வைணவத் திரு வுடையவனும் உலக முழுவதும் விஷ்ணு பக்தியைப் பரப்பியவனுமான இந்திரத்யும்னனுக்கு அவன் விரும்பியபடியே பிரம்மத் தன்மையைத் தந்ததாகக் கூறியருளினார். சோதிவண்ணன் சோதிவாய் திறந்து இந்திரத்யும்னனுக்கு மோக்ஷம் அருளிய அளவில் வசிஷ்டர் முதலியோர் பார்த்திருக்க, இந்திரத்யும்னன் ஒளி வடிவினனாய்த் தன் மனைவி யுடன் விஷ்ணுலோகம் அடைந்தான். ஸாலோக்கியம் என்னும் மோக்ஷத்தினை அடைந்த இந்திரத்யும்னன் ஸநகஸநந்தனர் முதலிய தவமுனிவர்கள் போற்றிப் புகழும் ஸ்ரீமந் நாராயணனை எப்போதும் மகிழ்வுறுத்திக் கொண்டிருக்கிறான்.*

*இவ்வாறு இந்திரத்யும்னனின் வரலாறு கடிகாசலப் பெருமை நரசிங்கப்பிரானின் மகிமை ஆகியவற்றை நான்முகன் கூறக் கேட்ட தவமாமுனிவர்கள் அகமிக மகிழ்ந்து "இறைவ ! அற்புதமான தெய்வத் தன்மை வாய்ந்த பெருமை பொருந்திய கடிகாசலத்தின் வரலாறு கூறி எங்களை மிக மிக மகிழ்ச்சி அடையச் செய்தீர் அத்தகைய உம்மை வணங்கிப் போற்றுகிறோம்" என்று கொண்டாடினர்.*

**நரசிங்கப் பெருமான் அவதாரம் :** *தம்மைக் கொண்டாடிய முனிவர்களை நோக்கிப் பிரமன் "முனிவர்களே ! பரந்தாமன் இக் கடிகைத் தடங்குன்றின் மீது திருக்கோயில் கொண்ட வரலாறு*

கூறுகிறேன். கேளுங்கள். ஸ்ரீமன் நாராயணன் சுவாயம்புவ மன்வந்தரத்தின் மூன்றாம் பாதத்தில் வைகாசி மாதத்தில் பௌர்ணமியும், சுவாதி நட்சத்திரமும் கூடிய வெள்ளிக்கிழமையில் பகலுடன் கூடிய உத்தமமான ஸந்தியா காலத்தில் பிரஹலாதனுக்கு அருள் புரியவும் வாமதேவர் முதலிய மாமுனிவர்களுக்கு மோஷம் தரவும் கடிகைப்பொழுதில் யோக நரசிங்க வடிவில் தோற்றியருளி மகிழ்ந்தார் கடிகைப் பொழுதில் அவரனைவர்க்கும் பேரின்பம் பயந்த காரணத்தால் இம்மலைக்குக் கடிகாசலம் எனப் பெயர் ஏற்பட்டது.

ஏக சிலாமலையுச்சியில் தோன்றி கோயில் கொண்ட நரசிங்கப் பெருமானை விகனசர் என்ற பிரம்மரிஷிகள் குலத்தில் தோன்றிய வைகானஸ என்னும் பூஜகர்கள் வைகானஸ சூத்திர விதிப்படி முறை யாகத் திரு ஆராதனம் செய்து வருகின்றனர். நரசிங்கனும் அப்பூசையை உகப்புடன் ஏற்றுக்கொண்டு தன்னை நாடிவரும் அனைவர்க்கும் ஆயுள், ஆரோக்கியம், செல்வம், குலம் தழைத்தோங்கச் சந்ததி, கல்வி அறச்சிந்தனை ஆகிய அனைத்தையும் அருள்பாலிக்கிறார்" என்று உரைத்தார்.

## நூற் பயன்

முனிவர்கள் கூற்று: திருக்கடிகைத் தலப்பெருமை கூறும் நூலைப் படிப்பவர், எழுதுபவர், பூசிப்பவர் ஆகியோரும் அதன் பெருமையை எடுத்துரைப்பவர், கூறக் கேட்பவர் ஆகியோரும் ஆகிய அனைவரையும் கடிகைக்கோனாகிய நரசிங்கப்பெருமான் அருள்புரிந்து காப்பாற்றுவார் என்பது ஸத்யம்.

ஸ்ரீ பிரம்ம கைவர்த்தபுராணத்தில் உத்தரகண்டத்தில் பிருகு பராசர ஸம்வாத ரூபமான ஸ்ரீ கடிகாசல மகிமை கூறும் பகுதி நிறைவுற்றது.





# சோளிங்கபுரம் வரலாற்றுக் கண்ணோட்டத்தில்

வரலாற்றினை அடிப்படையாகக் கொண்டு திருக்கடிகைத் திருப்பதியின் சரித்திரத்தைப் பார்க்கும்போது பின்வரும் உண்மைகள் தெரியவருகின்றன.

வட ஆற்காடு அம்பேத்கர் மாவட்டத்தில் ஆழ்வார்களின் பாடல்பெற்று விளங்கும் ஒரே திருத்தலம் திருக்கடிகை ஆகும். புராணத்தில் கடிகாசலம் என்றும் ஆழ்வார்களின் பாடல்கள் மூலம் கடிகை என்றும் குறிப்பிடப்பட்டுள்ள இத்தலத்தில் கடிகை மலை மீது சுவாமி கோயில் இருந்தது என்பது, திருமங்கை ஆழ்வார் பாசுரத்தில் " கடிகைத் தடங்குன்றின் மிசை இருந்த அக்காரக்கனி " என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் உறுதியாகிறது. பேயாழ்வார் பாசுரத்தில் "வண்டு வளம் கிளரும் நீள் சோலை வண்பூங்கடிகை" என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் இப்பகுதி குறிஞ்சி முல்லை மருதவளம் நிறைந்த பகுதி எனத் தெரியவருகிறது.

சங்க காலத்தில் (இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்) திருமாவளத்தான் எனும் கரிகாற்சோழன் தமிழகத்தை 48 கோட்டங்களாகப் பிரித்துச் செங்கோல் செலுத்தினான். அந்த 48 கோட்டங்களில் கடிகைக் கோட்டமும் ஒன்றாகும். காஞ்சிபுரத்தையே கடிகைக் கோட்டமாக வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். காஞ்சி என்பதே தொன்மையான புகழ் வாய்ந்த பெயராக வடநூல்களில் காணப்படுகிறது. 'கச்சி' என்று சங்கத் தமிழில் குறிப்பிடப்பெறுகிறது. காஞ்சி மண்டலத்தில் கடிகாஸ்தானமாக முதன்மை பெற்று விளங்கிய காரணத்தினால் கடிகையைக் காஞ்சியுடன் இணைத்தும் சிறப்பித்தும் காஞ்சி மண்டலத்தைக் கடிகைக் கோட்டமெனக் கொண்டார்கள் அவ்வரலாற்று ஆசிரியர்கள் எனலாம்.

வடமொழி நூல்களில் கடிகா, கடிகாஸ்தானம் என்பது வேதம் கற்பிக்கும் இடம்; வேதப்பகுதிகளை ஓலையில் எழுதி குடத்திலிட்டு காப்பாற்றும் இடம் என்ற முறையில் வேதஸம்ரக்ஷண ஸ்தானம் குறிப்பிடப்படுகிறது. கல்பசூத்ர 'அதிகரணம் எனும் பூர்வமீமாம்ஸையின் தந்த்ரவார்த்திகத்தில் குமாரியபட்டர் குறிப்பிடும் உரைக்கு பட்டஸோமேச்வரர் தரும் விளக்கத்தால் இவ்வுண்மை தெரியவருகிறது. இவற்றால் திருக்கடிகைத் தலம் மிகவும் தொன்மையானது; புகழ் வாய்ந்தது என அறிய வருகிறோம்.

மேலும் சாளுக்கிய மன்னன் வடநாட்டினின்று தமிழ்நாடு வந்து காஞ்சி கடிகையில் கல்வி பயின்றான் என்ற செய்தியும் கல்வெட்டால் அறியலாகிறது. அவன் பெயர் மயூரவன்மன் என்பதாம்.

இலக்கியங்கள் வாயிலாக அறியப்பட்ட கடிகாசலம் பின்னர் நாளில் மருவித்திரிந்து இன்றைய சோளிங்கர் அல்லது சோளிங்கபுரமான வரலாற்றையும் காண்போம்.

இந்நகரின் கண் ஏரியின் அருகே பாறையில் வெட்டப்பட்ட கல்வெட்டு ஒன்று பழந்தமிழில் காணப்படுகிறது. அது முழுமையாக இல்லை. பிற கல்வெட்டுகள் அனைத்தும் கோயில்களிலும், மலைக் கோயில்களிலும் உள்ளவை ஆகும். சன்னதி வீதியில் கங்கை கொண்டான் மண்டபத்திலும், பெருமாள் கோயில் அலுவலகத்திலும் உக்கிராணச் சுவற்றிலும் உள்ள கல்வெட்டுக்கள் இதுநாள் வரை படி எடுக்கப்படவில்லை.

சோளபுரீசுவரர் கோயிலின் நுழை வாயிலில் அரை குறையாக கிடைத்த கல்வெட்டின் மூலம் இப்பகுதி 'கடிகை நாடு' என்று வழங்கப் பட்டதாக அறிகிறோம். மேலும் முதலாம் இராஜராஜன், இராஜாதி ராஜதேவன், திரிபுவனச் சக்கரவர்த்திகள், திரிபுவனதேவன் என்ற அரசர்களின் பெயரும் அவர்கள் செய்த தானமும் தெரிய வருகின்றன.

முக்கியமாக சிறைமீட்ட பெருமாள் என்னும் சீயகங்கன் என்பவனைக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டுக்களின் காலம் 12, 13-ம் நூற்றாண்டாகும். கடிகைக்கும் கங்கர்களுக்கும் உள்ள தொடர்பைச் சுட்டும் நிலையில் முதல்பராந்தகனின் ஏரிக்கரைக் கல்வெட்டினைத் தொடர்புறுத்தினால் சோளிங்கரின் வரலாறு 10-ஆம் நூற்றாண்டிலேயே சிறந்து விளங்கியதெனத் தெரியவருவதல்லாமல் 11-ஆம் நூற்றாண்டில் மயூரவர்மன் இங்கு வந்ததையும் உறுதிப் படுத்துவதாகவும் கொள்ளலாம்.

1919-இல் எடுக்கப்பட்ட காஞ்சிபுரம் கல்வெட்டொன்றின் மூலம் சீயகங்கள் என்பான் அனந்தாழ்வான் கற்கோயிலைக் கட்டினான் என்று அறிகிறோம். அவன் மூன்றாம் குலோத்துங்கள் எனும் திரிபுவன விரதேவனின் 35-ஆம் ஆட்சி ஆண்டில் அதனைக் கட்டினான் என்றுள்ளது. அவனுக்குச் சிறைமீட்ட பெருமாள் என்ற பெயர் உண்டு. அவன் தந்தையின் பெயர் சோளேந்திரசிம்மன் என்பதால். மேல்மாடிக்கல்வெட்டினாலும் இது (சோளேந்திரசிம்மன்) உறுதியாகிறது. சோளேந்திரநரசிம்மன் என்ற பெயர் சோழ அரசனின் தொடர்பை உறுதிப்படுத்துகிறது. குருபரம்பரா பிரபாவம் எனும் வைணவநூலின் மூலம் சோளேந்திரசிம்மபுரமே சோளசிம்ம புரமாகத் திரிந்தது என அறியலாம். சிங்கபுரம் சிம்மபுரம் என்பன இரண்டும் ஓரிடத்தையே குறிக்கின்றன. மிகப்பழமையான இந்நகர் மேலும் பெரும் செல்வமும் புகழும் பெறக் காரணமாக அவ்வரசன் இருந்தமையால் சோளேந்திரசிங்கபுரம் எனப் பெயர் பெற்றிருக்கக் கூடும்.

சுவாமி தொட்டயாசார்தான் சிவன் கோயிலையும் நிர்மாணிக்கக் காரணமாக இருந்தவர் என்று தொன்று தொட்டுக் கூறப்பட்டு வருகிறது. ஈசான மூலையில் (ஊரின் வடகிழக்கு மூலையில்) சிவன் கோயில் இருக்கவேண்டும் என்ற விதிப்படி இன்றைய சோளிங்கபுர நகர நிர்மானத்தின்போது சிவன் கோயிலும் அமைக்கப்பட்டதெனலாம் பாண்டிய மன்னர்கள் திருமாலடியவர்களாகவும் சோழவரசர்கள் சிவனடியவர்களாகவும் விளங்கி வந்தனர். சோளேந்திரசிம்மன் விஷ்ணு அடிமையாயினும் சோழ அரசன் காரணமாக லிங்கமூர்த்தியை ஸ்தாபித்ததைத் தொட்டாசார் தம் காலத்தில் ஒரு திருக்கோயில் எழுப்பி சிறப்பு செய்தார் எனலாம். அதனால்தான் சோளசிம்மபுரத்தைச் சைவர்கள் சோழலிங்கபுரம் என்று கூறி வருகின்றனர். பரம வைஷ்ணவரான தொட்டாசர் பரம்பரைக்கு சிவன் கோயிலில் முதன் மரியாதை செய்யப்படுவதும் இச் செய்தியை உறுதிப்படுத்துகிறது.

சுவாமி தொட்டாசார் என்னும் இத்தல ஆசார்யபுருஷரே இப்போதைய இந்நகரைத் திட்டமிட்டு உருவாக்கினதாகவும் ஊர் நடுவே பெருமாள் கோயிலைக் கட்டுவித்ததாகவும் தொன்று தொட்டு கூறப்பட்டு வருகிறது. ஏனெனில் இந்நகரை அடுத்த எறும்பி, பத்மாபுரம் என்பனதான் வைணவ ஆசாரியர்கள் வாழிடமாகக் கூறப்பட்டுள்ளது ஊர்க்கோயில் ஒரு சர்வதாரி வருஷம் மீனமாசம் சுத்த பஞ்சமி (பங்குனி மாதம் வளர்பிறை பஞ்சமி) அன்று திருப்ரதிஷ்டை செய்யப்பட்டதாக பழமையான நூலிலிருந்து

அறிகிறோம். அது ஆங்கில ஆண்டு 1588 ஏப்பிரலுக்குச் சரியாக அமைகிறது. ஊர்க்கோயிலில் கிடைத்துள்ள கல்வெட்டுக்கள் அனைத்துமே அதற்குப் பிற்பட்டவையாகவே அமைந்திருப்பதையும் குறிப்பிடவேண்டியுள்ளது. புராணம், திவ்வியபிரபந்தம் போன்ற வற்றால் கோயில்-சுவாமி- தொன்மையானது என அறியப்பட்டாலும் பல்வேறு காலத்தில் பல்வேறு கட்டளை போன்றவை பெருமாளுக்குச் சமர்ப்பிக்கப்பட்டுள்ளதைக் கல்வெட்டுகள் பறைசாற்றுகின்றன.

இந்தியத் தொல்லியல் கல்வெட்டு ஆய்வுப் பிரிவு இக்கோயிலில் எடுத்துள்ள கல்வெட்டுகூறும் செய்திகளைச் சிறிது பார்ப்போம் :-

சோளிங்கபுரக் கல்வெட்டுக்கள் 1896-இலும் 1952–53-ஆம் ஆண்டிலும் படி எடுக்கப்பட்டுப் பிரசுரிக்கப்பட்டுள்ளன.

1896-இல் வெளிவந்தபடிக் கீழ்வரும் தகவல்கள் பதிவாகி யுள்ளன. கல்வெட்டுப்படி எண் : 872, 873, 874 என்பன ஆம்.

எண் 874 கல்வெட்டு, சின்னமலை ஆஞ்சனேயசுவாமி கோயிலில் சகாப்தம் 1541 (கி. பி. 1619) ரௌத்ரி ஞூ சித்திரை வளர்பிறை 10-ம் தேதியில் பெனுகொண்ட நகரிலிருந்து ஸ்ரீ வீரபிரதாப ராமதேவராயர் ஆட்சிக் காலத்தில் – கந்தாடை குமாரர் தொட்டாசார்யர் நியமனப்படி மேஷஸங்க்ராந்தி புண்யகாலத்தில் கரிவேப்பஞ்சேரி பெத்தவேப்பஞ் சேரி கிராமங்களை ராமர், நம்பெருமாள், வேங்கடேசுவரர், வரதராஜர் ஸஞ்சீவிராயர் (ஹனுமார்) ஆகிய சுமாமிகளின் வழிபாட்டிற்காகவும், கார்த்திகை உத்திராட நட்சத்திரத்தில் தக்கான் வனபோஜனத்திற் காகவும், சூடிக்கொடுத்த நாச்சியார் (ஆண்டாள்) மார்கழி நீராட்ட உற்சவத்திற்காகவும், ஸ்ரீ ராமநவமியன்று ஸ்ரீ ராமாயணம் விண்ணப் பிப்பவர்க்கும் பொன்னும் நீரும் வார்த்துத் தானம் செய்த செய்தியைக் கூறுகிறது.

இக்கல்வெட்டு சின்னமலை நுழைவாயிலில் பாறைப் பகுதியில் தெலுங்கு எழுத்தில் வடிக்கப்பட்டுள்ளது.

1952—53, 1953—54 (Indian Epigraphy) தொல்லியல்துறை வெளியிட்டபடி கல்வெட்டுகள் எண். 205 முதல் 211 வரையும் 287 முதல் 298 வரையும் உள்ள கல்வெட்டுகளில் சிலவற்றின் செய்திகள் மட்டும் குறிப்பிடப்படுகின்றன.

205 முதல் 209 வரை பெரியமலையிலும், 210, 211 சின்னமலை யிலும் படி எடுக்கப்பட்டவை.

வெங்கடபதிதேவமகாராயர் ஆட்சியின்போது சகாப்தம் 1527 விசுவாவசு ௵ தை மாதத்தில் கந்தாடை அப்பங்கார், யக்ஷிராஜ பரிகரம் ஸ்தானத்தார் முன் அக்காரக்கனி நரசிங்கர் பெருமாளுக்கு அமுதுபடிக்குத் தானம் விட்ட செய்தி கூறப்படுகிறது. செய்தவர் நம்பறைநாராப்பர் பேரனும் சின்ன திம்மய்யன் புதல்வனும் ஆகிய சின்னநாராப்பர், நிலதானம்.

சகாப்தம் 1425–ல் சிதிலமான கல்வெட்டு கௌசிக புராண படனம் ..........ட்டிய புராணபடனத்திற்கும், திருவாராதனத்திற்கும் உபயவேதாந்தாசார்யரான கந்தாடை அப்பங்கார் என்று குறிக்கிறது.

மடைப்பள்ளியில் கல்தொட்டியில் தெலுங்கு எழுத்தில் "கந்தாள்ளப்ப" என்று பொறிக்கப்பட்டுள்ளது. அதன் கீழே சங்கு சக்கரத்துடன் தென்கலைத்திருமன் சின்னம் காணப்படுகிறது.

சின்னமலை ஆஞ்சனேயசுவாமி கோயில் நுழைவாயிலில் சித்தார்த்தி ௵ சித்திரை 5-ம் தேதி சிறிகிரிராஜு சின்னதிம்மராஜா கோயில் பிரகாரம் படிக்கட்டு, புஷ்கரணி போன்றவற்றைப் புதுப்பித்ததாக உள்ளது. இக்கல்வெட்டு தமிழ் எழுத்தில் உள்ளது. அதன் எதிர்புறத்தே தெலுங்கு எழுத்தில் சகாப்தம் 1514 (கி. பி. 1619) சித்தார்த்தி ௵ சித்திரை வளர்பிறை 10–ம் நாள் அவன் மேலும் கடிகாசலத்தில் ஸப்தரிஷிகோயிலும், வரதராஜப் பெருமாள் கோயிலும் கட்டினதாகக் கூறுகிறது.

ஊர்க்கோயில் நுழைவாயிலில் முன்புள்ள இரண்டு கல்வெட்டும் சிதைந்துள்ளன. ஒன்று வல்லபம்மன் திருமலையன் என்ற சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவர் தக்கான் துவஜாரோஹணத்தன்றும் தொட்டாசார் திருநட்சத்திரத்தன்றும் ததீயாராதனை செய்ய பொன் கொடுத்ததாகக் கூறுகிறது.

சகாப்தம் 1555 (கி. பி. 1633) ஸ்ரீமுக ௵ சித்திரை 11ம் தேதி ஞாயிறு பூசம் கூடிய ஸ்ரீராமநவமியன்று பாரபத்யம் மணவாள ஐயங்கார் முன் கந்தாடை அப்பங்கார் கட்டளைப்படி பாவாடை தம்மு நாயக்கர் ராமதேவராயர் 200 பொற்காசுகளை பலிசையாக வைத்து ஸ்ரீ கிருஷ்ணஜெயந்தி உரியடி போன்ற நாட்களைக் கொண்டாடச் செய்ததாகக் கூறுகிறது.

சகாப்தம் 1555 (கி.பி. 1633) பிரஜோத்பத்தி ஞ் ஆனி மாதம் ராமாராஜா என்பார் திருவேகா என்னுமிடத்து நிலத்தைத் தானம் செய்ததாகவும் தக்கான் அக்காரக்கனி நாரசிங்கப் பெருமானுக்கு கறியமுது உளப்பட மூன்று தளிகை அமுது படைத்து அதனை கந்தாடை தொட்டயாசார் திருமாளிகையில் எழுந்தருளியுள்ள அழகிய சிங்கப்பெருமாள் சன்னதிக்கு மாற்றி வைத்துப் பூசை செய்து தினம் 12 ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு நித்யததீயாராதனம் செய்ய வேண்டும் என்றும் அதனை சந்திரசூரியர்கள் உள்ளவரை நடத்தி வருவதாகவும் உறுதி கூறும் செய்தி தமிழ் எழுத்தில் தொடங்கி தெலுங்கு எழுத்தில் முடிகிறது.

288ஆம் எண் கல்வெட்டு கூறும் செய்தி :

விஜயநகரத்து வேங்கடபதிதாஸர் ஆட்சிக்காலத்தில் சகாப்தம் 1517 (கி. பி. 1595 ஜூன் 13) மன்மதஞ் உத்தராயணம் மிதுன மாசம் (ஆனி) 2–ஆம் நாள் வெள்ளிக்கிழமையன்று பரவத்தூர் என்னும் கிராமத்தை ஜயகன் அகரம் என்ற பெயருடையது—தக்கான் நித்தியப்படி திருவாராதனத்திற்கும் ஆண்டாள் நாச்சியாருக்கு குறிப்பிட்ட நாள்கள் பூசனைக்கும் பெரியப்பங்கார் திருநட்சத்திரமான உத்திராடத் திருநாளுக்கும் தானம் செய்த செய்தி கூறுவது. செய்தவர் வாதூல கோத்ரத்து ஆபஸ்தம்ப ஸூத்திரம் 1 ஜுச் ராகாத்யாயியான கந்தாடை தேவராஜாசார்யர் பேரனாரும். கந்தாடை அப்பங்கார் குமாரருமான கந்தாடை தொட்டயாசார்யர்.

இக்கல்வெட்டில் முதன்முதலாக இவ்வூர் சோளிங்கபுரம் எனக் குறிப்பிட்டுள்ளது. சந்திரகிரி ராஜ்யத்துத் திருக்கடிகை நாட்டு சோளிங்கபுரப் பற்றுத் திருக்கடிகைக் கோட்டத்து பரவத்தூர் சீர்மை என்று அக்கிராமம் குறிப்பிடப்பட்டுள்ளது.

சகாப்தம் 1558 (கி. பி. 1637) கல்வெட்டொன்று தக்கான், நாச்சிமார் பிரம்மோற்சவம் முதலிய திருநாள்களுத்குப் பல ஆபரணங் களைக் காணிக்கை தந்ததும் 200 பொன் பலிசை வைத்துப்பூசை செய்ய தானமளிக்கப்பட்டதும் கூறுகிறது. தானமளித்தவர் : சாத்தாத அலமேலம்மங்கார்.

பின்னர் நாளில் ஏதோ காரணமாகக் சூடிக்கொடுத்த நாச்சியார் (ஆண்டாள்) விக்ரஹம் இல்லாது போயிற்றுப்போலும். புதிதாக ஆண்டாள் செப்புத்திருமேனி ஏறி அருள்பெற்று அவருடன் கிரிபிரதட் சிணத்திற்குத் தக்கான் புறப்பாடு கண்டருள வேண்டும் என்ற

செய்தியை ஆண்டாள் சன்னதியின் வெளிப்புறச் சுவரிலமைந்த கல்வெட்டு கூறுகிறது. அக்காலத்தே இப்பகுதி முஸ்லிம் ஆளுகைக் குட்பட்டிருந்தது. ஆதலால் அம்மன்னர் பெயரிட்டு பகுசி சாயிபாசா (பருக்சியார்) நாளில் சகாப்தம் 1637 துர்முகி வைகாசி 4 சப்தமியும் திருஓணமும் பெற்ற புதன்கிழமை நாளன்று (கி. பி. 1716 மே மாதம் 2 புதன்) கந்தாடை அப்பங்கார், பக்ஷிராஜபரிகரம் ஸ்தானத்தார், பாரபத்யம் வெங்காஜி பண்டிதர் ஆகியவர்களிடம் உபாதானம் துவாதசி திருவேங்கட ஐயங்கார் குமாரர் திருவ(ள்)ளூர் அப்பங்கார் என்பார் செய்துகொண்ட ஒப்பந்தம். அதன்படி கிரிபிரதக்ஷணத்தின் போது பெருமாளுடன் புதிதாக பிரதிஷ்டை செய்யப்பட்ட ஆண்டாள் நாச்சியாரைப் புறப்பாடு கண்டருளச் செய்யவேண்டும் என்பதாம்.

கி. பி. 1781-இல் ஆங்கிலேயருக்கும் மைசூர் மன்னன் ஹைதர் அலிக்கும் நடந்த போரில் சோளிங்கபுரமும் வரலாற்றுச் சிறப்புமிக்க போர்க்களமாகத் திகழ்ந்தது. இதனை வரலாற்றில் இரண்டாம் மைசூர் யுத்தம் என்ற தலைப்பில் வரலாற்று ஆசிரியர்கள் விளக்கமாக கூறியுள்ளனர். இதன் முதற் குறிப்பு ஆங்கிலேயர் காலத்து வெளி யிடப்பட்ட வட ஆற்காடு மாவட்ட கெஜட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. அக்காலத்தில்தான், பெரிய மலையில் இடைப்பகுதியில் இருந்த தாயார் (அம்மன் சிலை) மலை உச்சியில் பெருமாள் சன்னதியுடன் இணைந்த சன்னதியில் குடிகொண்டார் போலும். ஏனெனில் வைஷ்ணவ கோயிலில் தாயார் சன்னதி தனியாகவே—தனிக் கோயில் நாச்சியார் சன்னதி—விளங்குவதை எங்கும் காணலாம். இங்கு தனிக் கோயில் நாச்சியார் சன்னதியை சிதைந்த நிலையில் விளங்கும் இன்றும் காண்கிறோம்.

இவ்வாறு தொன்மையும், சிறப்பும் வாய்ந்த இப்புகழ் மிக்க திருத்தலம், காலத்திற்கேற்ப பல மாற்றங்களைக் கண்டுவந்தாலும் ஆயிரமாயிரம் அடியவர்களின் மனக்கவலையை மாற்றி அடியவர்களுக்கு எல்லாம் வேண்டுவார்க்கெல்லாம் வேண்டுவன தந்து மகிழ்விப்பதால் புதுப்புது மாற்றங்களைப்பெற்றாலும் புதுப் பொலிவுடன் தன் சீரிளமைத்திறம் குன்றாது விளங்கி வருவது எல்லாம் வல்ல திருமகள் கேள்வனான தக்கான் அரக்கனி நரசிங்கப்பெருமானின் நல்லருள் வளத்தினால் அன்றோ !



# ஆழ்வார்கள் பெருமை

ஸ்ரீ வைஷ்ணவ தரிசனத்தில் ஆழ்வார்கள், ஆசார்யர்களுக்குத் தனித்ததொரு ஏற்றம் உண்டு. அவர்களுக்கு அத்தகைய பெருமை யாதெனில் ஆழ்வார்களும், ஆசார்யர்களும் உலகம் உய்ந்திட நல்வாழ்ச்சி அருளின, காரணத்தினால்தான் ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேசங்கள் சிறந்து விளங்குகின்றன.

ஆழ்வார்கள் வரிசையில் பேயாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் திருக்கடிகை எம்பெருமானைப் போற்றிப் புகழ்ந்து மங்களாசாஸனம் செய்தருளியுள்ளமையால் அவர்கள் வரலாற்றை அறியவேண்டுவது நம் கடமையாகிறது.

உலக நன்மைக்காக வேண்டி தமிழ்மொழியில் பண்ணார் பாடலின் கவிபாடிக் கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கினிய செஞ் சொல் என்றும், அருமறை அந்தாதி ஆயிரமும் செய்யத் தோன்றும் என்றும் குறிப்பிட்டிருப்பதால் பகவத்பக்திக்கு விளைநிலமான திராவிடதேசத்தில் தேனமர்சோலை மாடமாமயிலை ஆதிகேசவப் பெருமாள் கோயில் திருக்கிணற்றிலே உண்டானதொரு செவ்வல்லிப் பூவிலே ஒரு ஐப்பசி மாதத்தில் சதய நட்சத்திரத்திலே எம்பெருமா னுடைய வாளாகிய "திருநந்தகம்" என்பதன் அம்சமாய் பேயாழ்வார் அவதரித்தார். விஷ்ணுபக்தியையே முதன்மையாகக் கொண்டவராய் 'பேயனாயொழிந்தேன் எம்பிரானுக்கே' என்கிறபடியே பகவா னுடைய அனுபவமிகுதியாலே "அழுவன் தொழுவன் ஆடிக் காண்பன் பாடி அலற்றுவன்" என்றும் "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்', என்றும் சொல்லுகிறபடியே பகவானுடைய அனுபவ பாரவச்யம் பிற ஆழ்வார் களைக் காட்டிலும் இவர்க்கு மிக்கு இருந்தமையால் பேயாழ் வார் என்பதையே தம்பெயராகக் கொண்டு விளங்கினார். இவர்க்கு முன் தோன்றியவர்கள் பொய்கை ஆழ்வாரும், பூதத்தாழ்வாரும் ஆவர். இம்மூவரையும் சேர்த்தே சொல்லுவது ஸ்ரீ வைஷ்ணவசம்பிரதாயம் ஆகும்.

இதனை மணவாளமாமுனிகள் தம் உபதேசரத்தினமாலை என்னும் நூலில் "அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார் களில் எப்புவியும் பேச புகழ்ப்பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார் தோன்றிய சிறப்பால் ஐப்பசி மாதத்தில் திருவோணம் அவிட்டம் சதயம் எனும் இம்மூன்று நாள்களும் நமக்கிணை இலா நாள்களாகும்" என்று இவர்கள் அவதரித்த நாள்களைக் கொண்டாடி, மற்றுள்ள ஆழ்வார் களுக்கு முன்னே வந்துதித்த நற்றமிழால் நூல் செய்து நாட்டை உய்வித்த பெற்றிமையோர் என்ற காரணத்தால் முதலாழ்வார்கள் என்னும் பெயர்க்கு உரியரானார்" என்று அருளிச் செய்தார்.

இப்படி மூவரும் உலகினர் போன்று பிறக்காமல் எம்பெருமான் இன்னருளால் பிறந்தாராதலால் முக்குணத்து இரண்டவை அகற்றி என்கிறபடியே ராஜஸதாமஸ குணங்கள் சிறிதும் ஒட்டாதவராய், சுத்தசத்துவ குணம் மிக்கவராய் அதன் காரணமாய் இயல்பாகவே தோன்றிய பகவத்தாஸ்யரஸக் ஞானம் என்னும் தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுகப்பண்டே பரமன் பணித்தவகை என்னும் மெய்ஞ்ஞானம் பெற்றவராய் அதனால் உண்டாய ஸம்யக் ஞானபக்தி வைராக்யங்களை உடையராய், "உனது பாலே போல் சீரில் பழுத்தொழிந்தேன்" என்றாற்போல் உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் என்பதற்கேற்ப பகவானுடைய குணானுபவமே தமக்கு எல்லாமாகக் கொண்டு, உண்டியே உடையே உகந்து சப்தாதி விஷயங்களில் அதிபிரவணராய் தீதில் நன்னெறி நிற்க அல்லாது செய்து பகவானுக்கு எதிர்நிலையில் நிற்கும் நாட்டுமானிடத்தோடு உறவினை அறவே அறுத்து அவர் களுடன் சகவாசம் தங்களால் பொறுக்க முடியாத காரணத்தால் ஒருநாள் இருந்த இடத்தில் ஒருநாளிராமல் ஓரூரில் ஓரிரவே தங்கும் இயல்பினராய் இவர்கள் மூவரும் ஒருவரை ஒருவர் அறியாதே தனித்தனியே வாழும் நாளில், தனக்கு ஆத்மபூதரான இவ்வாழ்வார் களைக் கொண்டு ஜகத்தைத் திருத்த வேணுமென்று எண்ணினான் சர்வேசுவரன்.

அவ்வண்ணமே இம்மூவரையும் சீரேறு மறையாளர் நிறைந்த திருக்கோவிலூர் என்னும் திருப்பதியில் ஒருவீட்டின் இடைகழியில் ஒருநாளிரவு சந்திக்கச் செய்தான் எம்பெருமான். மழைநாளிரவில் அவ்விடைகழியில் (ரேழி என்று வழங்கும் வீட்டின் முன் உள்பகுதி) முதன் முதலாகப் பொய்கையார் உறங்கிக்கொண்டிருக்க, தற்செயலாக அங்கு வந்த பூதத்தார் தாம் தங்க இடம் வேண்ட "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம்" என்று மகிழ்ச்சியுடன் அவரை

வரவேற்றார். இருவரும் வைணவராதலால் வைணவமுறைப்படி ஒருவர்க்கொருவர் தெண்டனிட்டு பகவானுடைய குணாதிசயங்களை கூறிக் கொண்டு சுகமாக வீற்றிருந்தார்கள். அப்போது அங்குவந்த பேயாழ்வார் தாமும் அவ்விடம் தங்கக் கேட்க, "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்" என்றி கூறிப் பொய்கையாரும் பூதத்தாரும் பேயாழ்வாரை வரவேற்றனர். மேலும் ஒருவருக்கொருவர் தெண்டனிட்டுக் கொண்டு அம்மூவரும் அவ்விடை கழியிலேயே நின்றுகொண்டு திருமாலின் திருக்கல்யாண குணங்களை ஒருவருக்கொருவர் சொல்லியும் கேட்டும் மகிழ்ந்தனர்.

பரமபாகவதர்களும் அறிஞர்களுமான இவர்களோடு நெருக்கத்தை விரும்பிய கருநெடுமால் கண்ணன் எம்பிரான் அவர்களுடன் தானும் அவர்களறியாவண்ணம் நெருங்கி நின்று நெருக்கத் தொடங்கினான். செந்தமிழ்ப்பாடுவாராகிய இவர்களருகே தழுவி முழுகிப் புகுந்து நிற்கும் அம்மாயவனை அறிய வேண்டி "நம்மை ஒழியவும் காமர் பூங்கோவல் இடைக்கழியைப் பற்றி நின்றார் யார்? என்று பார்க்க வருத்தும் புறவிருளை மாற்ற, உபனிடதப் பொருளையும் செந்தமிழ்தன்னையும் கூட்டி, ஒன்றத் திரித்துப் பொய்கையாழ்வார் 'வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காக' என்று தொடங்கி, அன்றெரித்த திருவிளக்காக முதல் திருவந்தாதியைப் பாடினார் இறைவனைக் காணும் இதயத்திருள்கெட ஞான மென்னும் நிறைவிளக்கு ஏற்றிப் பார்ப்பார் போன்று, பூதத்தாழ்வார் "அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக, இன்புருகு சிந்தை இடுதிரியா நன்புருகி, ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு ஞானத்தமிழ் புரிந்த நான்" என்று தொடங்கி இரண்டாம் திருவந்தாதியைப் பாடினார்.

இவ்விரண்டு திருவிளக்குகளினாலும் உலகில் மன்னிய பேரிருள் மாண்டபின், சீரேறும் மறையாளர் நிறைந்த செல்வத் திருக்கோவிலூரின் ஓரிடைகழியில் மாமலராள் தன்னொடு மாயனைக் கண்ட தமிழ்த் தலைவரான பேயாழ்வார்" திருக்கண்டேன் பொன்மேனிக் கண்டேன்" என்று தொடங்கி மூன்றாம் திருவந்தாதியைப் பாடினார். ஸ்ரீ மந் நாராயணனுடைய மைப்படிமேனியையும் செந்தாமரைக் கண்ணையும் பரமவைதிகரான மூவாழ்வார்கள் நெஞ்சென்னும் உட்கண்ணாலே கண்டனுபவித்து அவ்வனுபவத்தால் உண்டான அன்பும் வியப்பும் உள்ளடங்காமல், பாலேய் தமிழர் இசைகாரர் என்று சொல்லப் பெறும் நற்றமிழராகையாலே, உலகம்

உய்ந்திட வேண்டி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுணங்களை விரிவாகத் தாங்கள் அனுபவித்து ஞானத் தமிழ் நூல்களாக இயற்றிப் பிறரையும் அனுபவிக்கச் செய்தார்கள்.

நீயும் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்
பாயும் பனிமறைத்த பண்பாளா - வாசல்
கடைகழியா உள்புகாக் காமர் பூங்கோவல்

இடைகழியே பற்றி இனி" என்னும் பாசுரத்திலே பொய்கை யாழ்வார் இச்செய்தியைத் தெளிவாகப் பேசியுள்ளார். அதற்குப் பின் முதலாழ்வார் மூவரும் தேகளீசன் என்று போற்றப்படும் திருக்கோவிலூர் ஆயனாரிடம் விடைபெற்றுக் கொண்டு பல திவ்விய தேசங்களுக்கு யாத்திரையாகச் சென்று, திருமழிசையை அடைந்து, அங்குப் பெருக்கமுடன் திருமழிசை ஆழ்வார் பேயாழ்வரைத் தொழுதெழ, அவரோடு கூடி மகிழ்ந்து பக்தியோகத்தில் ஈடுபட்டு யோக பலத்தால் நெடுங்காலம் வாழ்ந்திருந்து முடிவில் திருக்கோவிலூரையே அடைந்து தூவடிவில் பார்மகள் பூமங்கையோடு சுடராழிசங்கிருபால் பொலிந்து தோன்ற காவடிவில் கற்பகமே போல நின்று கலந்தவர்கட்கு அருள்புரியும் கருத்தினானையே நெஞ்சில் அவனையே எப்போதும் சிந்தை செய்தவாறே திருநாட்டுக்கு எழுந்தருளினார்கள்.

முதலாழ்வார்களுள் முதல்வரான பொய்கையாழ்வார் ஞானம் பிறந்த நிலையை "வையம்தகளியா" என்று தொடங்கி வெளிப் படுத்தினார். இரண்டாமவரான பூதத்தாழ்வார் அன்பே தகளியா" என்று தொடங்கி ஞானம் முற்றி பக்தியாகும் நிலையை வெளிப் படுத்தினார். பேயாழ்வார் "திருக்கண்டேன்" என்று தொடங்கி அந்த பக்தியாலே பரம்பொருளாம் ஸ்ரீ மந்நாராயணனைக் கண்ணாரக் கண்டுஉகந்த காட்சியை விளக்கினார். ஆக மூன்று திருவந்தாதிகளும் சேர்ந்து ஞானம், பக்தி, ஸாக்ஷாத்காரம் என்னும் கண்ணாரக் காணும் நிலையினைச் சொல்லுகின்றன. இவை மூன்றும் முறையே பரமாத் மாவைக் காண்பதாகிற பரபக்தியையும், அதன் முற்றிய நிலையாய் அவனோடு கூடி அனுபவிப்பதாகிற பரஜ்ஞானத்தையும். அதன் முற்றிய நிலையாய் அவனைப் பிரியில் தரிக்க முடியாமை ஆகிற பரமபக்தியையும் விளக்குகின்றன என்றும் பெரியோர்கள் பணிப்பர். முதலாழ்வார் மூவரும் எம்பெருமானின் ஐவகைநிலையாம் பரத்வம், வியூஹம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமித்வம் என்பதில் பரத்வத்தில் மண்டியிருப்பவர்கள் என்பது பூர்வாசார்யர்களின் நிர்ணயம்.

பேயாழ்வார் அருளிச் செய்த மூன்றாம் திருவந்தாதி நூறு பாடல்களைக் கொண்டது. அதில் அறுபத்தொன்றாம் பாசுரம் திருக்கடிகையைக் குறித்ததாகும். இறை எம்பெருமான் கோயில் கொண்டுள்ள திருக்கடிகையை

" பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங்குறைவார்க்குக் கோயில்போல் - வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்பூங்கடிகை
இளங்குமரன்தன் விண்ணகர்" என்று போற்றிப் பரவுகிறார்

பல்வகைத் தடைகளைப் போக்குவதோடல்லாமல், தம் நெஞ்சிலே புகுவதற்காக வேண்டிப் பரமபதத்திலிருந்து திருப்பாற்கடலுக்கும் திருமலை முதலான திருப்பதிகளுக்கும் எழுந்தருளி நெடுங்காலமாக நித்யவாஸம் செய்கின்றான் என்கிறார். இதில் பரமபதத்தை இருப்பிடமாகக் கொண்டு அவ்விடத்திலே நித்யவாஸம் பண்ணும் எம்பெருமானுக்குத் திருப்பாற்கடலும் திருவேங்கடமலையும் வண்டுகளின் கூட்டம் மிக்கிருக்கின்ற பரந்த சோலைகளை உடைய அழகிய இனிய திருக்கடிகைமலையும் ஆகிய இத்திருப்பதிகளெல்லாம் என்னை ஆட்கொள்வதற்கு முன்பெல்லாம் கோயில்களாக இருந்தன. போலும். இப்போதோ வென்னில் என்நெஞ்சம் ஒன்றே அவனுக்குக் கோயிலாயிருக்கிறது. என் நெஞ்சை அடைவதற்கு முன்னெல்லாம் முற்கூறப்பட்ட திவ்விய தேசங்களை அவன் உகப்புடன் எழுந்தருளியிருக்கும் கோயில்களாக இருந்தன. என் நெஞ்சை அடைந்த பின்பு அந்தத் திருப்பதிகளைக் காட்டிலும் என் நெஞ்சமே அவனுக்கு உகந்து வாழும் இடமாய்விட்டது என்பது கருத்து.

"நிற்பதும் ஓர்வெற்பகத்து இருப்பும் விண் கிடப்பதும்
நற்பெருந் திரைக்கடலுள் நானியாத முன்னெலாம்
அற்புதன் அனந்தசயனன் ஆதிபூதன் மாதவன்
நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் என் நெஞ்சுளே"

என்னும் திருமழிசை ஆழ்வாரின் திருச்சந்த விருத்தப்பாசுரம் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

**திருமங்கைமன்னனும் திருக்கடிகையும் :**

திருமங்கையாழ்வாரைக் குறித்து விளக்கும்போது பரமகாருணி கரான பெரியவாச்சான் பிள்ளை இவ்வாழ்வார் ஆகிறார். கங்கையில் புனிதமாய காவிரி ஆறு பல கால்களாகப் பரந்து பொன் கொழிக்கச் செய்யும் பெருமை மிகுந்த சோழவள நாட்டில் திருமங்கை என்னும் பகுதியில் திருவாலி திருநகரி என்ற திவ்ய தேசத்திற்கு மிக அருகிலுள்ள குறையலூர் எனுமூரில் சோழ மன்னனின் சேனாபதி ஒருவரின் மகனாய் திருமங்கையாழ்வார் கலியுகம் பிறந்து 398 ஆவது ஆண்டான நள வருடத்தில் கார்த்திகை மாதத்தில் பௌர்ணமியும் கார்த்திகை நட்சத்திரமும் கூடிய ஒரு வியாழக்கிழமை நன்னாளில் சாரங்கம் என்னும் திருமாலின் வில்லின் அம்சமாக இப்பூவுலகில் அவதரித்தார்.

இவர் பிறக்கும்போதே நீலமேக வண்ணனான கண்ணபிரான் போல் கருமை நிறத்துடன் இருந்ததால் இவர் தம் பெற்றோர் இவருக்கு "நீலன்" என்று பெயரிட்டனர். வளர்ந்தபின் தமது குடிக் கேற்ப ஆயுத வித்தைகளில் தேர்ச்சி பெற்று சோழ அரசனின் சேனாதிபதியாய் அமர்ந்து பல போர்களில் பகைவரை வென்று விளங்கியதால் 'பரகாலன்' (எதிரிகளுக்கு யமன் போன்றவர்) என்று புகழ் பெற்றார். இவரது வீரத்தை மதித்த அரசன் இவரைத் திருமங்கை நாட்டிற்கு மன்னனாக்கித் தனக்குக் கீழ் சிற்றரசனாய் இருக்கும்படி முடி சூட்டினான். அதனால் 'திருமங்கைமன்னன்' என்று பெயர் பெற்றார். இவ்வாறு குறுநில மன்னராயிருந்து இயல் இசை நாடகம் எனும் முத்தமிழினும் ஈடுபாடுடையராய் நான்கு புருஷார்த்தங்களில் மூன்றாவதான காம புருஷார்த்தத்திலேயே கண் செலுத்துபவராய் இருந்தார். தர்மம், அதர்மம், காமம், மோக்ஷம் என்றல்லவோ புருஷார்த்தங்கள் நான்காகச் சொல்லப்பட்டுள்ளன.

திருமங்கை நன்னாட்டில் திருவெள்ளக்குளம் (இப்போது அண்ணன் கோயில் என்று வழங்கும் திருப்பதி) எனும் திருப்பதியில் வைணவ வைத்தியர் ஒருவர் குமுதவல்லி என்ற தெய்வ மகளை தம் மகளாகப் போற்றி வளர்த்து வந்தார். அவளுக்கு விவாஹத்திற்குரிய பருவம் வந்தவுடன் 'வடிவழகும் நற்குணங்களும் மிக்க இக்கன்னிகைக்குத் தக்க கணவனைத் தேடவேண்டுமே' என்று மிகக் கவலையுடனிருந்தார். சீதாபிராட்டியை அநசூயை கேட்டபோது தன் பிறப்பினை எடுத்துச்சொல்லித் தனக்கு வரன் தேடும் விசயத்தில் தன் தந்தை ஜனகமஹாராஜர் மிகவும் கவலைப்பட்டதாகவும் "ஒரு பெண்ணைப் பெற்றவன் தக்க காலத்தில் திருமணம் செய்யவில்லையெனில் இந்தி

ரனைப்போன்று பெருஞ்செல்வம் பெற்றிருந்தாலும், தனக்கும் சமமானவர் மட்டுமல்ல; தன்னிலும் இழிந்தாரிடத்தும் ஏச்சும் பேச்சும் கேட்கவேண்டியதாகிறது" என்று கூறி வருந்தியுள்ளாள். குழந்தைப் பேரற்ற அந்த வைத்யரின் வளர்ப்பு மகளான அக்குமுதவல்லியின் ரூபலாவண்யத்தையும் சௌந்தர்யத்தையும் கேள்விப்பட்ட, காம புருஷார்த்தத்திலேயே மண்டியிருந்த நீலனார், திருவெள்ளக் குளத் திற்குச்சென்று, குமுத வல்லியை நேரில் கண்ட அளவில் காதல் மிக்க கொண்டு அவளைத்தனக்கு மனைவியாக்க வேண்டும் என்று வைத்யரிடம் மன்றாடிக்கேட்டுக்கொண்டார்.

பெற்றோர், பெருமகிழ்ச்சியுடன் இசைந்தாலும் குமுதவல்லி குறுக்கிட்டு திருஇலச்சினைப்பெற்ற ஒரு வைணவர்க்கேயன்றி பிறர்க்கு வாழ்க்கைப்பட மாட்டேன்'' என்று தன் கருத்தைத் தெரிவித்தாள். அதனைக் கேட்ட மங்கைமன்னன் விரைந்து திருநறையூர் எனும் திவ்ய தேசத்திற்குச்சென்று அங்குள்ள நம்பி என்னும் பெருமானை தமக்கு வைஷ்ணவஸம்ஸ்காரம்செய்ய வேண்டும் என்று பிரார்த்தித்தார். திருநறையூர் எம்பெருமான் திருமங்கை மன்னனுக்கு பஞ்சஸம்ஸ்காரம் என்னும் திருவிலச்சினை, திருநாமம் முதலியவற்றை ஸாதித்தருள மங்கைமன்னனும் பரமவைஷ்ணவ கோலத்துடன் திருவெள்ளக்குளம் திரும்பினார். மீண்டும் குமுதவல்லி ''நீர் ஓராண்டுக் காலம் நாள்தோறும் ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர் களுக்கு அமுது செய்வித்து, அவர் தம் ஸ்ரீ பாத தீர்த்தத்தை உட் கொண்டாலன்றி உம்மை நான் மணக்க முடியாது'' என்று மேலும் ஒரு நிபந்தனை விதித்தாள். அவளிடம் கொண்ட ஆராக்காதலால் பரகாலன் அதற்கும் உட்பட்டு சபதம் செய்து கொடுக்க, அதன்பின் இருவர்க்கும் இனிதே திருமணம் நிறைவேறிற்று.

பின்னர் ஒப்புக்கொண்டதற்கேற்ப பரகாலன் தினந்தோறும் ஆயிரத்தெட்டு பாகவதர்களுக்குத் ததியாராதனை செய்து வந்தார். அதற்கு மிகுதியாகப் பொருள் வேண்டியிருந்ததால், அரசனுக்குச் செலுத்த வேண்டிய பகுதிப் பணத்தையும் செலவிட்டுவிட்டார். இதைப்பற்றி செவியுற்ற அரசன் 'கப்பம்' வாங்கிவருமாறு ஏவலரை அனுப்ப அவரும் அவர்களிடம் நாளை, மறுநாள் என்று தவணை சொல்லித் தாமதப்படுத்தி வந்தார். அதுகேட்ட அரசன் சில வீரர்களை அனுப்பி இறைப்பொருள் இறுக்கும்படி வற்புறுத்த, நீலனார் வெகுண்டு அவர்களை விரட்டி அடித்தார். அதையறிந்து சீற்றம் மிகக்கொண்ட அரசன் ஒரு படையை அனுப்ப, அப்படை வீரர் பரகாலனை வளைத்துப் பிடிக்க முற்படும்போது, அவரும் 'ஆடல்மா'

என்னும் தம் குதிரைமீதேறி மிகச் சிறப்புடன் போர் செய்து அப்படை யையும் படைத்தலைவனையும் புறமுதுகிட்டோடச் செய்தார்· அதனால் அரசனே பெரும்படையுடன் நேரில் போர்க்களம் போந்து போர்புரிய பரகாலரும் தம் படைவலிமையினாலும் தோள்மிடுக்கினா லும் அரசனது சேனைக்கடலை மந்திரமலை போன்று கடையத் தொடங்கினார். அதுகண்டு வியந்த அரசன் தந்திரமாக அவரது வீரத்தைப் பாராட்டுவது போன்று தன்னருகே அழைத்து, அவரைத் தன் மந்திரியின் வசத்திலாக்கித் தன் கப்பப் பணத்தைச் செலுத்தி விட்டு விடுதலை பெற்றுச் செல்லுமாறு கூறிச் சென்றுவிட்டான். அம்மந்திரி அவரைச் சிறை செய்து ஒரு தேவாலயத்தில் வைத்து விட்டான். அங்கு அவர் உணவில்லாமல் மூன்று நாள் பட்டினிகிடந்து வருந்தும் போது காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் அவரது கனவில் தோன்றி காஞ்சிபுரம் வந்தால் வேண்டிய பொருள் தருவதாகக் கூறி மறைந்தார்.

பரகாலரும் மந்திரியிடம் தமது கனவுச் செய்தியைச் சொல்லி அவனை அழைத்துக்கொண்டு காஞ்சி மாநகரம் சென்றார். அங்கு வேகவதி நதிக்கரையில் வரதராஜப் பெருமாள் காட்டிய இடத்தில் தோண்டிப் பார்க்கப் பெரும்பொருள் கிடைக்கப் பெற்றார். அரசனுக்கு உரிய கடமைப் பொருளைச் செலுத்தி எஞ்சிய பொருளைத் ததியாரா தனைக்கென்று வைத்துக் கொண்டார். மந்திரி அந்நிதியை அரசனிடம் சேர்ப்பித்து நிகழ்ந்ததனைத்தையும் எடுத்துக் கூறக் கேட்ட அரசன் பெருவியப்படைந்தான். பரகாலரை வரவழைத்து விசேஷமாகக் கௌரவித்து தன் பிழை பொறுக்குமாறு பிரார்த்தித்து, தனக்குச் செலுத்தப்பட்ட பொருள் முழுவதையும் மீண்டும் அவர்க்கே உரிமை யாக்கி பாகவத ஆராதனத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளுமாறு கூறி அனுப்பினான். மங்கை மன்னன் மகிழ்ச்சியுடன் அப்பொருள் அனைத்தையும் பாகவத ததியாராதனையில் முற்றுமாய்ச் செலவிட் டார். மேலும் ததியாராதனைச் செய்யப் பொருள் இல்லாது மனம் கவன்றார் "தீய வழிகளில் பெரும் பொருளைத் தேடிக் குவித்து வைத்துக்கொண்டிருப்பவர்களிடமிருந்து அப்பொருளை வலிய பறித்துக் கொண்டாலும் களவு கொண்டாலும் அதனை நல்வழியில் செலவிடும் நோக்கத்தால் செய்தால் குற்றமாகாது; பாவமாகாது என்ற அறநூலுரையை அறிந்ததால் அத்தகு செல்வத்தை வழிபறித்தாவது ததியாராதனை கைங்கர்யத்தை தொடர்ந்து செய்யவேண்டும் என்று மனம் துணிந்து தமக்கு உற்ற தொண்டர்கள் நால்வரைத் துணைவ ராகக் கொண்டு, காட்டு வழிகளில் பதுங்கியிருந்து, அவ்வழியாக வரும் பெருஞ்செல்வர்களிடம் கொள்ளை கொண்டு அத்திரவ்வியம்

கொண்டு திருமாலடியார்களைப் பூசிக்கும் நோன்பினைத் தவறாமல் செய்து வந்தார். இப்படித் ததியாராதனைச் செய்து அடியார்களுடைய ஸ்ரீ பாத தீர்த்தத்தையும், அவர்கள் போனகம் செய்த சேடத்தையும் உண்டு வந்த மஹாத்மியத்தால் தனக்கென வாழும் நிலை கழிந்து அடியார்களுக்காகவே வாழும் நிலையை அடைந்தார்.

இந்நிலையில் இவரை ஆட்கொள்ளத் திருவுள்ளம் பற்றிய இறைவன், இவர் தன்னை வழிபறிக்குமாறு, பிராட்டியும் தானுமாய் புதுமண அந்தண தம்பதி கோலம் பூண்டு விசேஷமான ஆடை அணிகலன்களைப் பூண்டு, இவர் பதுங்கி நிற்கும் வழியிலே வந்தான். திருவாலி திருநகரிக்கு அருகில் திருமணங்கொல்லையில் அரசமரத்தின் கீழே பதுங்கியிருந்த பரகாலர் 'இன்று நமக்கு நல்ல வேட்டை' என்று மகிழ்ச்சியுடன் அத்தம்பதிகளை வளைத்து ஆடை அணிகலன்களை எல்லாம் பறித்துக் கொண்டார். அனைத்தையும் கொள்ளைகொண்ட ஆலிநாடர் அம்மணமகன் காலில் அணிந்திருந்த கணையாழி மோதிரத்தைக் கண்ணுற்றார். அதனையும் கவர்ந்திட விரும்பிக் கையால் மணமகனின் காலைப் பற்றி கழற்ற முடியாமையால், அதை யும் விடாமல் தம் பற்களால் கடித்து வாங்க அம்மிடுக்கை நோக்கிய அந்தண வடிவில் வந்த எந்தையெம்பெருமான் "கலியனோ" [பெரும் பலமுடையவனோ நீ] என்று இவரை வியந்து அழைத்தான். அதனால் திருமங்கை மன்னனுக்குக் "கலியன்" என்னும் ஒரு பேராயிற்று.

பின்னர் கொள்ளை கொண்ட பொருள்களைச் சுமையாக கட்டி வைத்ததை எடுக்கப் பார்க்க, அக்குவியல் சுமை பெருமிடுக்குடைய கலியனுக்கும் எடுக்க முடியாதபடி மலைபோல நிலையாயிருக்க, கண்டுக் வியப்புற்று அவ்வந்தணனை நோக்கி "நீ என்ன மந்திரவாதம் பண்ணினாய்"? அம்மந்திரத்தை எனக்குச் சொல்லு என்று தம் கையில் உள்ள வடிவாளைக் காட்டி அச்சுறுத்திக் கேட்டார். அவ் வந்தணனும் புன்னகை முகத்தனாய் ஆலி நாடரே, அம்மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறோம்; வாரும்" என்று அருகில் அழைத்து, எல்லா வேதங்களுக்கும் ஸாரமாய் பிறவிப் பிணி அறுத்து, பரமபதம் அளிப் பதாய் மந்திரங்களுக்கெல்லாம் அரசனான திரு அஷ்டாட்சர மஹா மந்திரத்தை முன்பு பதரிகாச்சிரமத்தில் நரநாரணனாய்த் தனக்குத் தானே உபதேசித்த குறைதீர பரகாலர் செவியில் உபதேசித்து முடித்த அளவில்'' கருமுகில் தாமரைக்காடு பூத்து நீடு இருசுடர் இருபுறத்தேந்தி ஏடவிழ் திருவொடும் பொலிய ஓர் செம்பொற்குன்றின் மேல் வருபவன் போல் கருடன் மேல் வந்து தோன்றி'' அருள்புரிந்தான்.

இப்படி எம்பெருமானிடமிருந்தே திருமந்திர உபதேசம் பெற்ற தாலும், அவனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை நேரில் சேவித்த தாலும், கால்விரலில் பதித்திருந்த அனுகாழியை கழற்றும்போது அவனுடைய தேனே மலரும் திருவடி தாமரையிலே வாய்வைத்ததாலும் கலியன் அஜ்ஞான இருள் பரிபூரணமாக ஒழியப்பெற்று மயர்வற்ற மதிநலம் பெற்றார். எம்பெருமானைப் பரிபூரணமாக அனுபவித்து, அவ்வனுபவத்தால் உண்ட பேரன்பும் பெருங்காதலும், உள்ளடங் காமல் வாக்ப்ரவாஹமாகப் பெருவெள்ளமிட்டு, பெரிய திருமொழி திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் "என்கிற திவ்யப் பிரபந்தங்களைப் பாடவல்லவரானார்". உடனே 'வாடினேன் வாடி' என்று தொடங்கி தம்மை உய்வித்த திருவெட்டெழுத்து மந்திரத்தின் பெருமையை 'நான் கண்டு கொண்டேன் நாராயண என்னும் நாமம்' என்றொருகால் சொன்னாற்போலே ஒன்பதின்கால் சொல்லிப் பெரிய திருமொழி நூலைப் பாடத் தொடங்கினார். எம்பெருமான் உகந்தருளின நிலங் களுக்கு எல்லையான ஹிமவானில் திருப்பிரிதி அளவும் சென்று திருப் பிரதி எம்பெருமானை மங்களாசாஸனம் செய்து, திருவெட்டெழுத்தை தானே சிஷ்யனுமாய்த்தானே ஆசார்யனுமாய் நின்று வெளியிட்டருளிய நரநாராயணர்கள் வாழிடமான பதரியையும், பதரியாச்சிரமத்தையும் எம்பெருமான் காட்டக் கண்டு மங்களாசாஸனம் செய்தருளினார்.

இவ்வாறு இரண்டொரு திவ்யதேசத்துடன் அமையாமல் பாரத தேசத்தில் இறைவன் திருக்கோயில் கொண்டுள்ள திருப்பதிகள் பலவற்றையும் பாடத் திருவுள்ளம் கொண்டு முதலில் வடநாட்டுத் திருப்பதிகளைப் பாடியவாறே பல்வேறு திவ்ய தேசங்களை மங்களா சாஸனம் செய்தருளினார். இவர் மிகுதியான திவ்யதேச எம்பெரு மான்களைப் பாடிப்பரவி மங்களாசாஸனம் செய்த ஒரே ஆழ்வார் ஆவார்.

இவர் செய்த ஆறு பிரபந்தங்களும் மாறன்சடகோபனாகிய நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களுக்கும் அங்கமாகக் கூறி போற்றப் படும் நான்கு வேதங்களுக்கும் சீஷை, வியாகரணம், ஜோதிடம், நிருத்தம், சந்தசு, கல்பம் என்பன ஆறும் அங்கமாகக் கூறப்படும் நம்மாழ்வாரின் நான்கு நூல்களான திருவிருத்தம் திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகியவை நான்கும் தென்மொழி வேதமாகும். அதற்குத் திருமங்கை மன்னனின் ஆறு நூல்களும் ஆறு அங்கமாகும். இதுபற்றியே மணவாள மாமுனிகள்,

" மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன்
ஆறங்கம் கூற அவதரித்த — வீறுடைய
கார்த்திகையில் கார்த்திகை நாள் இன்றென்று காதலிப்பார்
வாய்த்தமலர்த்தாள்கள் நெஞ்சே வாழ்த்து"

என்று பாசுரமிட்டார்.

திருமங்கை மன்னன் மயர்வற மதிநலம் அருளப்பெற்று ஆழ்வாரான பின் சோழ நாட்டுத் திருப்பதிகளை மங்களாசாஸனம் செய்து வருகையில், சீர்காழி வந்தடைந்தபோது இவருடைய சீடர்கள் இவரது பல்வேறு பெருமைகளை எடுத்துக்கூறுவதைத் தடுக்க முற்பட்ட மாற்றுச் சமயத்தவரையும் மகிழச் செய்த காரணத்தால் சைவரான திருஞானசம்பந்தர் தமது வேலாயுதத்தை இவர்க்குக் காணிக்கையாக செலுத்தி சென்ற காரணத்தால், அவ்வெற்றி தோன்ற திருநாமப் பாசுரத்திலே தம்மை 'அங்கமலத் தடவயல்சூழ் ஆலிநாடன். அருள்மாரி, அரட்டமுக்கி, அடையார் சீயம், கொங்குமலர்க் குழலியர்வேள், மங்கைவேந்தன், கொற்றவேல் பரகாலன், கலியன்" என்று அறிமுகப்படுத்திக் கொண்டு தமது விருதுகளைப் பொறித்து வைத்திருக்கிறார்.

திருவரங்கச் செல்வனான அழகிய மணவாளனுக்கு விமானம், மண்டபம், கோபுரம் மதில் முதலான கைங்கரியங்களைச் செய்தார். இதற்குப் புறச் சமயப் பொன் விக்ரஹம் உதவியதாகவும், அது நாகப் பட்டினத்திலிருந்து திருமங்கையாழ்வாரால் பெருமுயற்சியுடன் கொண்டு வரப்பட்டது என்றும் கூறப்படுகிறது. பின்பு வந்த ஸ்ரீ பராசர பட்டர் என்னும் ஆசார்யர் தமது ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் என்னும் ஸ்ரீ ரங்கத்து அழகிய மணவாளனின் துதி நூலில் "சமணர் முதலானரின் ரத்தினம் பொன் முதலானவற்றாலான பிம்பங்களைத் தம் தோள்வலி யாலே வென்று கொண்டு வந்து, அவற்றையும் வைதிகமாக்குகிறவர் போல் அவற்றைக் கொண்டு திருவரங்கச் செல்வனின் மணிமண்டபங் களையும், திருமதில்களையும் ஏற்படுத்தினார் பரகாலகவி. அவற்றை வணங்குகிறோம்" என்று "ஜிதபாஷ்ய" என்ற சுலோகத்தில் தெளிவாகக் கூறியுள்ளார். இவ்வாறு கோயில் கைங்கரியம் செய்து வரும்போது தொண்டரடிப் பொடியாழ்வார் இறைவனுக்குத் திருமாலை தொடுத்து வந்த இடம் நேர்பட, அவ்வாழ்வாரிடம் தாம் கொண்டுள்ள கௌரவபுத்தியாலே அதனை அழித்து மதில்கட்டாமல் அதை ஒதுக்கிக் கட்டச் செய்தார்.

திருக்கலியன் நமது ஆறு திவ்ய பிரபந்தங்களையும் அருளிச் செய்த பின்பு திருவரங்கத்தம்மான் முன் திருநெடுந்தாண்டகம் எனும் தனது நூலைத் தேவகானத்தில் இசைத்துப்பாட, அதனால் திருவுள்ள முகந்த பெரிய பெருமாள்' உமக்கு வேண்டும் வரம் பெற்றுக் கொள்ள வும் என்று சோதிவாய்திறந்தருளினார். அதனையேற்று "தேவரீர் மார்கழி மாதத்தில் கண்டருளுகிற அத்யயன உற்சவத்தில் (இராப் பத்துத் திருநாள்) நம்மாழ்வார் அருளிய திராவிட வேதத்தையும் திருச்செவி சாத்த வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அவ்வண்ண மே அரங்கமாளியும் அருள்புரிந்தான். அவ்வாணையின்படி மங்கை மன்னன் ஆழ்வார் திரு நகரியிலிருந்து அர்ச்சாரூபியான நம்மாழ்வாரை வருடந்தோறும் ஸ்ரீ ரங்கத்துக்கு எழுந்தருளச் செய்து அவர் முன்னிலையில் உபயவேத (தமிழ் வேதமாம் திருவாய்மொழி, வட மொழி வேதம் ஆகிய இரண்டு வேதங்கள்) பாராயணத்தையும் சிறப்பாக நடக்கச் செய்து, பத்து நாள் பெருந்திருவிழாவாகக் கொண்டாட ஏற்பாடு செய்தார். இப்படி பத்துநாள் விழாவாகத் தொடங்கிய திருவத்யயன உற்சவம், ஆசார்யர்கள் காலத்தில் மற்றை ஆழ்வார்களுடைய திவ்ய பிரபந்தங்களுக்காகப் பத்துநாள் பகல்பத்து உற்சவமும் ஆகச் சேர்த்து இருபது நாள் உற்சவம் முடிந்தபின்பு இயற்பா உற்சவமும் சேர்க்கப்பட்டு இருபத்தியொருநாள் உற்சவமாக வளர்ந்தது. ஸ்ரீ பராசரபட்டர் காலத்தில் திருநெடுந்தாண்டகத்தின் சிறப்பு நோக்கிப் பகல்பத்துக்கு முந்தின நாள் திருநெடுந்தாண்டக உற்சவமும், சேர்க்கப் பெற்று இப்போது உள்ளபடி நடந்து வருகிறது.

திருமங்கைமன்னன் தம் பெரிய திருமொழியில் திருக்கடிகைக் கோனைத் தேனினும் இனிய தீந்தமிழால் பெயரிட்டுப் பாடிப் பரவு கிறார். பெரிய திருமொழி எட்டாம்பத்தின் ஒன்பதாம் பெரிய திருமொழி திருக்கண்ணபுரத்தெம்பிரானை மங்களாசாஸனம் செய்யும் பதிகமாகும். ஒன்பதாம் பத்து முழுவதுமே திருக்கண்ணபுரத்தெம் பெருமானை விஷயமாக உடையது. கண்ணபுரம் ஒன்னுடையானுக் கடியேன் வேறு சிலர்க்கு பவ்மண் (அடிமை) ஆகமாட்டேன் என்று கூறி அதுக்கடி இறைவனின் நிரதிசய போக்யதை என்று அக்காரக் கனியை அனுபவிக்கிறார்.

"மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை என்னுள்
புக்கானைப் புகழ்சேர் பொலிகின்ற பொன்மலையை
தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த
அக்காரக் கனியை அடைந்துய்ந்து போனேனே"

எல்லோரினும் உயர்ந்தவனும், வேறொன்றால் காணவேண்டாதே தனக்குத் தானே ப்ரகாசமாக இருப்பவனும் - ப்ரமாணங்களாலே அறியப் பார்க்குமவர்க்கு அவற்றாலே ப்ரகாசிக்கும் மேன்மைக்கு எல்லையின்றியிருப்பது–என் இதயத்தில் தானே புகுந்தவனும் ஒரு ஸம்ஸாரி சேதனனுடைய ஹ்ருதயத்திலே அவனுக்கு விருப்பமில்லா. திருக்கவும் தானே போய் புகுவதே ! இது ஒரு நீர்மை இருக்கும் படியே ! என்று இருந்ததே குடியான எல்லாருமொக்கச் சொல்லுகை யாலே வந்த மிக்க புகழை உடையவனாய்க் கொண்டு மிகப் பிரகாச மாக விளங்குகின்றவனும் பரமதார்மிகனுமான திருக்கடிகையாகிற மலையின்மேல் அக்கராம் போலும் கனிபோலும் நிரதிசய போக்யனாய் இருக்கிறவனை அடைந்து உஜ்ஜீவிக்கப் பெற்றேன்'' என்றார் ஆழ்வார்.

இவ்வாறு காரிமாறன் சடகோபன் அக்காரக்கனி என்று சூட்டிய பெயரை மாறன் உரைத்த தமிழ்மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்த திருமங்கையாழ்வார் திருக்கடிகை எம்பெருமானுக்குரிய தாக்கித் தேனும் பாலும் கண்ணலும் அமுதமாயும் தித்திக்கும் மிக்கான், மறையாய் விரிந்த விளக்கு, என்னுள் புக்கான், புகழ்சேர் பொலிகின்ற பொன்மலை, நக்கான் அக்காரக்கனி என்றெல்லாமான பெயர்களால் சுவை கூட்டி அகமிக மகிழ்கிறார். ஆதலால் அக்காரக் கனி என்னும் திருநாமம் திருக்கடிகை எம்பெருமானுக்கே அணிதர ஸாதாரணமாயிற்று.

**நம்மாழ்வார் மங்களாசாஸனம் பெற்ற பெருமை :**

திருக்கடிகை எம்பெருமானுக்கு அக்காரக்கனி என்ற திருப் பெயர் வந்த வரலாறு பற்றிப் பார்ப்போம். அக்காரக்கனி என்ற பெயரை முதன்முதலாக அருளிச் செய்தவர் நம்மாழ்வார். ஆதலால் அவரது சரிதத்தைச் சுருக்கமாக இங்குப் பார்ப்போம்.

நம்மாழ்வாரது அவதாரம் ஸ்ரீ பாகவதத்திலும் உணர்த்தப் பட்டுள்ளது. "கேசவன்தமர் கீழ்மேல் எமர் ஏழெழு பிறப்பும்'' என்று இவ்வாழ்வார் தாமே அருளிச்செய்தபடி "ஏழ்படி கால் தொடங்கி வந்து வழி வழி ஆட் செய்யும், மறந்தும் புறந்தொழாத சுத்த ஸ்ரீ வைஷ்ணவ குடியில் அவதரித்தவர் இவ்வாழ்வார். பாண்டிய நாட்டில் தாமிரவருணி நதிக்கரையில் திருக்குருகூரில் வேளாண் குளத்தில் காரியார் உடைய நங்கையார் என்பார்க்கு "மாறன்'' என்றும் "சடகோபன்" என்றும் "பராங்குசன்'' என்றும் பேர் பெற்ற

வராய் உலகுய்ய வந்தவதரித்தவர் நம்மாழ்வார். நம்மாழ்வாரின் தந்தையாரான காரியார் தம் பத்தினியைப் பிறந்தகம் அழைத்துப் போய் மீண்டும் வரும்போது திருக்குறுங்குடி எம்பெருமானை வணங்கி வழிபட்டுத் தமக்குப் பிள்ளைவரம் அருளுமாறு வேண்ட, எம்பெருமானும் அர்ச்சகர் வாயிலாக 'நாமே வந்து பிறக்கிறோம்' என்று வரம் தந்து சேனை முதல்வரை நம்மாழ்வாராக அவதரிக்கும்படிக் கட்டளையிட்டான். இவ்வாறு கலியுகம் பிறந்த நாற்பத்து மூன்றாவது நாளில் பரமாதி வருஷத்தில் வைகாசி மாதம் சுக்லபக்ஷ சதுர்தசி திதியும் விசாக நட்சத்திரமும் கூடிய வெள்ளிக்கிழமையில் ப்ரபண்ணஜன கூடஸ்த்தரான நம்மாழ்வார் அவதரித்தார். இவரது அவதாரம் வகுளபூஷன பாஸ்கரோதயம் என்று பெரியோர் பணிப்பர்.

இப்படித் திருக்குறுங்குடிநம்பியின் அம்சமாகவும் சேனை முதல்வருடைய அம்சமுமாக ஆழ்வார் அவதரிப்பதற்கு முன்னரே "சென்றால் குடையாம்" என்ற முறையில் இறைவனுக்குத் தொடர்ந்தடிமை செய்யும் திருவனந்தாழ்வான் இவர்மீது மழை வெயில் முதலியன படாமல் ரக்ஷிப்பதற்காகத் திருக்குருகூரில் ஒரு புளியமரமாக அவதரித்து வளர்த்திருந்தான்.

நம்மாழ்வார் பிறந்த நாள் தொடங்கிப் பகவதனுபவத்தால் வாட்டமில்லாது வளர்ந்து வந்தார். அத்தெய்வக் குழந்தை உலகினர் போன்று அழுவது தாய்ப்பால் உண்பது முதலிய செயலைச் செய்யாது உலக நடைக்கு மாறாக இருந்ததனால் வியப்பும் திகைப்பும் கண்ட பெற்றோர் திருக்குருகூரின் பொலிந்து நின்ற பிரான் ஸந்நிதிக்கு அக்குழந்தையை எடுத்துச் சென்று பிரானைச் சேவிக்கப் பண்ணி "மாறன்" என்ற பெயரையும் சூட்டி, அப்புளிய மரத்தினடியில் ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறுத்தொட்டிலில் கண்வளர்த்தி எம்பெருமான்மீது பாரத்தை வைத்துப் போற்றி வந்தார்கள். எம்பெருமானும் சேனை முதல்வரை அனுப்பி ஆழ்வாருக்கு பஞ்சஸமஸ்காரங்களையும் செய்வித்து எல்லா அர்த்தங்களையும் உபதேசிக்கச் செய்து மயர்வறமதிநலம் அருளினான்.

கருவிலிருக்கும் போது குழந்தைகளின் அறிவை மறைக்கும் சடம் எனும் வாயுவைத் தாம் பிறக்கும்போது தம்மை மேலிடாதபடி ஹுங்காரத்தால் ஓட்டியவராகையால் இவ்வாழ்வார்க்கு சடகோபர் என்னும் பெயரும் வழங்கலாயிற்று.

நம்பெருமானாகிற ஸ்ரீ ரங்கநாதனால் "நம் ஆழ்வார்'' என்று அபிமானிக்கப்பெற்றதால் இவர்க்கு நம்மாழ்வார் என்ற பெயரும் உண்டாயிற்று. பொலிந்து நின்றபிரான் திருவுள்ளம் உகந்து தாம் சூடிக்களைந்தருளிய மகிழமாலையைத் தரித்ததால் "நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன்'' என்று தாமே அருளிச் செய்தபடியே மகிழ்மாலை மார்பினர், வகுளாபரணர் என்றும் பேர் பெற்றார். பிற மதங்களாகிற யானைகளை தம் தெய்வத்தமிழ் நூற் பொருளால் செருக்கடக்கி அவற்றுக்கு அங்குசம் (மாவெட்டி) என்னும் கருவி போலிருக்கையால் பராங்குசர் என்றும் புகழ் பெற்றார். பதினாறு ஆண்டு காலம் வாய் திறவாது பகவதனுபவத்தில் மூழ்கியிருந்த இவருக்கு பரவாசுதேவனும், வியூஹமூர்த்திகளும் விபவ மூர்த்திகளும் அந்தர்யாமி என்பெருமானும், திவ்ய தேசங்களில் விளங்கும் அர்ச்சா மூர்த்திகளும் திருப்புளியாழ்வார் கீழே சேவை சாதித்தனர். அவ்வெம்பெருமான்களுடைய ஸ்வரூப ரூப குணவிபூதி களை அனுபவித்து அவ்வனுபவத்தால் உண்டான ப்ரீதீ உள்ளடங்காமல் வழிந்து 'இழிபட்டோடும் உடலினிற் பிறந்து தன் சீரியான் கற்று மொழிபட்டோடும் கவிய முதநுகர்ச்சி' என்று தாமே கூறினாற் போன்று திருவிருத்தம், திருவாசிரியம் பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு திவ்யப்ரபந்தங்களாக வெளிப்பட்டது. திருவிருத்தம் ருக்வேதசாரமாகவும், திருவாசிரியம் யஜுர்வேதசார மென்றும். பெரிய திருவந்தாதி அதர்வன. வேதசாரமென்றும், திருவாய்மொழி, சாமவேதசாரம் என்றும் இவையனைத்தும் செந்தமிழ் வேதம் என்றும் முன்னோர்கள் மொழிந்துள்ளனர்.

இவ்வாழ்வார் முப்பத்தைந்து ஆண்டு காலம் இந்நிலவுலகில் எம்பெருமானையே நினைந்து வாழ்ந்து 'சூழ்விசும் பணி முகில்' என்று தாமே அருளிய திருவாய்மொழியில் எம்பெருமான் தமக்குக் காட்டிய படியே அர்ச்சிராத்கதியாலே சென்று நித்யசூரிகளெல்லாம் எதிர் கொள்ள வைகுந்த மாநகர் புக்குத் திருமாமணி மண்டபத்திலே எம்பெருமானுக்கும் நித்யபோக்கியவஸ்துவாய் அந்தமில் பேரின்பத்தை அடைந்து அங்க கடியவரோடு உடன் வாழலானார்.

இவர் தம் பெருமையை எடுத்தியம்ப எவராலும் முடியாது என்பதை மணவாள மாமுனிகள் தமது உபதேச ரத்தினமாலை எனும் நூலில்

"உண்டோ வைகாசி விசாகத்துக் கொப்பொருநாள் ?
உண்டோ சடகோபர்க்கொப்பொருவர் ? — உண்டோ
திருவாய்மொழிக் கொப்பு ? தென்குருகைக் குண்டோ ?

ஒருபார்தனிலொக்குமூர் ? என்று வினா மேல் வினாவாக வினவி இவர்தம் பெருமைக்கு ஈடுமில்லை, இணையுமில்லை என்று உறுதியாகக் கூறிவிட்டார்.

இந்நம்மாழ்வார் திருக்கடிகை எம்பெருமானை வெளிப்பட மங்களாசாஸனம் செய்யவில்லை எனினும் "எம்மா வீடு" எனும் திருவாய்மொழி இரண்டாம்பத்தின் ஒன்பதாம் திருவாய்மொழியில் எக்காலத்தெந்தையாய்' என்று தொடங்கும் ஒரு பாசுரமிட்டுள்ளார்.

"எக்காலத் தெந்தையாய் என்னுள் மன்னில் மற்

றெக்காலத்திலும் யாதொன்றும் வேண்டேன்,

மிக்கார் வேதவிமலர் விழுங்கும் என்

அக்காரக் கனியே ! உன்னை யானே"

எல்லாக் காலத்திலும் எனக்கு சேஷியாய் (சேஷி : தலைவன்) நான் சேஷமான முறை தப்பாமல் வந்து உன்னுடைய இருதயத்திலே புகுரப் பெறில் இக்காலமெல்லாவற்றிலும் மற்றொன்றையும் வேண்டேன் ; பகவதனுபவத்தில் மிக்காராய் வேதத்தில் விமலராகக் கூறப்பட்டுள்ள நித்யஸூரிகளை அநுபவியா நின்றுள்ள அக்காரம் போலவும் கனி போலவும் நிரதிசய போக்யனான உன்னத இதொழிந்த மற்றொன்றையும் நான் வேண்டேன்" என்பது பொருள்.

அக்காரம் என்பது வெல்லக்கட்டி. இனிப்பே நிறைந்த அக்காரம் மரம் போன்றால் அது பழுத்தால் அக்கனிதான் எத்துணைச் சுவையுடைத்தாம் அதுபோன்று நிரதிசய போக்யனாய் விளங்குகை அக்காரம் போன்றும், கனி போன்றும் ஸ்வயம்போக்யனாய் இருக்கிறான் எம்பெருமான். இப்பாசுரத்திலும் மங்கைமண்ணனின் "மிக்கானை' என்ற பாசுரத்திலும் தவிர பிற எவ்விடத்திலும் அக்காரக் கனி என்னும் திருப்பெயர் கூறப்படவில்லை. நம்மாழ்வார் அக்காரக் கனி என்று நாமகரணம் செய்ததை விளக்கமாகத் திருக்கடிகை எம்பெருமானுக்கு உரியதாக்கி 'மிக்கானை' என்று தொடங்கும் பாசுரத்தில்" கடிகைத் தடங்குன்றின் மிசை யிருந்த அக்காரக் கனி' என்று அருளிச் செய்தார்.

இது பற்றியே சுவாமி எம்பெருமானாராகிய இராமாநுஜர் 'எக்காலத்தெந்தை' என்று தொடங்கும் பாசுரத்தை திருக்கடிகை எம்பெருமானுக்குச் சமர்ப்பித்த காரணத்தால் நம்மாழ்வார் திருக்கடிகை எம்பெருமானை மங்களாசாஸனம் செய்துள்ளார் என்பர் பெரியோர்.

## திருக்கடிகை ஸ்தல ஆசார்ய புருஷரும் எம்பெருமான் இன்னருள் பெற்றவர்களுள் தலையானவருமான

# சுவாமி தொட்டயாசார் வரலாறு

செந்தமிழ் வேதியர் சிறந்து விளங்கும் வண்டுவளம் கிளரும் நீள்சோலை வண்பூங்கடிகையில் பெரியப்பன், சிறியப்பன் என்கிற மஹான்கள் இருவர் பெருமாளும் இளைய பெருமாளும் போல, செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர் எனும் உபய வேதாந்தாசார்யராய், திருமால் அடியார்களைப் பூசிக்க நோற்றார்களே என்றும் மிக உயர்வாகச் சொல்லப்பட்ட ததியாராதனத்திலே 'காசின்வாய் கரம் விற்கிலும் கரவாது மாற்றிலி சோறிட்டுத் தேச வார்த்தை படைக்கும் வண்கையினார்கள்' என்றும் வருவிருந்தை அளித்திருப்பார் என்றும் சொல்லுகிறபடியே மிகவும் ஊற்றமுடையவராய் ஸர்வ உபகாரராய் லோகாசார்யராக நெடுங்காலம் வாழ்ந்து வந்தார்கள்.

ஸ்ரீ பாஷ்யகாரருக்கு உகப்பான அவர்உம் பாதுகையும் திரிதண்டமாயும் விளங்கும் முதலியாண்டான் திருவம்சத்தில் ஸ்ரீமத் நாராயணன் தானே சிறியப்பன் குமாரரான ஸ்ரீ மஹாசாரியராக ஸ்ரீ ராமாநுஜ சித்தாந்தமென்னும் எம்பெருமானார் தரிசனம் கிளை கிளையாகத் தழைத்துச் சிறந்திடவும் லோகமடங்க வாழ்ந்திடவும் தோற்றியருளினான். இவரது அவதார வைபவம் இவ்வாறு சிறப்பாக கூறப்படும். லோகத்துக்கெல்லாம் சுபயோகங்களை உண்டு பண்ணுமவராகையாலே சுபக்ருதுவர்ஷத்தில் கும்பஸம்பவராகிய அகஸ்திய மஹரிஷியின் வைபவம் பொருந்தியவராகையாலே கும்பமாஸமாகிய மாசி மாதத்தில் உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் என்னும் வேட்கையுடைய நம்மாழ்வாரைப் போல ஸ்ரீ கிருஸ்ணனிடத்தில் ஆதரமிக்கவராகையாலே கிருஷ்ணபக்ஷத்தில் ஸர்வருக்கும் ஸர்வஸித்திகரராகையாலே ஸர்வஸித்தி த்ரயோதசியிலே குரு என்ற சொற்பொருளுக்கு உரியவராகையாலே குருவாரமாகிய வியாழக்கிழமையிலே சுவாமி பெரியப்பன் திரு அவதரித்தருளுகையாலே வீறு பெற்ற உத்தராஷாடா என்னும் உத்திராட நட்சத்திரத்திலே வேதமார்க்க ப்ரதிஷ்டாபனசார்யராகையாலே வேதம் தந்தவனான விஷ்ணுவின் மீன லக்னத்திலே திரு அவதரித்தருளினார். சுவாமி மஹார்யர் எனும் தொட்டயாசார்யர்.

குருலக்ஷண மஹத்துவமுடைய அக்குமாரர்க்கு தமக்கு ஆசாரிய ரான ஸ்ரீ மஹாசார்யருடைய திருநாமமான ஸ்ரீமத் தொட்டையாசார் என்ற திருப்பெயரை இட்டு மகிழ்ந்தார்.

இந்த ஸ்ரீ குமாரரும் பெரியப்பனிடத்தில் பெருங்காதலும் பெரு மதிப்பும் உடையவராய் அவருடைய தேனே மலரும் திருப்பாதமே தாரகபோஷக போக்யமாகக் கொண்டு வளர்ந்து வந்தார். உரிய காலங்களில் அன்னப்ராசனம், சௌளம், உபநயனம் முதலியவை களும் முறையே பண்ணிவித்து தக்க பருவத்தில் திருக்கல்யாணமும் பண்ணிவித்தருளினார்கள்.

சுவாமி பெரியப்பனும், சிறியப்பனும் இவருடைய ஆத்ம குணங்களாலும், ரூப குணங்களாலும் வாய்த்த நல் மக்களைப் பெற்று மகிழ்வரே என்கிறபடியே ஸத்புத்ரரான இவரைப்பெற்று மகிழ்ந்து கொண்டிருந்தார்கள். சுவாமி மஹாரியரும் "என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்" என்று எல்லாரும் கொண்டாடும்படி வாழ்ந்து வந்தார்.

வைத்த மாநிதியாம் மதசூதனைக் காணவிரும்பி பனிரண் டாண்டுக்காலம் கடுந்தவம் புரிந்து யோக நிஷ்டையில் ஆழ்ந்தார். ஸ்ரீ சுதர்சன உபாஸியான இவர் முன் ஸ்ரீ சக்கரத்தாழ்வார் தோன்றிச் செல்வத் தக்கானை—அவனிருக்குமிடம் காட்டித்தர அகமிகமகிழ்ந்து விரைந்தெழுந்து மலைக்குகையில் ஸ்ரீ தக்கான் அக்காரக்கனி எம்பெரு மானை உபயநாச்சிமாருடன் எடுத்துக்கொண்டார். இவ்வரலாற்றை விளக்கும் அறிகுறியாக பெரியமலைக்குப் போகும் படிக்கட்டு வழியில் இரண்டாவதான நாற்கால் பண்டபத்தில் ஒரு தூணில் சுவாமி தொட்டையாசார் குவித்தகையராய் நிற்கும் சிலைவடிவமும், பூவார் கழல் எனும் திருவடிகளும் எதிர்த்தூணில் சக்கரத்தாழ்வார் பிம்பமும் இன்றும் விளங்கக் காணலாம்.

சுவாமியும் இத்துணை நாள் நித்ய உற்சவாதிகள் இன்றி இருந்த தக்கான் எம்பெருமானுக்கு நூதனமாக தேவாலயம் சமைப் பித்து உற்சவாதிகளை நடத்திடவேண்டும் என்று மனத்தில் என்னினார். அந்நாளில் காஞ்சிமண்டலம் உள்ளிட்ட பகுதியை ஆண்டுவந்த ஸ்ரீ கிருஷ்ண தேவராயரின் இளவலான அச்யுததேவ மஹாராயர் சுவாமி மஹாரியரின் ஆச்சரியமான சக்தி விசேஷங்களைக் கேள்விப்பட்டு அவரைத் தெண்டனிட திருக்கடிகைப் பகுதிக்கு வந்து சேர்ந்தார். அரசர் அவரைத் தெண்டனிட்டு ஒரு முத்துப்

பல்லக்கில் அவரை ஏற்றி அருளச் செய்து, தாமும் ஒரு உத்தமமான குதிரை நம்பிரான் மீதேறிச் செல்லும் காலத்தில் எறும்பியை அடைந்த போது' அந்தக்குதிரை திடீரென மயங்கி வீழ்ந்திறந்தது. அதுகண்டு மனம் வருந்திய அரசனுக்கு அருள்புரிய வேண்டி மஹாரர்யர் தம் ஸ்ரீ பாத தீர்த்தத்தை அந்தக் குதிரையின் மேல் தெளிக்கச் செய்யவும், அந்தக் குதிரையும் உறங்கியது மீண்டும் எழுந்தாற்போன்று உயிர் மீண்டெழுந்து உயர்புரவிக்குரிய ஐந்துவித நடையழகினையும் காட்டி நிற்க அரசன் முதலான அனைவரும் அதுகண்டு பெருவியப்படைந்து தொட்டையாசார் சுவாமியிடத்தில் மேலும் பெருங் கௌரவபுத்தி உடையவரானார்கள்.

மகிழ்ச்சிக் கடலில் திளைத்த அரசர் பெருமானும் எறும்பிக் கிராமத்தை அச்வரேவந்தபுரம் என்ற பெயரில் உதகதாராபூர்வ்மாக (நீர்த்தாரைவார்த்து தத்தம் செய்தல்) தொட்டையாசார்யர் இஷ்ட விநியோகம் கொள்ளுமாறு தானம் செய்து தந்தான். மஹாசார்யரும் தம் விருப்பம் நிறைவேறுவது குறித்து மகிழ்ந்து எறும்பியின் கிழக்கே சீந்தல் ஏரி என்று சொல்லப்பட்டுக் காடு மேடாய்க்கிடந்த பகுதியைக் காடு கொன்று நாடாக்கி, தமக்கு அந்தரங்க சிஷ்யர்களான தக்கா ரெட்டி, முதலியாண்டான் ரெட்டி, அப்பா ரெட்டி என்பார்களைக் கொண்டு கருவறை கோபுரம் விமானம் மண்டபம் முதலியன அமைந்த புதியதொரு கோவிலைக் கட்டுவித்து அத்திருக்கோயில் முன் ஒரு குளம் வெட்டச் செய்து அதற்கு ஸ்ரீநிவாச புஷ்கரணி என்ற பெயரிட்டு நாலுகால் மண்டபங்களையும், திருத்தேரடி மண்டபத்தையும் கட்டு வித்து எட்டுத் திருவீதிகள் நிறைந்த "சோளசிம்ஹபுரம்" என்று வழங்கும் நகரத்தையும் நிர்மானம் செய்வித்து பெருமாள் திருப்பூசைக் குரிய கட்டளைகளையும் நிபந்தங்களையும் ஏற்படுத்தி ஸ்ரீ வைஷ்ணவர்களையும் கைங்கர்யம் செய்ய நியமித்து தக்கான் உற்சவ மூர்த்தியை பிரதிஷ்டை செய்தருளினார். இவ்வாறான சோளசிம்மபுர திருக்கோயில் பிரதிஷ்டை நடைபெற்ற ஆண்டு கி. பி. 1588 ஏப்ரலுக்குச் சரியான சர்வதாரி வருஷம் பங்குனி மாதத்தில் சுக்ல பக்ஷத்து பஞ்சமி நாள் என்று கூறப்படுகிறது, அரசனும் மிக்க உகப்புடன் அவருக்கு மேரைமானியமாக 64 கிராமங்களைத் தானம் செய்யத் தொட்டையாசார்யரும் அவற்றை எம்பெருமானுக்கு உரிமையாக்கினார்.

ஸ்ரீ தக்கான் அக்காரக்கனி எம்பெருமான்களை மங்களா சாஸனம் செய்து அவனுடைய கைங்கர்யங்களைத் திட்டமிட்டுச் செய்திடவும், விசேஷமான திருவாபரணங்கள் வாஹன விசேஷங்கள்

போன்றவற்றையும் தம் சீடர்களைக் கொணடு நடத்திக் கொண்டு வரும் நாளில் தில்லை திருச்சித்திர கூடத்து எம்பெருமான் கோவிந்த ராஜனுக்கு அங்குள்ள சைவர்களால் பிரம்மோற்சவம் முதலியன தடைபட்டு நின்றுவிட்டதென அறிந்தார்.

தில்லை கோவிந்தராஜனுக்கு ஒரு துர்முகி வருஷத்தில் சித்திரை மாதத்தில் நிகழவிருந்த திவ்யோத்ஸவம் பாஷண்டிகள் மேலிட்டு மிகவும் உபத்திரவம் பண்ணுகையாலே திருநாள் நடவாமல் திருவாராதனமும் நடைபெறாமல் போயிற்று. இச்செய்தியை அறிந்து பெருமாள் கோவில் (காஞ்சிபுரம்) திருநாராயணபுரம் முதலான திவ்ய தேசங்களில் வாழும் ஆசார்ய புருஷர்கள், ஜீயர்கள், ஸ்ரீ வைஷ்ணவர் முதலானார்க்கு அறிவித்திடவும், திருக்கடிகையில் வாழ்ந்த தொட்டையாசார் 'காலம் கலி முற்றிய காலமாகும்' ஸர்வரக்தனான தானே (இறை எம்பெருமானே) அதை மாற்றிக்கொண்டருளக் கடவன் என்று திருஉள்ளத்தில் எண்ணமிட்டிருந்தார்.

திருவேங்கடமுடையானும் வியாகுலப்பட்டு அர்ச்சகமுகேன முன்பு ஸ்ரீ பாஷ்யகாரரைக் கொண்டு புறச்சமயங்களை எல்லாம் கிள்ளிக் களைந்தோம். இப்போதும் உம்மைக்கொண்டு தரிசன நிர்வாஹம் பண்ணக்கடவோம் என்று சங்கல்பித்ததாகக் கூறியருளி தம் வடிவார் சோதி வலக்கையில் உறையும் சுடராழியான ஸ்ரீ சுதர்சனவாழ்வாரைத் தந்தருளி அவரை முன்னிட்டுக் கொண்டு பாஷண்டிகளை நிரஸித்து (ஓட்டுவித்து) தில்லைக் கோவிந்தராஜன் காரியங்கள் எல்லாவற்றையும் நிர்வகிக்குமாறு பலரடியார் முன் கட்டளை இட்டான்.

சுவாமி மஹாரர்யர் திருவேங்கடமுடையானின் அருள்பெற்று ஸ்ரீ சுதர்சனப் பெருமாளைப் பெற்றுக் கொண்டு, திருவள்ளூர், காஞ்சிபுரம் வந்தடைந்தார். அங்கிருந்தும் புறப்பட்டுச் செஞ்சி அளவிலே சென்றடைய அங்குள்ள பிரபுக்கள் தொட்டையாசார் பெருமை அறியாது அலட்சியமாயிருந்தனர். அங்கு வாழ்ந்து வரும் ஒரு பரம பாகவதர் சுவாமி பெரியப்பனிடம் திருவிலச்சினை (சக்ரமுத்திரை) பெற்றவர் ஸ்ரீ ரங்கநாதன் என்ற பெயருடையவர் அரசராளாயிருந் தாலும் அவர்கள் செயலை வெறுத்து, அவர்கள் அச்சுறுத்தலைப் புறக் கணித்து சுவாமி தொட்டையாசார் திருவடித்தாமரையில் விழுந்து வணங்கி, அங்கு அவர்க்குச் சொந்தமான வராஹநதிதீரத்தில் தோப்பும் மண்டபமும் உண்டு என்று மென்மையாகக்கூறி அங்குச் சில நாட்கள் திருவாழியாழ்வானுடன் தங்கி அருள்புரியுமாறு பிரார்த்தித்தார்.

தொட்டையாசார்யரும் சடக்கென ஒப்புக்கொண்டு திருவாழி யாழ்வானை வராஹநதிக்கரை மண்டபத்தில் எழுந்தருளச் செய்து தாமும் பிற ஸ்ரீ வைஷ்ணவர்களும் அத்திருத்தோப்பில் பாங்காக இளைப்பாறி இருந்தனர்.

பின்னர் அங்குள்ள பிரபுக்கள் தொட்டையாசார் பெருமை திருவாழியாழ்வானின் அருள் ஆகியவற்றை நேரில் கண்டு, தவறு செய்தோம் என்று அஞ்சி, மனம் திருந்தி விரைந்து வந்து திருவாழி ஆழ்வானையும் தொட்டையாசார்யரையும் ஸ்வாமிகளையும் வணங்கி வழிபட்டுத் தம்பிழைகளைப் பொருத்தருளுமாறு வேண்டிக் கொண்டு அனேக வித கைங்கர்யங்களை நடத்திக் கொண்டு வந்தார்கள்.

பின்னர் ஸ்ரீ ரங்கநாததாஸனும் தன் ஆசார்யரின் பெயரால் தொட்டாசார்யபுரம் என்றோர் அக்ரஹாரம் உண்டாக்கிக் கோயில் ப்ரதிக்ஷணமாக மாடத் திருவீதி உண்டாக்கி நூறு திருமாளிகை களையும், கட்டுவித்து அவற்றில் ஸ்ரீ வைஷ்ணவர்களையும் குடியமர்த் தினான், மேலும் திருக்கோயிலில் உற்சவ விக்ரஹங்களாக சூடிக் கொடுத்த நாச்சியார், ஆழ்வார்கள், ஸ்ரீ பாஷ்யகாரர் முதலியோரை ஏறியருளப் பண்ணி சகலவிதமான உற்சவாதிகளையும் வடக்குத் திருமலையில் திருவேங்கடமுடையான் கண்டருள்வதைப்போல் ஒன்றும் தப்பாமே செய்வித்து ப்ரஸன்னதிருவேங்கடவனின் அனைத்துக் கைங்கர்யங்களையும் குறைவின்றி நடத்திச் சுகமே வாழ்ந்து வந்தார்.

தொட்டையாசார்யரும் ஸ்ரீ கோவிந்தராஜனின் கைங்கர்யம் தடை யில்லாமல் விரைந்து நிறைவேறுவது எவ்வாறு எனச் சிந்தைசெய்தார். அப்போது மஹாசார்யரின் சிஷ்யரும் அரசருமான கிருஷ்ணபூபன் பகைவர்களால் சிறைபிடிக்கப்பட்டிருந்தான். அவரருளால் கிருஷ்ணபூபன் நிலவறையினின்று தப்பித்துப்போய் பெருந்துணை பெற்று விரோதிகளை முற்றிலுமாக அழித்து அந்தப் பகுதிக்குத் தலைவனாய் முடிசூட்டிக் கொண்டான். தன்பெருவாழ்ச்சிக்குக் காரணம் ஸ்ரீ மஹாசார்யர் அருள் என்பதறிந்து உணர்ந்து, தொட்டையாசார் சந்நிதிக்குச் சென்று அடிபணிந்து தன் ஆபத்தை முழுமையாக எடுத்துக் கூறி ஸ்வாமின்! இந்த மஹா ஆபத்து நீங்கினது தேவரீருடைய க்ருபையாலேதான். வேறொரு தெய்வ சகாயமுமில்லை. மனுஷ்ய ஸஹாயமுமில்லை. அடியேனுக்குத் தேவரீர்தானே ஸ்ரீ மஹாசார்யர் திருவடிகளில் விழுந்தான்.

அவரும் ஸ்ரீ கோவிந்தராஜன் நியமித்த கைங்கர்யங்களை நீ நிறைவேற்றிடுவாயாக ; உனக்கு யாதொரு குறையும் வாராதெனச் சொல்லி விடைதந்தார். அவனும் ராஜகார்யத்தில் ஈடுபட ஜீயர், ஸ்ரீ வைஷ்ணவர்கள் முதலியோர் ஸ்ரீ மஹாசார்யர் சந்நதியில் திரண்டு கூடி இப்போதிந்த தேசம் அராஜகமாய் கலகமாயிருக்கிறது. இப்போதைக்கு திருவாழி ஆழ்வானை திரும்ப எழுந்தருளச் செய்து இந்த க்ருஷ்ணபூபனும் தன் அதிகாரத்தில் நிலைபெற்று நின்ற பின்பு நாமும் கூட இங்குத் திரும்ப வருவோம்" என்று விண்ணப்பம் செய்தனர். இச்செய்தியைக் கேட்ட க்ருஷ்ணபூபனும் ராஜகார்யம் அனுகூலமானபின் ஒரு மாத காலத்திற்குள் கோவிந்தன் திருப்பணியை நிறைவேற்றுவதாக உறுதி கூறி வழியனுப்பி வைத்தான்.

செஞ்சியினின்று க்ருஷ்ணபூபன் தில்லைச் சித்திர கூடத்திற்குச் சென்று ஆலய நிர்வாஹிகளை அழைப்பித்து, கோவிந்தராஜன் கைங்கரியங்களுக்கு இடையூறு செய்யவேண்டா என்று மத்யஸ்த்த ரீதியில் அனுகூல வார்த்தைகளைச் சொல்ல, பாஷண்டிகள் அவனது வசனத்தையும் வேண்டுகோளையும் மறுத்திடவே வேறு வழியின்றி கோவிந்தராஜனுக்கு கைங்கர்யம் விருப்பமா ? இல்லையா ? என்பதறியச் சீட்டுப் போட்டுப் பார்த்ததில் திருப்பணி செய்வது தனக்கிஷ்டம் என்பதைச் சீட்டு மூலமாக கோவிந்தராஜன் அனுமதிக்கவும் மகிழ்ந்தான்.

கோவிந்தராஜன் ஸந்நதியைக் கல்திரையிட்டு மூடி மறைத்திருந்ததை சண்டமாருதம் சுவாமியின் பிரார்த்தனைக்கு இணங்க உடைத்துக் காட்டி ஸ்ரீ கோவிந்தராஜனும் திவ்விய தரிசனம் தந்து அனைவரையும் மகிழ்வித்தான்.

பின்னர் கிருஷ்ணபூபன் த்வஜஸ்தம்பப்ரதிஷ்டை செய்து லக்ஷ்மிமண்டபத்தில் நூதனமாய் வைத்திருந்த லிங்கத்தையும்பிடுங்கிப் போகட்டு, அங்கே ஸ்வதந்த்ரலக்ஷ்மியை பிரதிஷ்டை செய்வித்து சூடிக்கொடுத்த நாச்சியாரையும், ஆழ்வார்களையும் ஸ்ரீ பாஷ்யகாரரையும் ப்ரதிஷ்டை பண்ணி, கோபுரம், மண்டபம், பிரகாரம், தாமரைக் குளம், திருத்தோப்பு நந்தவனம், திருவீதிகள் ஆகிய அனேக கைங்கர்யங்களைப் பாங்காகச் செய்து தொட்டையாசார்யருக்கு இந்தச் செய்திகளை எடுத்துச் சொல்லி விரைந்து தில்லைச் சித்திரகூடம் வருமாறு பிரார்த்தித்து கடிதத்துடன் தூதுவரையும் அனுப்பினான்.

ஸ்ரீ மஹாசார்யரும் தில்லைச் சித்திர கூடத்தைச் சேவிக்கப் புறப்பட்டெழுந்தருள க்ருஷ்ணபூபனும் அவரைக் கோலாகலத்துடன் வரவேற்று நகரினுள் அழைத்துச் சென்றான். மஹார்யரும் அவனைக் குளிர நோக்கி அச்சுதராயன் போன்ற பிரபுக்களும் செய்யாத அருஞ்செயல் புரிந்தனையே என்று அவனை மிகவும் பாராட்டி வாழ்த்தினார்.

கோவிந்தன் சந்நதியேறச் சென்ற கோவிந்தராஜனும் மஹார்யருக்கு தீர்த்தம் சடகோபன், பரிவட்டம், சந்தனம், திருத்தம்பல பிரஸாதம் முதலியவற்றை அருளி "வாரீர் தொட்டையாசார்யரே! முற்காலத்திலே புழுக்கனாலே நம் ஸத்தைக்கு ஹானி வர நம் இராமானுசன் நம் ஸத்தையை உண்டாக்கினாற்போல் இராமானுஜ தாசரான நீரும் இப்போது நமக்கு மஹா ஆபத்து வர, அந்த ஆபத்தை நீக்கின மாத்திரமன்றிக்கே, அனேக வைபவங்களை யெல்லாம் உண்டாக்கினீர். இன்னும் நமக்கு ஸர்வ அதிசயமும் பண்ணிக்கொன்டு உம்முடைய குலதெய்வமான அக்காரக்கனிக்கு அனைத்தழகும் கண்டு கற்கோயிலைப் பொற்கோயிலாக்கினாற்போலே இந்தத் திருப்பதியையும் அபிமானித்து விளங்கப்பண்ணும்" என்று முகேன அருளிச் செய்தான்.

தொட்டையாசார்யரும் திருச்சித்திரகூடத்தினின்றும் புறப்பட்டு போய் ஸ்ரீமந் நாதமுனிகளின் தம்பிரானான மன்னார் வீற்றிருக்கும் காட்டுமன்னார் கோயில் சென்று மன்னனாரை மங்களாசாஸனம் செய்த பின், ஸ்ரீமந் நாதமுனிகளைத் தண்டம் சமர்ப்பித்து விடை பெற்றுக் கொண்டு, மற்றை நாள் குருகைக் காவலப்பன் யோகத்தில் வீற்றிருந்த ஸ்தலத்துக்கெழுந்தருளி தாமாரவைத்த தலமென்று சேவித்து, அங்கு நின்றும் புறப்பட்டுப்போய் ஸ்ரீ முஷ்ணம் திருமுட்டம் என்னும் திவ்ய தேசம் புகுந்து ஸ்ரீ வராஹ நாயனாரை அடிபணிந்து தீர்த்தம் பிரஸாதம் முதலியன அருளப்பெற்று மற்றை நாள் புறப்பட்டு வழியில் கரம்பனூர் உத்தமன் கோயிலை சென்றடைந்து கரம்பனூர் உத்தமனை கண்ணாரக் கண்டு கையாரத்தொழுது விருப்பம் நிறைவேறியவராய் திருக்காவேரி ஆற்றைக் கடந்து ஸ்ரீ ரங்கநாச்சியாரையும் பெருவேட்கையுடன் சேவித்து நிற்க, பெருமாளும், தீர்த்தம், சந்தனம், திருமாலை, பரிவட்டம், சடகோபன்: கையடைக்காய் முதலியன பிரசாதித்து அனுப்பினார். அங்கு நின்றும் புறப்பட்டுப் போய் கோயில் கந்தாடை அண்ணன் திருமாளிகையை அடைந்து கத்தாடை அண்ணனை தென்டனிட்டுப் புறப்பட்டுப்போய் பெரிய ஜீயர் (மணவாளமாமுனிகள்)

மடமேற எழுந்தருளி ஜீயரையும் ஸ்ரீ ரங்கநாதரையும் திருவடி தொழுது தீர்த்தப்ரஸாதம் பெற்றார். ஸ்ரீ வாதூல வம்சத்திற்கு குலசுவாமியான ஸ்ரீ பாஷ்யகாரரைச் சேவிக்க விரும்பி அவர் கோயிலேற எழுந்தருளி பிரதம குருவான ஸ்ரீ பாஷ்யகாரரருக்கு கையுறையாக ஏராளமான பொருள்களை எடுத்துச் சென்று உடையவரைத் தண்டனிட்டு தாம் கொண்டு வந்த திருமுன் காணிக்கைப் பொருள்களையும் சமர்ப்பித்து திருவாராதனமான பேரருளாளரையும் (காஞ்சிபுரம் தேவராஜப் பெருமாள்) வணங்கி வழிபட்டு அருள்பெற்று நின்றார்.

பின்னர் பல திவ்வியதேசங்களுக்குச் சென்று அவ்வத்திருப்பதி எம்பெருமான்களை எல்லாம் சேவித்து மீண்டும் சோளசிம்மபுரம் எழுந்தருளி ஸ்ரீ தக்கான் அக்காரக்கனி எம்பெருமான்களுக்கு எல்லாவித கைங்கர்யங்களையும் பண்ணிக்கொண்டு ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தை கிரந்த காலக்ஷேபாதிகளுடன் காத்து வந்தார்.

ஒருநாள் சோளசிம்மபுரத்தில் பெரிய திருமலைக்கு எழுந் தருளும்போது ஸ்ரீபாதம் தாங்குவார் பசிதாகத்தால் வருந்த மஹார்யர் தக்கான் குளக்கரையில் எட்டி மரத்தினைத் தம் திருவடியால் தொட்டு, எட்டிப் பழங்களை உண்டிடுமாறு பல்லக்கு தூக்குவோர்க்குக் கட்டளை இட அவர்களும் அப்பழங்களை அருந்திட அமுதக்கனிகளாய்த் தித்திப்பதை உணர்ந்து ஸ்வாமியின் சக்தி விசேஷத்தை மிகவும் கொண்டாடி மகிழ்ந்தனர். தக்கான் பிரம்மோற்சவம் முடிந்து தீர்த்தவாரி கண்டருளி எட்டிமரங்கள் நிற்கும் இம்மண்டபத்திற்கு வரும்போது எட்டி அப்பம் அமுது செய்து விநியோகமாவதும், திருமொழிச்சாத்துமுறை ஆன பின் ஸ்வாமி திருவம்சத்தார்க்கு மட்டும் அருள்பாடு திருப்பரிவட்டம் தீர்த்தமரியாதைகள் நடப்பதும் இன்றைக்கும் இந்த நிகழ்ச்சிக்கு சான்றாகும்.

மஹாசார்யர் குறித்த பல்வேறு விசேஷ செய்திகள் ஆந்திர நாட்டிலும், கர்நாடக தேசத்திலும் வழங்கப்படுகின்றன. அவை யனைத்தும் அவரது அதிமானுஷத்வம் என்னும் செயற்கரிய செயலைக் குறித்தே விளக்குகின்றன.

தொட்டயாசார்யருக்கு கட்டம் தொட்டையாசார் என்றொரு திருநாமம் உண்டு; கட்டம் என்ற சொல் தாடியைக் குறிப்பதாகும். ஒரு சுப முகூர்த்தத்தில் ஸ்ரீ மஹாசார்யர் திருமுடி விளக்கிக்கொள்ளும் போது அவர் தம் முடிகள் பொன்னாகச் சிதறி விழவும் திருமுடி விளக்குபவன் பெரிதும் வியப்படைந்து அவரைப்போற்றிப் புகழ்ந்த காரணத்தால் பெரியோர்கள் அவரை கட்டம் தொட்டையாசார் என வழங்கினாராம்.

ஒரு முறை சித்திரை மாதம் திருபெரும்பூதூரில் நடைபெறும் எம்பெருமானார் திருநட்சத்திர மஹோற்சவம் சேவிக்க வேண்டு மென்று ஸ்ரீ தொட்டையாசார் சென்றிருந்தார். ஸ்ரீ வைகானச சூத்தி ரத்திலே ஆனந்த சம்ஹிதையில் சொல்லுகிறபடி பத்து நாளாக உற்சவம் நடந்துவரும்போது திருவாதிரைத் திருநட்சத்திரத்திலே எம் பெருமானார் திருமஞ்சனம் கண்டருளி காவித்திருப்பரி வட்டமும் சில விசேஷ திருவாபரணங்களையும் சாத்தியருளி திருவீதி எழுந்தருளா நின்றார். மஹார்யரும் அனேகம் ஸ்ரீ வைஷ்ணவர்களோடு உடைய வரைச் சேவித்துக்கொண்டிருந்தார். அப்போது மாத்வமத (துவைதம்) நிர்வாஹனாய் பல்வேறு சாஸ்ரங்களில் நிபுணனான வித்வான் ஒருவன் அவ்விடம் வந்திருந்தான். அவன் எம்பெருமானார் சாத்தியருளின திருமாலை, சந்தனம், திருவாபரணங்கள் முதலான உபசாரங்களை கண்டு உங்களுக்குப் பரம குருவான ஸ்ரீ பாஷ்யகாரருக்கு அவர் ஆச்சிரமத்திற்குப் பொருத்தமான உபசாரங்களைப் பண்ணுகைக்கு சாத்திரம் அனுமதிக்கிறது. அப்படிச் செய்யாமல் ஸந்யாச ஆச்சிரமத் திற்குப்பொருந்தாத சந்தனம், புஷ்பங்கள், ஆபரணங்கள் போன்ற வற்றை தரிப்பிக்கலாமோ ? என்று ஆட்சேபனை செய்ய ஆசார்யரும் இதைக்கேட்டருளி அந்த மாத்வனைப் பார்த்து நீர் நானா சாஸ்த்திர நிபுணராகையாலே நீரறியாத வைதீக தர்மங்கள் ஏதுமிருக்காது.

ஆகிலும் நம்மிடத்தில் சினேகத்தாலே கேட்கிறீர்; போதாயன கல்பத்தில் நான்காவது அம்சத்தில் விஷ்ணு பக்தர்களை விஷ்ணுவாக நினைத்து சகலவித உபசாரங்கள் செய்து பூஜிக்க வேண்டும் என்று கூறப்படுவதுடன் அவர்களுக்கு சிலாப்ரதிஷ்டை போன்றவற்றையும் செய்யலாம் என்று கூறப்பட்டுள்ளது. ஜீவ தசையிலும் இந்த உபசாரங்களைச் செய்யலாம் எனில் முக்தி தசையில் பண்ணுகை கைமுதிக ந்யாய சித்தமன்றோ?" என்று உத்தரம் இறுத்தார். இதை ஏகாயன வித்வானும் கேட்டு "த்ருஷ்டாந்தபலத்தாலே அப்படிச் சொல்லாம் என்றால் பகவானுக்குப்போல் உடையவரின் இருபக்கத் திலும் இரண்டு ஸ்த்ரீவிக்ரஹங்களையும் கூடவைத்து சங்க சக்கர ஆயுதங்களையும் தரிப்பிக்கலாகாதோ'? என்று வினவினான்' அப்படிச் சொல்லலாமோ? லௌகிகம் வைதிகம் என்பனவற்றில் பூர்ணத் ருஷ்டாந்தம் (உவமை முழுமையாக அமைவது) என்பதுண்டோ? சந்திரமுகம் என்றால் முகத்திற்குத் குளிர்ச்சி களங்கத்துடன் கூடி இருத்தல் போன்றவையும் உண்டோ ? நமக்குத் தேவையான மகிழ்ச்சிக்குரிய தன்மையைப்பற்றி அன்றோ அவ்வாறு கூறப்படும். நெருப்புப்போன்றவன் மாணவன் என்றால் ப்ரத்யக்ஷத்திற்கு விருத்த மான உஷ்ணம் போன்றவற்றையும் காட்டுமோ" என்று கூறி பராசரர்,

பாராசர்யர், போதாயனர் போன்ற மஹரிஷிகளின் வசனங்களை யெல்லாம் எடுத்துக்காட்டி வைதிகத் தர்மங்களை நன்றாக விளக்கிக் காட்ட, மிகவும் மன நிறைவடைந்த அந்த வித்வானும் "வாரீர், ஆசாரியரே. உம்முடைய பேரானது வெறும் பெயரன்று. பொருள் பொருந்திய ஒன்று என்பது கண்கூடு. லௌகீக வைதீகங்களிலே மஹோத்தரமான ஞானமுண்டாயிருக்கையாலே மஹாசார்யர் தொட்டாசார்யர் என்பது ஒக்கும்; ஒக்கும் என்று தலை துளுக்கி பாராட்டினானாம்.

ஒரு சந்தர்ப்பத்தில் திருமாலிருஞ்சோலை மலையில் அப்பைய தீட்சிதரும், தொட்டாசார்யரும் நேருக்குநேர் சந்தித்துக் கொண்டார்களாம். தொட்டையாசார்யரோ பரம வைஷ்ணவர். விசிஷ்டாத்வைத மத ஸ்தாபகர். அப்பைய தீட்சிதரோ பரம சிவ பக்தர். சிவாத்வைதி சுவாமி மஹார்யர் அப்பய்ய தீட்சிதர் கையைப் பற்றிக் கொண்டு பதினெட்டாம்படிக் கறுப்பன் அருகே நின்று நாராயணபாரம்யத்தை வேதங்கள் சொல்லவில்லை என்று மனச்சாட்சியுடன் சொல்லுங்கள் என்று வற்புறுத்தினாராம்.

வேதமறிந்த அப்பய்ய தீட்சிதரால் விஷ்ணுபாரம்யத்தை மறுக்க முடியாது. பதினெட்டாம்படிக் கறுப்பன் முன் நெஞ்சறிந்து உண்மைக்கு மாறானதைக் கூறவும் முடியாது. ஆதலால் பதினெட்டாம் படிக் கறுப்பன் முன் தொட்டையாசார் கருத்தினை மறுக்க முடியாது ஏற்றுக் கொண்டார் என்பர் பெரியர்.

தில்லைச் சித்திரக்கூடத் திருப்பணியின்போது பாஷண்டிகளுக்கும் மற்றுள்ளவர்களுக்கும் கோவிந்தராஜன் பற்றிய கருத்து வேறுபாடு இருந்தபோதும் ஸ்ரீ மஹாசார்யர் வைபத்தையும் திருவாழி ஆழ்வான் ப்ரபாவத்தையும் அறிந்தான். தொட்டையாசார் திருவடிகளில் விழுந்து வணங்கி அவருடன் கூட நாற்கால் திருமண்டபம் வரை வந்து ஸ்ரீ சுதர்சன ஆழ்வாரையும் ஆசார்யரையும் வணங்கி வழிபட்டுப் போயினர் என்று ஸ்வாமி தொட்டையாசார் சரித்திரம் கூறுகிறது.

ஒருமுறை திருக்கச்சி மாநகரில் வரதராஜப்பெருமாளுக்கு நடைபெறும் வையம் கண்ட கச்சித் திருநாளாகிய பிரம்மோற்சவத்தின் மூன்றாம் திருநாளில் பெருமாள் சேவையை இழந்தோமே என்ற வருத்தத்துடன் சோளசிம்மபுரம் பிரம்மதீர்த்தக் கரையில் விடியற் காலையில் தீர்த்தமாடி அனுஷ்டானத்தை முடித்துக் கொண்டு பகவத் தியானத்தில் ஆழ்ந்திருந்தார் தொட்டையாசார் சுவாமி. அவர்தம் பரிபூரணபக்திக்கு மனம் மகிழ்ந்த வரதராஜப் பெருமாள் அவரை

அனுக்ரஹிப்பதற்காக காஞ்சிபுரத்தில் கருடவாகனத்தில் சேவை சாதிக்கும் கோலத்திலேயே அவர்முன் தோன்றி அருள்புரிந்தார். தென்னத்தியூரர் கருடவாகனத்துடன் தம்முன் தோன்றிய காட்சியைப் "ப்ரத்யூஷே" என்று தொடங்கி ஐந்து சுலோகங்களால் அப்பெருமானைப் போற்றிப் புகழ்ந்தார். அந்த சுலோக பஞ்சகம் தேவராஜ பஞ்சகம் எனப்படும்.

திருக்கச்சி மாநகரில் (காஞ்சியில்) வைகாசி மாதம் பிரம்மோற்சவம் நடைபெறும்போது தேவப்பெருமாள் மூன்றாம் திருநாளில் கருட வாகனத்தில் மீதேறி அருணோதய காலத்தில் பவனி எழுந்தருளும் போது கோயில் கோபுரவாசலில் சிறிதுநேரம் தாமதித்து நின்று சோளசிம்மபுரம் தொட்டையாசார் ஸ்வாமிக்கு சேவை சாதிப்பதாய் கர்ப்பூர ஆரத்தி நடைபெறுவதை இன்றும் காணலாம். தக்கான் குளக்கரையில் தேவப்பெருமாள் கருடவாகனா ரூடராய் திருக்கோயில் கொண்டிருப்பதையும் காணலாம். இந்த வைபவத்தை விளக்கும் முறையில் சோளசிம்மபுரத்தில் சுவாமி தக்கானுக்கு வைகாசி மாதம் கருடவாகன உற்சவம் நடைபெறுகிறது. வைகாசி பிரம்ம உற்சவம் மூன்றாம் திருநாளன்று விடியற்காலையில் கருடவாஹன புறப்பாடு நடந்து தொட்டையாசார் சுவாமிக்கு திருப்பரிவட்டம், மாலை, சடகோபன் ஸாதித்து மங்களாசாஸனமும் நடந்து வருகிறது.

" தீபிகை என்னும் நூற்பொருளைக் கண்டித்து விசிஷ்டாத்வைத சமயத்தின் கொள்கைகளை நிலை நிறுத்தவல்ல ஒரு நூல் இயற்ற விரும்பினார் தொட்டையாசார்யர். அப்பைய தீட்சிதருடன் நேரில் சோளசிம்மபுரத்தில் தேரடி மண்டபத்தில் பலநாள் வாதப்போர் நிகழ்ந்ததாகவும், தொட்டயாசார் தோல்வியுறும் நிலைக்கு வந்த நாளிரவு வேதாந்தவாசிரியர் அவர்தம் கனவில் தோன்றி தாமியற்றியுள்ள "தசதூஷணி" எனும் நூலினின்று சில கருதுகோள் களைச் சுட்டிக் காட்டியதாகவும்," அவற்றைக் கொண்டு மறுநாள் நடை பெற்ற வாதப் போரில் தொட்டயாசார் அப்பைய தீட்சிதரை வென்ற தாகவும் சொல்லப்படுகிறது. தொட்டயாசார் சிஷ்யரான ஸ்ரீ சுதர்சன சார்யார் என்பார் இயற்றிய "வேதாந்த விஜயமங்களதீபிகா" என்னும் நூலிலும் மஹாசார்யருடைய பிரதான சிஷ்யரான ஸ்ரீநிவாஸாசார் இயற்றிய 'யதீந்த்ர மத தீபிகா' என்னும் நூலிலும் இந்நிகழ்ச்சிபற்றிய உண்மை ஒருவாறு சுட்டப்படுகிறது. தொட்டையாசார் தீபிகைக்குக் கண்டனமாக வேதாந்ததேசிகரின் சததூஷனி எனும் நூலுக்குச் சண்டமாருதம் என்றதொரு உரைநூல் எழுதியும் வியாசரின் வேதாந்த நூற்பொருளை விளக்கவல்ல பாராசர்ய விஜயம் என்றதொரு நூலையும் இயற்றி விசிஷ்டாத்வைதத்தின் மாண்பினை நிலை நிறுத்தினார்.

மேலும் வேதாந்த விசார ரூபமாகவும், ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷண சித்தாந்தத்தை நிலை நிறுத்தவல்ல, 'வேதாந்தவிஜயம்' என்ற ஐந்து நூல்களை விஜய்க்ரந்தங்களை - இயற்றினார். அவை முறையே குரூபஸத்திவிஜயம், அத்வைத வித்யா விஜயம், ஸத்வித்யாவிஜயம் ப்ரஹமவித்யாவிஜயம் பரிகரவிஜயம் என்பன ஆகும். இவையனைத்தும் வ ட மொ ழி யி ல் இயற்றப்பட்டவையாம். இவையனைத்தையும் கற்கவிரும்பின் ஒருவர் முதலில் வடமொழியில் நியாயம், தருக்கம், வியாகரணம், மீமாம்ஸை, வேதாந்தம் முதலியவற்றைக் கசடறக் கற்றிருக்கவேண்டும். இ வ் வா று அங்கமலத்து அயனாதிமதப் பரவாதியர்மங்கிடவும், ஆழ்கடல் சூழ்தரு பூமியில் ஆரியர் போக மகிழ்ந்திடவும் ஐவகையாம் விசயங்களறிந்தவர் சிந்தை தெளிந்திடவும் சுவாமி மஹார்யர் பேருதவி புரிந்துள்ளார்.

இவ்வாறு திருக்கடிகையில் கந்தாடைக்குடியில் எம்பெருமானாருக்கு இனிய மருமகனாராகவும் பாதுகையும் திரிதண்டமாகவும் விளங்கிய முதலியாண்டான் எனும் தாசரதி ஆசாரியரின் தூசில் வாதூலகுலம் துலங்கத் தோன்றினார் சுவாமி தொட்டையாசார்யர் அவரது அவதாரம் மாசி உத்திராடத்திலாகும். மாசில் பெரியப்பன் மகிழத் தோன்றிய அவர் விசிஷ்டாத்வைதத்தைக் சுட்டிக்காத்திட அதற்குமாறான கருத்துக்களுடைய பரசமயவாதிகளையெல்லாம் தம் வாதத்திறமையாலும் பாராசர்யவிஜயம் முதலிய வேதாந்த நூல்களாலும் தோல்வியுறச் செய்து வெற்றிவாகை சூடினார். அவருடைய நூல்கள் சண்டமாருதமாகவே 'சூறாவளிக்காற்றாகவே பிறசமயத்தவரின் தீபிகா முதலிய நூல்களின் ஒளியை அணையச்செய்தன ஆனால் அவர் இயற்றிய அதே நூல்களை ஐவகையாம் விஜய நூல்களை ஆழ்ந்து கற்பவர்களுக்கு தவழும் தென்றற்காற்றாய் மகிழ்வூட்டின. விசிஷ்டாத்வைத வேதாந்த தரிசனத்தை மேலும் தழைத்தோங்கச் செய்த காரணத்தால் ஆசில் எதிராசர் குருஎன சுவாமி தொட்டையாசார் போற்றப்பட்டார். தூய மகாதேசிகனாரான அவரது அவதாரம் வைஷ்ணவ உலகிற்குப் பெரும்நன்மைகளை விளைத்திட்டது.

அவர்தம் இறுதிநாளில் திவ்யதேச யாத்திரை செய்து வரும் போது ஸ்ரீ முஷ்ணம் என்னும் (உத்தமமான எம்பெருமான் கோல வராஹப் பெருமானாய் திருக்கோயில் கொண்டிருக்கும்) ஸ்வயம்வ்யக்த க்ஷேத்திரத்தை அடைந்தார். நித்தியதீர்த்தம் எனும் திருக்குளத்தில் நீராடி அனுஷ்டானம் செய்துகொண்டு அதன் கரையிலிருந்த மண்டபத்தை சென்றடைந்தார். முதல் ஆ ழ் வா ர் க ள், பிள்ளை

உலகாசிரியர் இப்புவியில் அரங்க நகரப்பனுக்கு தமிழ்வேதத்தீடு தன்னை விளக்கிய ஸ்ரீ மன்மணவாளமாமுனிகள் போன்றோர் அவதரித்த ஐப்பசி மாதம் க்ருஷ்ணபக்ஷ அஷ்டமி நாளின் பகற்பொழுது தாம் அவதரித்ததின் நோக்கம் ஈடேறிய மகிழ்ச்சியுடன் தம்முடைய சீடர்கள் தம்மைச் சூழ்ந்து வேதகோஷம் செய்ய, செவிக்கினிய செஞ்சொற்கவிகளாய ஆழ்வார்களின் அருளிச்செயலை ஓதிட இதய கமலத்தில் எம்பெரு மானையும் ஆசார்யனையும் தியானம் செய்த வாறே 'சூழ்விசும்பு' என்று தொடங்கும் திருவாய்மொழியில் உரைத்தபடி திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

பின்குறிப்பு :—

ஆழ்வார், சுவாமி தொட்டையாசார் சரிதங்களுக்கு ஆதார நூல்கள் :—

1. பின்பழகிய பெருமாள் ஜீயர் அருளிய ஆறாயிரப்படி குருபரம்பரா பிரபாவம்

2. தொட்டையாசார் வைபவப்ரகாசிக (ஓலைச்சுவடி)

3. ராவ்பஹதூர் ஸ்ரீனிவாஸார்யரின் நாயக் & செஞ்சிராஜா"

4. போர்த்துகீசிய பாதிரி பிமெண்டாவின் குறிப்பு மற்றும் பலகாலமாகக் கூறப்பட்டுவரும் செவிவழிச் செய்திகள்.

**ஸ்ரீ சுவாமி தொட்டையாசார் மங்களம்**

சண்டமாருத வேதாந்த விஜயாதி ஸுஸூக்திபி ;

வேதாந்தரக்ஷகாயாஸ்து மஹாசார்யாய மங்களம் !

இதன் பொருள் : ஸ்ரீ மஹாசார்யர் சண்டமாருதம், வேதாந்த விஜயம் முதலிய சிறந்த நூல்களால் விசிஷ்டாத்வைத வேதாந்தத்திற்கு அரண் செய்தார். அவருக்கு மங்களம் உண்டாகட்டும்.

# ஸ்ரீ யோக லக்ஷ்மிநரஸிம்ஹ ஸுப்ரபாதம்

*(சோளிங்கபுரம் மஹாகுரு என்று பிரஸித்தி பெற்ற ஸ்ரீ தொட்டையாசார்ய ஸ்வாமியால் பல நூறு ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்ட இந்த சுப்ரபாதத்தை தினமும் காலையில் படிப்பவர்களிடம் பகவான் கருணை கொண்டு, ஸகல சௌபாக்யங்களையும் அருளுவது திண்ணம்.)*

1 *கௌஸல்யா ஸுப்ரஜா ராம !*
*பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே !*
*உத்திஷ்ட நரசார்தூல !*
*கர்தவ்யம் தைவமாந்ஹிகம் !!*

*கோசலைதன் குலமதலாய், இராமா*
*விடியற்காலை ஆயிற்று, வீரமைந்தனே !*
*காலைப் பொழுதிற்குரிய தெய்வக் கடமைகளை*
*இறுக்க, நீ துயில் நீங்கி எழுந்தருள வேண்டும்.*

2 *உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த !*
*உத்திஷ்ட கருடத்வஜ !*
*உத்திஷ்ட கமலாகாந்த !*
*த்ரைலோக்யம் மங்களம் குரு !!*

*கோவிந்தனே ! துயிலெழு ! கருடக்கொடி*
*உடையவனே ! துயிலெழு,*
*திருமகள் கேள்வா ! துயிலெழு, துயில் நீங்கி*
*எழுந்து மூவுலகங்கட்கும் இன்பம் தந்திடு.*

3 மாதஸ் ஸுநாபலலதே ! மஹநீயசீலே
வக்ஷோ விஹார ரஸிகே ந்ருஹரேரஜஸ்ரம் !
க்ஷீராம்புராசி தநயே ! ச்ரிதகல்பவல்லி
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ தயிதே தவஸுப்ரபாதம் !!

தாயே, சுதாவல்லிக் கொடியே பெருமைக்கு உரியவளே
நரஹரியின் திருமார்பில் இமைப்பொழுதும் அகலாது
விளங்கும் விருப்பம் கொண்டவளே ; திருப்பாற்கடற்
செல்வி ! நரசிங்கப் பெருமானின் துணைவியே !
உனக்குத் திருப்பள்ளி யெழுச்சி (கூறுகிறோம்)

4 தவஸுப்ரதபாத மநவத்ய வைபவே
கடிகேச ஸத்குண நிவாஸ பூதலே !
கடிதாகிலார்த்த கடிகாத்ரி சேகரே
கடிகாத்ரிநாத தயிதே தயாநிதே !!

தீதிலாச் செல்வப் பெருக்கே ! திருக்கடிகை நாதனின்
அருட்பண்புகளுக்கு ஆதாரமான தேவி !
எல்லாம்அருளவல்ல கடிகைத் தடங் குன்றின் மீது
விளங்கும் கடிகைக் கோவின் அன்பே !
அருளறம் கொண்ட செல்வி, பள்ளி எழுந்தருளாயே

5 அத்ர்யாதிகா முநிகணா விரசய்ய ஸந்த்யாம்
திவ்யஸ்ரவந் மதுஜரீக ஸரோருஹாணி !!
பர்தார்ப்பணாய பரிக்ருஹ்ய புர : ப்ரபந்நா :
ஸ்ரீ மந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

விடியற்காலைப் பூசனைக்குத் தேன் வெள்ள மிக்கோடும்
தெய்வத் தாமரை முதலிய மலர்களைப் பறித்துக் கொண்டு.
அத்திரி முதலிய முனிவர்கள் கூட்டமாக உன்னைத்
திருவடி தொழ வந்துள்ளனர். நரஹரி உனக்கு வெற்றி
உண்டாகுக. பள்ளி எழுந்தருளாயே

6 ஸப்தரஷிஸங்கக்ருதஸம்ஸ்துதி ஸுப்ரஸந்ந !
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ குணரூப ரமாமஹிப்யாம் !
ஸாகம் ந்ருஸிம்ஹ கிரிஸத்வ க்ருதாதிவாஸ !
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

வாமதேவர் முதலிய ஏழு முனிவர்கள் கூட்டமாகப் புகழ்ந்து போற்றப்படும் பெருமை உடையவனே ! நரஹரி ! உருவும், திருவும் வாய்ந்த ஒப்பற்ற திருமடந்தை மண்மடந்தை ஆம் தேவிமார்களுடன் திருக்கடிகை மலையைக் கோயில் கொண்டவனே ! பள்ளி எழுந்தருளாயே !

7 தேவாரி பஞ்ஜந மருத்ஸுததத்த சங்க
சக்ராதபத்ரித பணீச்வர பத்ரிசேஷிந் !
தேவேந்த்ரமுக்ய ஸரபூஜித பாதபத்ம !
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

வானவர்தம் பகை அழிக்க வாயுவின் மைந்தனுக்குச் சங்காழி அளித்தவனே ! சென்றால் குடையாம் திருஅனந்தாழ்வானைப் பணி கொண்டவனே ! அனைவர்க்கும் தலைவா ! தேவேந்திரன் முதலிய தேவர்கள் போற்றி வணங்கும் திருவடித் தாமரை உடையவனே ! பள்ளி எழுந்தருளாயே.

8 ஸ்வாமிந் ஸுரேச மதுரேச ஸமாஹிதார்த்த
த்யாக ப்ரவீண விநதாவந ஜாகரூக !
ஸர்வக்ஞ ஸந்தத ஸமீரித ஸர்வவ்ருத்த
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

எம்மை உடைமையாய்க் கொண்டவனே ! தெய்வ நாயகனே ! வடமதுரைத் தலைவனே ! நன்மைக் கடலே ! நின்னையே மனத்துக் கொண்டு நினைத் திடும் தவமா முனிவர்களைக் காப்பதில் இமையாத திருக்கண்ணுடையவனே ! அனைத்தும் அறிபவனே ! என்றும் வேண்டுவோர்க்கு வேண்டுவதை அறிந்தருளுபவனே ! பள்ளி எழுந்தருளாயே !

9 ப்ரஹ்லாத ரக்ஷண நிதான க்ருதாவதார
முக்த ஸ்வகீய நகரை : ஸ்புடிதாரிவக்ஷ !
ஸர்வாபிவந்த்ய நிஜவைபவ சந்த்ரகாந்த
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

பிரஹல்லாதனைக் காத்திட அவதாரம் கொண்டவனே
மால்கொண்டு இரணியன் மார்பகலம்
கூருகிரால் குடைந்தழித்தவனே ! அனைவரும்
வணங்கிடும் பெருமை உடையவனே !
அடியவர்க்குத் தண்மதி போல் அருள்
புரியவனே ! பள்ளியெழுந்தருளாயே.

10 பக்தோசிதாதி ஸரஸஸ் ஸுகுணம் ப்ரக்ருஷ்டம்
தீர்த்தம் ஸுவர்ணகட பூரிதமாதரேனே !
த்ருத்வா ச்ருதி ப்ரவசனைகபரா லஸந்தி
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

உனக்குத் தக்கதும் இன்சுவை மிக்கதும்
நன்மையே உடையதும் பெருமை வாய்ந்ததும்
ஆன நன்னீரைப் பொற்குடத்தில் பூரித்துக்
கையிலேந்தி, வேதம் வல்லார்கள் கூட்டமாக
உன் கோயிலில் திரண்டுள்ளனர். ஆதலால் விரைந்து
பள்ளியெழுந்தருளாயே.

11 ஸம்ச்லாகனீய பரமோத்தர ரங்கவாஸின்
ஸுரிஸ்துதி ப்ரதித விக்ரஹ காந்தி காந்த !
ஸத்பிஸ்ஸமர்சித பதாம்புஜ ஸாது ரக்ஷிந்
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

பெரும் புகழ் மிகும் வடதிருவரங்கம் கோயில் கொண்டவனே,
திவ்விய ஸுரிகளான ஆழ்வார்கள் புகழ்ந்து பாடுவதால்
திருமேனிப் பொலிவு மிகுபவனே ! மேலோர் போற்றி
வணங்கும் திருவடித் தாமரை உடையவனே !
நல்லோர்களைக் காப்பவனே ! பள்ளி எழுந்தருளாயே !

12 தீர்த்தாநி கோமுக கதாங்யகிலாநி த்ருத்வா
பவ்யாநி பவ்ய நிகரா: பரிதோ லஸந்தி !
காயந்தி காநசதுராஸ் தவ திவ்ய வ்ருத்தம்
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

நாற்றிசையிலும் விளங்கும் திவ்ய தீர்த்தங்களிலிருந்து
நன்னீரைப் பொற்குடத்தில் ஏந்தி அடியார்கள் நின்
திருமுன்பே கூட்டமாகவந்துள்ளனர். நல்லிசை
பாடுவார் உன் இனிய புகழைப் பாட்டிசைத்துப்
பாடுகின்றனர். ஆதலால் பள்ளியெழுந்தருளாயே !

13 வாராணஸீ ப்ரதித விஷ்ணுபதீப்ரயாக
விக்யாத விச்வனத ஸத்கடிகாசலேந்த்ர !
ஸம்ப்ரார்த்திதார்த்த பரிதாந க்ருதைகதீக்ஷ
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

வாரணாசி, கயை, பிரயாகை முதலிய புகழ் விளங்கும்
பதிகளிலும் மிகும் புகழ் வாய்ந்த கடிகை
மலையை – இருப்பிடமாகக் கொண்டவனே !
வேண்டுவோர் வேண்டியது அருள்வதையே
கொள்கையாகக் கொண்டவனே !
நரசிங்கப் பெருமானே ! பள்ளி யெழுந்தருளாயே !

14 பார்ச்வத்வய ஸ்தித ரமாமஹி சோபமாந,
ஸ்ரீ சோளஸிம்ஹபுர பாக்ய க்ருதாவதார !
ஸ்வாமிந் ஸுசீல ஸுலபாச்ரித பாரிஜாத
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

திருமகளும், மண்களும் இருபால் விளங்க வீற்றிருப்பவனே!
சோளசிம்மபுரம் செய்த நற்றவப் பயனாகத்
தோன்றியவனே ! எம் தலைவ ! சீல குணம் உடையவனே !
அடைந்தவர்க்கு அல்லல் நீக்கி
அருள்புரியும் கற்பகத் தருவே ! பள்ளியெழுந்தருளாயே !

15 ஸ்ரீ ஸ்ரீநிவாஸ கனதேசிகவர்ய பக்தி
ஸம்வர்த்தித ப்ரதிதிநோத்ஸவ சோபமாந !
கல்யாணசேல கனகோஜ்வல பூஷணாட்ய
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

ஸ்ரீ நிவாஸதாஸரான தொட்டாசார் என்னும்
மஹாசாரியர் பரமபக்தியுடன் போற்றி இட்ட
கட்டளையால் நாள்தோறும் விழாச்செல்வம் கொண்டு
விளங்குபவனே ! மங்களம் தரும் பட்டுத் துகிலும்
நவமணிகள் பதித்த பொற்கலன்களும் தரித்து அழகேறும்
செல்வமுடையவனே ! பள்ளியெழுந்தருளாயே

16 ஸ்ரீ ப்ரம்ஹ தீர்த்த தடமாகத மஞ்ஜநாபம்
தேவம் ப்ரணம்ய வரதம் கடிகாத்ரிமேத்ய !
வாதூல மாநிதி மஹாகுருரேஷ ஆஸ்தே
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

கண்டார் மனங்கவரும் ஒழுக்கச் செல்வமுடைய
பிரம்ம தீர்த்தக் கரையில் தானே கருட வாஹனத்துடன்
தோன்றி அருள்புரிந்த காஞ்சிபுரம் பேரருளாளனைத்
திருவடி தொழுது, கடிகைத் தடங் குன்றிலேறி உன்னைத்
திருவடி தொழ ஸ்ரீ மஹாசார்யரும் வந்துவிட்டார்.
நரஹரி ! திருப்பள்ளி யெழுந்தருளாயே !

17 ஆசார்ய பூருஷ வரா ஹ்யபிராம வ்ருத்தா :
அர்ஹாபிபூஜ்யதர மங்களவஸ்து ஹஸ்தா :!
த்வத் பாத பங்கஜ ஸிஷேவிஷயா ப்ரபன்னா :
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ விஜயீபவ ஸுப்ரபாதம் !!

ஆசார்ய புருஷர்கள் உன் பெருமைக் கேற்கும்
தகுதிவாய்ந்த மிகச் சிறந்த பொற்கலசம், குடை
சாமரம், கண்ணாடி முதலிய மங்கலப் பொருட்களைக்
கைகளிலேந்தியவராய், உன் திருவடித் தாமரை
தொழும் தூய தொண்டு செய்யும் விருப்பம் கொண்டு
உன் திருமுன்பே கூடியுள்ளனர். நரஹரி !
ஆதலால் பள்ளியெழுந்தருளாயே !

18 ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ கிரிசேகர ஸுப்ரபாதம்
யேமானவா : ப்ரதிதினம் படிதும் ப்ரவ்ருத்தா :
தேப்ய : ப்ரஸன்னவதன : கமலா ஸஹாய:
ஸர்வாணி வாஞ்சித பலானி ததாதி காமம் !!

திருக்கடிகை நரசிங்கப் பெருமானின் திருப்பள்ளி எழுச்சியைத் தூய மனத்துடன் நாள்தோறும் ஓதுகின்ற அடியவர்க்குத் திருமகள் கேள்வனாகிய கடிகைப் பெருமான் இன்முகம் செய்து அவர் விரும்புவன எல்லாம் தந்து மேலும் மேலும் அருள் செய்வது உறுதி.

## மங்களம்

1 கடிகாசல ச்ருங்காக்ர விமானோதர வாஸினே !
நிகிலாமர ஸேவ்யாய நரஸிம்ஹாய மங்களம் !!

2 உதீசீரங்க நிவஸத் ஸுமநஸ்தோம ஸூக்திபி : !
நித்யாபி வ்ருத்த யசஸே நரஸிம்ஹாய மங்களம் !!

3 ஸுதாவல்லீ பரிஷ்வங்க ஸுரபீக்ருத வக்ஷஸே !
கடிகாத்ரி நிவாஸாய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம் !!

4 ஸர்வாரிஷ்ட விநாசாய ஸர்வேஷ்ட பலதாயினே !
கடிகாத்ரி நிவாஸாய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம் !!

5 மஹாகுரு மந: பத்ம மத்ய நித்ய நிவாஸிநே !
பக்தோசிதாய பவதாத் மங்களம் சாச்வதீ: ஸமா !!

6 ஸ்ரீமத்யை விஷ்ணு சித்தார்ய மனோநந்தன ஹேதவே !
நந்த நந்தன ஸுந்தர்யை கோதாயை நித்ய மங்களம் !!

7 ஸ்ரீமந் மஹாபூதபுரே ஸ்ரீமத் கேசவ யஜ்வந: !
காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம் !!

8 பாதுகே யதிராஜஸ்ய கதயந்தி யதாக்யயா !
தஸ்ய தாசரதே : பாதௌ சிரஸா தாரயாம்யஹம் !!

9 ஶ்ரீமதே ரம்ய ஜாமாத்ரு முநீந்த்ராய மஹாத்மநே !
ஶ்ரீரங்கவாஸிநே பூயாத் நித்ய ஶ்ரீ: நித்ய மங்களம் !!

10 ஸௌம்யஜாமாத்ரு யோகீந்த்ர சரணாம்புஜ ஷட்பதம் !
தேவராஜகுரும் வந்தே திவ்யஜ்ஞானப்ரதம் சுபம் !!

11 வாதூலஶ்ரீநிவாஸார்ய தநயம் விநயாதிகம் !
ப்ரஜ்ஞா நிதிம் ப்ரபத்யேஹம் ஶ்ரீநிவாஸமஹாகுரும் !!

12 சண்டமாருத வேதாந்த விஜயாதி ஸ்வஸூக்திபி !
வேதாந்தரக்ஷகாயாஸ்து மஹாசார்யாய மங்களம் !!

---

பொருள் :

கடிகைத் தடங்குன்றின்மிசை கோயில் கொண்டு
வாழ்பவனே ! அனைத்துத் தேவர்களும்
தொழும் பெரியோனே ! நரசிங்கப் பெருமானே
உனக்கு மங்களம் உண்டாகுக !
வட திருவரங்கத்தில் வாழும் நல்லார்கள்
துதித்துப் புகழ்வதால் நாளும் புகழேறும்
செல்வம் உடைய நரசிங்கப் பெருமானே
உனக்கு மங்களம் உண்டாகுக.
சுதாவல்லி சேர்ந்திலங்கும் மணங்கமிழ்
மார்பனே ! கடிகை மலையைக் கோயிலாகக்
கொண்டவனே ! உனக்கு மங்களம்
தீமைகள் அனைத்தையும் அழிப்பனே !
வேண்டுவார் வேண்டுவன அனைத்தும்
தந்தருளுபவனே ! திருக்கடிகை மலையைக்
கோயிலாகக் கொண்ட நரசிங்கப் பெருமானே
உனக்கு மங்களம்.
மஹாசாரியரின் உள்ளத் தாமரை நடுவில்
என்றும் நின்று விளங்குபவனே !
பக்தோசிதனாகிய உனக்குப் பல்லாண்டு
பல்லாண்டு மங்களம் உண்டாகட்டும்.

# ஸ்ரீ நரசிம்மசுவாமி போற்றி

1 திருக்கடிகைத் தேவா போற்றி
2 திருமாமகள் கேள்வா போற்றி
3 யோக நரசிங்கா போற்றி
4 ஆழியங்கையா போற்றி
5 அக்காரக் கனியே போற்றி
6 அனுமனுக்கு ஆழி அளித்தாய் போற்றி
7 எக்காலத் தெந்தாய் போற்றி
8 எழில் தோள் எம்மிராமா போற்றி
9 சங்கரப்ரியனே போற்றி
10 சார்ங்க விற்கையா போற்றி
11 உலகமுண்ட வாயா போற்றி
12 உலப்பில் கீர்த்தியம்மா போற்றி
13 அடியவர்க்கருள்வாய் போற்றி
14 அனைத்துலக முடையாய் போற்றி
15 தாமரைக் கண்ணா போற்றி
16 காமனைப் பயந்தாய் போற்றி
17 ஊழி முதல்வா போற்றி
18 ஒளி மணிவண்ணனே போற்றி
19 இராவணாந்தகனே போற்றி
20 இலங்கை எரித்த பிரான் போற்றி
21 பெற்ற மாளியே போற்றி
22 பேரில் மணாளா போற்றி
23 செல்வ நாரணா போற்றி
24 திருக்குறளா போற்றி
25 இளங்குமரா போற்றி
26 விளங்கொளியே போற்றி

27 சிந்தனைக்கினியாய் போற்றி
28 வந்தெனையாண்டாய் போற்றி
29 எங்கள் பெருமான் போற்றி
30 இமையோர் தலைவா போற்றி
31 சங்கு சக்கரத்தாய் போற்றி
32 மங்கை மன்னன் மனத்தாய் போற்றி
33 வேதியர் வாழ்வே போற்றி
34 வேங்கடத்துறைவா போற்றி
35 நந்தா விளக்கே போற்றி
36 நால் தோளமுதே போற்றி
37 ஆயர்தம் கொழுந்தே போற்றி
38 ஆழ்வார்களுயிரே போற்றி
39 நாமம் ஆயிரம் உடையாய் போற்றி
40 வாமதேவனுக்களித்தாய் போற்றி
41 மூவா முதல்வா போற்றி
42 தேவாதி தேவா போற்றி
43 எட்டெழுத்திறைவா போற்றி
44 எழில்ஞானச் சுடரே போற்றி
45 வரவரமுனிவாழ்வே போற்றி
46 வடதிருவரங்கா போற்றி
47 ஏனம்முன் ஆனாய் போற்றி
48 தானவன் ஆகம் கீண்டாய் போற்றி
49 கஞ்சனைக் கடிந்தாய் போற்றி
50 நஞ்சரவில் துயின்றாய் போற்றி
51 மாலே போற்றி
52 மாயப் பெருமானே போற்றி
53 ஆலிலைத் துயின்றாய் போற்றி
54 அருள்மாரி புகலே போற்றி
55 விண் மீதிருப்பாய் போற்றி

56 மண் மீதுழல்வோய் போற்றி
57 மலைமேல் நிற்பாய் போற்றி
58 மாகடல் சேர்ப்பாய் போற்றி
59 முந்நீர் வண்ணா போற்றி
60 முழுதும் கரந்துறைவாய் போற்றி
61 கொற்றப் புள்ளுடையாய் போற்றி
62 முற்றவிம் மண்ணளந்தாய் போற்றி
63 அனைத்துலக முடையாய் போற்றி
64 அரவிந்த லோசன போற்றி
65 மந்திரப்பொருளே போற்றி
66 இந்திர னுக்கருள்வாய் போற்றி
67 குருபரம்பரை முதலே போற்றி
68 விகனைசர் தொழும் தேவா போற்றி
69 பின்னை மணாளா போற்றி
70 என்னை யாளுடையாய் போற்றி
71 நலம்தரும் சொல்லே போற்றி
72 நாரண நம்பீ போற்றி
73 பிரகல்லாதப்ரியனே போற்றி
74 பிறவிப் பிணியறுப்பாய் போற்றி
75 பேயார் கண்ட திருவே போற்றி
76 ஏழு மாமுனிவர்க்கருளே போற்றி
77 ஏமகூட விமானத்திறைவா போற்றி
78 ஆனையின் நெஞ்சிடர் தீர்த்தாய் போற்றி
79 கல்மாரி காத்தாய் போற்றி
80 கச்சி யூரகத்தாய் போற்றி
81 வில்லிறுத்த தேவா போற்றி
82 வீடணனுக் கருளினாய் போற்றி
83 இனியாய் போற்றி
84 இனிய பெயரினாய் போற்றி

85 புனலரங்கா போற்றி
86 அனலுருவே போற்றி
87 புண்ணியா போற்றி
88 புராணா போற்றி
89 கோவிந்தா போற்றி
90 கோளரியே போற்றி
91 சிந்தாமணி போற்றி
92 சிரீதரா போற்றி
93 மருந்தே போற்றி
94 மாமணி வண்ணா போற்றி
95 பொன் மலையாய் போற்றி
96 பொன் வடிவே போற்றி
97 பூந்துழாய் முடியாய் போற்றி
98 பாண்டவர்க் கன்பா போற்றி
99 குடந்தைக் கிடந்தாய் போற்றி
100 தயரதன் வாழ்வே போற்றி
101 மதிகோள் விடுத்தாய் போற்றி
102 மறையாய் விரிந்த விளக்கே போற்றி
103 வள்ளலே போற்றி
104 வர மருள்வாய் போற்றி
105 சுதாவல்லி நாதனே போற்றி
106 சுந்தரத் தோளுடையாய் போற்றி
107 பத்தராவியே போற்றி
108 பக்தோசிதனே போற்றி



# ஸ்ரீ அனுமான் அருள் போற்றி

1 ஓம் ஆஞ்சநேய சுவாமியே போற்றி
2 ஓம் அஞ்சனா போற்றி
3 ஓம் ஆதித்தன் பிரியனே போற்றி
4 ஓம் அலங்கார வீரனே போற்றி
5 ஓம் கிஷ்கிந்தை வாழ்ந்தனை போற்றி
6 ஓம் பீமசேனன் அண்ணனே போற்றி
7 ஓம் பாப விமோசனா போற்றி
8 ஓம் ஸ்ரீ ராம தூதனே போற்றி
9 ஓம் லங்காதகன தீரனே போற்றி
10 ஓம் சஞ்சீவிமலை கொணர்ந்தாய் போற்றி
11 ஓம் சுந்தரகாண்ட நாயகா போற்றி
12 ஓம் சீதா துயர் துடைத்தாய் போற்றி
13 ஓம் சீதக்களபம் அணிந்தாய் போற்றி
14 ஓம் சிவபிரியா போற்றி
15 ஓம் நவ வியாகரண மகா பண்டிதா போற்றி
16 ஓம் யோக நரசிம்ம பக்தனே போற்றி
17 ஓம் சாம்பவந்தர் அன்பனே போற்றி
18 ஓம் சாஸ்திரம் கற்றாய் போற்றி
19 ஓம் துர்க்கையின் இனியனே போற்றி
20 ஓம் தூய வாழ்வளிப்பவனே போற்றி
21 ஓம் பிரம ரிஷியே போற்றி
22 ஓம் சர்வரோகம் தீர்ப்பாய் போற்றி
23 ஓம் அங்கார தாரை துதிப்பாய் போற்றி
24 ஓம் லங்கினி பணிந்தோய் போற்றி
25 ஓம் வீபீஷணன் உயிரோய் போற்றி
26 ஓம் பாரிஜாத தருதந்தாய் போற்றி

27 ஓம் வாயுபுத்ரா போற்றி
28 ஓம் வசந்தகால நாயகா போற்றி
29 ஓம் கந்தர்வ வித்யாகாரகா போற்றி
30 ஓம் அங்கதன் நண்பனே போற்றி
31 ஓம் தாரையை காத்தோய் போற்றி
32 ஓம் திரிசடை புகழ்ந்தோய் போற்றி
33 ஓம் தீவினை அழிப்பாய் போற்றி
34 ஓம் மங்களம் தருவாய் போற்றி
35 ஓம் மாருதி திருத்தாள் போற்றி
36 ஓம் வெற்றியின் மைந்தா போற்றி
37 ஓம் சக்தியின் பிள்ளாய் போற்றி
38 ஓம் சூடாமணி கண்டாய் போற்றி
39 ஓம் கணையாழி தந்தாய் போற்றி
40 ஓம் மதுவனம் திரிந்தாய் போற்றி
41 ஓம் நிகும்பலை அழித்தாய் போற்றி
42 ஓம் மைநாகம் பார்த்தாய் போற்றி
43 ஓம் அணுவென புகுந்தாய் போற்றி
44 ஓம் ஆசையாய் வென்றோய் போற்றி
45 ஓம் கடிகையில் அமர்ந்தாய் போற்றி
46 ஓம் கங்கையில் நடந்தோய் போற்றி
47 ஓம் சங்கரன் அருளா போற்றி
48 ஓம் சாமுண்டி பிரியா போற்றி
49 ஓம் ராகுவை பிடித்தாய் போற்றி
50 ஓம் கேதுவை அடித்தாய் போற்றி
51 ஓம் மகாபல பராக்கிரம வீரா போற்றி
52 ஓம் கடல்தனை கடந்தாய் போற்றி
63 ஓம் வைதேகி புகழ்ந்தோய் போற்றி
54 ஓம் வஜ்ரதோள் தேவே போற்றி
55 ஓம் ராமபக்தஹனுமானே போற்றி

56 ஓம் நவசக்தி அருள்பாலா போற்றி
57 ஓம் சிரஞ்சீவி போற்றி
58 ஓம் பிரபுவே போற்றி
59 ஓம் பலசித்தி பெற்றாய் போற்றி
60 ஓம் கவி சேனாபதியே போற்றி
61 ஓம் ரத்னகுண்டல பதயே போற்றி
62 ஓம் சஞ்சலம் தீர்க்கும் சாமியே போற்றி
63 ஓம் யோக ஆஞ்சனேயா போற்றி
64 ஓம் மாதங்க வனப்பிரியனே போற்றி
65 ஓம் அஞ்சனாகர்ப ஹனுமந்தா போற்றி
66 ஓம் சீதா சோக நிவாரிணே போற்றி
67 ஓம் தசக்கிரிவ கர்வம் அழித்தாய் போற்றி
68 ஓம் வஜ்ரகாயா போற்றி
69 ஓம் மஹாத்மா போற்றி
70 ஓம் ராம பக்தாய போற்றி
71 ஓம் மச்சகந்தி பிரியா போற்றி
72 ஓம் மருத மரவாசா போற்றி
73 ஓம் கந்த மதன பர்வதா போற்றி
74 ஓம் கோதாவரி தீரனே போற்றி
75 ஓம் சூரனே போற்றி
76 ஓம் தீரனே போற்றி
77 ஓம் வீரனே போற்றி
78 ஓம் சுக்கிரிவ பிரியா போற்றி
79 ஓம் ராம சூடாமணி கொடுத்தாய் போற்றி
80 ஓம் இந்திர பிரியா போற்றி
81 ஓம் காமரூபனே போற்றி
82 ஓம் பிங்களா போற்றி
83 ஓம் மார்த்தண்டாய போற்றி
84 ஓம் ஸ்ரீமதே போற்றி

85 ஓம் பஞ்சபூத பாவலா போற்றி
86 ஓம் சூரியமண்டல பூஜிதா போற்றி
87 ஓம் ஹரிமர் கடமர் கடாய போற்றி
88 ஓம் யோக நரசிம்ம தூதனே போற்றி
89 ஓம் சிவகாருண்ய சிங்காரா போற்றி
90 ஓம் பக்த ஆஞ்சநேயா போற்றி
91 ஓம் பாதாளலிங்க பக்தனே போற்றி
92 ஓம் பரமதயாள கிருபாகரா போற்றி
93 ஓம் வேதியா போற்றி
94 ஓம் அகத்தியன் துதிப்போய் போற்றி
95 ஓம் பிரம்மாச்சாரியே போற்றி
96 ஓம் அர்த்த சாஸ்திர ஹனுமானே போற்றி
97 ஓம் கந்தம் கமழும் மேனியோய் போற்றி
98 ஓம் ஆயகலைகள் அறிந்தாய் போற்றி
99 ஓம் வாரை சிரேஷ்டா போற்றி
100 ஓம் வசந்தத்தின் எழிலே போற்றி
101 ஓம் தத்துவஞானியே போற்றி
102 ஓம் தசமுக பிரபுவே போற்றி
103 ஓம் நான்கு திருக்கரத்தோய் போற்றி
104 ஓம் நான்முகன் கொழுந்தே போற்றி
105 ஓம் சோளிங்கர் மணியே போற்றி
106 ஓம் சுடர் ஒளி திருவே போற்றி
107 ஓம் ராமனின் தூதா போற்றி
108 ஓம் சீதா சமேத ராமபாத சேவகா போற்றி



## அருள்மிகு லட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில், சோளிங்கர். வ. ஆ. அ. மாவட்டம்.

**வழிபடும் நேரங்கள் :**

பெரியமலை— அருள்மிகு யோக நரசிம்மசுவாமி திருக்கோயில் மற்றும்

சிறியமலை — அருள்மிகு யோக ஆஞ்சநேய சுவாமி திருக்கோயில்

தரிசன கால விவரம்

தினசரி காலை 8 மணி முதல் மாலை 5—30 மணி வரை

**பிரதி வெள்ளிக்கிழமை பெரியமலையிலும்,**
**பிரதி ஞாயிற்றுக்கிழமை சிறியமலையிலும்**
**பூஜை காலங்கள் விவரம்**

காலை 7 மணி முதல் 8–30 மணி வரை—தரும தரிசனம்

காலை 9 மணி முதல் 11-00 மணி வரை—திருமஞ்சனம்

காலை 11 மணி முதல் 12-00 மணி வரை—அலங்காரம், தளிகை நிவேதனம்

பகல் 12 மணி முதல் 4–00 மணி வரை—தரும தரிசனம்

பிற்பகல் 2 மணி முதல் 4–00 மணி வரை—சகஸ்ரநாம அர்ச்சனை

பிற்பகல் 4 மணி முதல் 5–30 மணி வரை—தரும தரிசனம்

கார்த்திகை மாதம் – பெரிய மலையில்: பிரதி வெள்ளி மற்றும் சிறிய மலையில் பிரதி ஞாயிறு தினங்களில் பூஜை காலங்கள் விவரம்

காலை 5 மணி முதல் 7–00 மணி வரை — தரும தரிசனம்

காலை 7 மணி முதல் 9–00 மணி வரை — திருமஞ்சனம்

காலை 9 மணி முதல் 10–00 மணி வரை — தளிகை நிவேதனம்

ஊர் திருக்கோயில்-அருள்மிகு பக்தோசித சுவாமி திருக்கோயில்
**(பெருமாள் கோயில்)** பூஜை மற்றும் தரிசன கால விவரம்

| | | | மணி நி, |
|---|---|---|---|
| 1 | திருமஞ்சன குடம் வருதல் - காலை | | 8—00 |
| 2 | திருக்காப்பு நீக்குதல் | ,, | 8—30 |
| 3 | திருவாராதனம் | ,, | 9—30 |
| 4 | சேவா காலம் | ,, | 10—00 |
| 5 | தளிகை | ,, | 10—30 |
| 6 | தீர்த்த விநியோகம் | ,, | 11—00 |
| 7 | தரும தரிசனம் | ,, | 11-00 முதல் 12—00 |
| 8 | திருக்காப்பு நீக்குதல் | மாலை | 5—00 |
| 9 | சேவாகாலம் | ,, | 6—00 |
| 10 | திருமால்வடை தளிகை | ,, | 6—30 |
| 11 | தீர்த்த விநியோகம் | ,, | 7—00 |
| 12 | தரும தரிசனம் | இரவு 7-00 மணி முதல் | 8—15 |
| 13 | திருவாராதனம் | ,, | 8—15 |
| 14 | தளிகை | ,, | 8—30 |
| 15 | அரவணை மற்றும் திருக்காப்பு சேர்த்தல் | ,, | 8—45 |

விழாக் காலங்கள் மற்றும் விசேஷ தினங்களில் பூஜை நேரங்கள் மாறுபடும்.

## தங்குமிடம் கட்டண விவரங்கள்

| | ரூ. | காசு |
|---|---|---|
| நரசிம்மர் இல்லம் — அறை ஒன்றுக்கு தின வாடகை . . | 20 | 00 |

## திருமஞ்சனம், தளிகை மற்றும் இதர சேவை கட்டண விவரங்கள் :

| | | ரூ. | காசு |
|---|---|---|---|
| 1 | பெரியமலையில் அருள்மிகு அமிருதபலவல்லித் தாயார் பிரார்த்தனை உற்சவம் செய்ய கட்டணம் (வெள்ளிக்கிழமை தினங்களில் மட்டும்) . . | 500 | 00 |

| | | ரூ | காசு |
|---|---|---|---|
| 2 | சிறியமலையில் அருள்மிகு யோக ஆஞ்சநேய சுவாமி பிரார்த்தனை உற்சவம் செய்ய கட்டணம் (எல்லா தினங்களிலும் செய்யலாம், விசேஷ உற்சவ நாட்கள் தவிர) .. | 400 | 00 |
| 3 | சிறியமலையில் அருள்மிகு இராமர் பிரார்த்தனை உற்சவம் செய்ய கட்டணம் (ஞாயிறு தினங்களில் மற்றும் புனர்பூச நட்சத்திர தினங்களில் மட்டும் .. | 400 | 00 |
| 4 | ஊர் திருக்கோயில் அருள்மிகு பக்தோசிதசுவாமி பிரார்த்தனை உற்சவம் செய்ய கட்டணம் (பஞ்ச பருவ தினங்களில் மட்டும் அதாவது அமாவாசை ஏகாதசி, பௌர்ணமி, சுவாதி மற்றும் மாசப் பிரவேச தினங்கள் மட்டும்) .. | 500 | 00 |
| 5 | புஷ்பாங்கி சேவை சன்னதி ஒன்றுக்கு கட்டணம் .. | 150 | 00 |
| 6 | சந்தனக் காப்பு சேவை (பெரியமலையில் வெள்ளிக்கிழமை தினங்களில் மட்டும்) .. | 150 | 00 |
| 7 | திருவாபரண சேவை (சன்னதி ஒன்றுக்கு) .. | 100 | 00 |
| 8 | மஞ்சள் காப்பு சேவை (தாயார் சன்னதிக்கு மட்டும்) .. | 60 | 00 |
| 9 | கோயிலாழ்வார் திருமஞ்சனம் சன்னதிஒன்றுக்கு .. | 300 | 00 |
| 10 | திருமஞ்சனம் (அபிஷேகம்) பெரியமலையில் அமிருதபலவல்லி தாயார் மற்றும் யோக நரசிம்மர் ஆகிய சன்னதியில் செய்ய கட்டணம் (வெள்ளிக்கிழமை தினங்கள் மட்டும்) .. | 30 | 00 |
| 11 | திருமஞ்சனம் (அபிசேகம்) சிறியமலையில் யோக ஆஞ்சநேயசுவாமி சன்னதியில் செய்ய (பிரதி தினமும் செய்யலாம்) கட்டணம் ஞாயிறு தவிர இதர தினங்களில் செய்ய கட்டணம் .. | 35 | 00 |

| | | ரூ. | காசு |
|---|---|---|---|
| 12 | திருமஞ்சனம் (அபிசேகம்) சிறிய மலையில் இராமர் சன்னதியில் செய்ய கட்டணம் (ஞாயிறு தினங்களில் மட்டும்) .. | 30 | 00 |
| 13 | திருமஞ்சனம் (அபிசேகம்) சிறியமலையில் அரங்கநாதர் சன்னதில் செய்ய கட்டணம் .. | 35 | 00 |
| 14 | பெரியமலையில் துவார பாலகர், சப்தரிஷிகள் திருமஞ்சனம் செய்ய கட்டணம் .. | 35 | 00 |
| 15 | சகஸ்ரநாம அர்ச்சனை ஒரு மண்டலம் பிரதி தினமும் உபகாரம் ஆரத்தி உள்பட மற்றும் முடிவு நாளில் தளிகை நிவேதனம் உட்பட .. | 300 | 00 |
| 16 | சகஸ்ரநாம அர்ச்சனை டிக்கட் 1-க்கு கட்டணம் .. | 4 | 50 |
| 17 | அஷ்டோத்ர அர்ச்சனை டிக்கட் 1க்கு கட்டணம் .. | 1 | 00 |
| 18 | அஷ்டோத்ர அர்ச்சனை ஒரு மாத காலம் செய்ய கட்டணம் (பிரதி தினமும் உபகாரம் மற்றும் ஆரத்தி உள்பட) .. | 50 | 00 |
| 19 | காதுகுத்தல் குழந்தை 1–க்கு .. | 4 | 00 |
| 20 | முடிநீக்கம் நபர் 1–க்கு .. | 2 | 00 |
| 21 | பெரியமலை டோலி நபர் 1–க்கு .. | 60 | 00 |
| 22 | பெரியமலை குழந்தை டோலி .. | 15 | 00 |
| 23 | சிறியமலை டோலி நபர் 1-க்கு .. | 40 | 00 |
| 24 | சிறியமலை குழந்தை டோலி .. | 10 | 00 |
| 25 | பெருமாள், தாயார் ஆஞ்சநேயர் மூவர்ண கலர் படங்கள் படம் 1-க்கு விலை .. | 3 | 00 |
| 26 | பரிவட்டம் சுவாமிக்கு சமர்ப்பிக்க துணி 1–க்கு கட்டணம் .. | 1 | 00 |

| | தளிகை கட்டண விவரம் | | ரூ. | காசு |
|---|---|---|---|---|
| 1 | லட்டு 100-க்கு | | 300 | 00 |
| 2 | ஜிரா (ரவா கேசரி) | | 75 | 00 |
| 3 | சர்க்கரை பொங்கல் | ¼ தளிகை | 30 | 00 |
| 4 | பொங்கல் | ¼ தளிகை | 22 | 00 |
| 5 | புளியோதரை | ¼ தளிகை | 20 | 00 |
| 6 | ததியோதனம் | ¼ தளிகை | 12 | 00 |
| 7 | பாயசம் | ¼ தளிகை | 35 | 00 |
| 8 | வடை பருப்பு | ¼ தளிகை | 15 | 00 |
| 9 | பானகம் | ¼ தளிகை | 10 | 00 |
| 10 | வடை மாலை — ½ (16 வடைகள்) | | 20 | 00 |
| 11 | தோசை – 20 (2 லிட்டர்) | | 25 | 00 |
| 12 | சுண்டல் — 2 லிட்டர் | | 20 | 00 |
| 13 | ததியாராதனை — 10 நபர்களுக்கு | | 65 | 00 |
| 14 | கூலி (தளிகை சாமான்கள் மலைகளுக்கு எடுத்துச்செல்ல) | | 5 | 00 |

## திருக்கடிகை தீர்த்தங்களும் ஸ்நாநம் செய்ய வேண்டியநாட்களும்

1 த்ரிம்சத்கோடி ஸஹஸ்ராணி தீர்த்தானி கடிகாசலே —
கடிகாசல தீர்த்தம்

சத்தா அம்ருதபவாஹ்யாகம், பக்தோசிதா ஹ்வயாசைவ —
ஆஹூ

தீர்த்தத்ரயம் சுபம் தத்தீர்த்தஸம்பவை : பத்மை : கல்லாலோத் பலகைரவை : காசி கங்கா ப்ரயா காப்யாம் ஸத்யம்
த்ணாதிகம்

2 கடிகாசல பூபாகே கடிகாமபியோவஸேத்
ஸப்த ஜன்ம கருதம் பாபம் தத்க்ஷணாதேவ நச்யதி

| தீர்த்தங்களின் பெயர்கள் : | | வாரத்தின் நாட்கள் : |
|---|---|---|
| 1 | ஹனுமத் தீர்த்தம் (சக்கர தீர்த்தம்) சின்னமலை | ஞாயிற்றுக்கிழமை |
| 2 | பைரவ தீர்த்தம் (தக்கான்குளமலை) | திங்கட்கிழமை |
| 3 | வஜ்ர தீர்த்தம் — அகஸ்ய தீர்த்தம் | செவ்வாய்க்கிழமை |
| 4 | பாண்டவ தீர்த்தம் | புதன்கிழமை |
| 5 | பிரம்ம தீர்த்தம் (தக்கான்குளம்) | வியாழக்கிழமை |
| 6 | லக்ஷ்மி தீர்த்தம் | வெள்ளிக்கிழமை |
| 7 | கௌதம தீாத்தம் | சனிக்கிழமை |
| 8 | சேஷ தீர்த்தம் | சனிக்கிழமை |

மேலே கண்டவை முக்கியமான தீர்த்தங்களாகும்.

9 சிலாபுஷ்கரணி (பெரியமலை பின்புறம் உள்ள சுனை)

10 ஹலாவ்ருத்தம் (ஆகாசகங்கை)

11 அகஸ்த்ய தீர்த்தம் (பெருங்காஞ்சி)

12 அக்னிகுண்ட தீர்த்தம்)

13 ஸோமகுண்ட தீர்த்தம்

14 பத்மஸரஸ், விமானத்தீர்த்தம் (கொடைக்கல்)

15 ராம தீர்த்தம்

16 கல்ஹார தீர்த்தம்

17 வராஹ தீர்த்தம்

18 புண்டரீக தீர்த்தம் (புலிவலம்)

19 பாபநாசம் (ருணவிமோசனம்) (குளிர் காற்று மண்டபம்)

20 வாமன புஷ்கரணி

21 அம்ருத குண்டம்

22 ரத்நஸரஸ

23 மஹாஸரஸ்

24 நரசிம்ம தீர்த்தம் பெரியமலை அடிவாரம்)

25 ஹம்ஸ தீர்த்தம் (பெரியமலை நாலுகால் மண்டப தென்புறம்)

26 பஞ்சாயுத தீர்த்தம் (பழைய தாயார் சன்னதி சமீபம் உள்ள தீர்த்தங்கள்)

**கொண்டபாளையத்திலுள்ள சத்திரங்கள் :**

1 இவ்வூரில் மொத்தம் 29 சத்திரங்கள் உள்ளன. அவற்றுள் இராயாஜி அன்னதான சத்திரம்
2 ரேவூர் நம்பெருமாள் செட்டி சத்திரம்
3 எம். ஏ. தேவராஜ் கல்யாண மண்டபம்
4 வி. குருசாமி நாயுடு கல்யாண மண்டபம்
5 கிருஷ்ண பஜனை மந்திரம்
6 நம்பிள்ளை இராமாநுஜ ஏகாங்கி அவர்களின் தவன உற்சவ மண்டபம்
7 கிருஷ்ணதாஸ் மந்திரம்
8 குர்ரம் அக்குலு செட்டி சத்திரம்
9 சவரம்பாக்கம் முனிசாமி நாயுடு சத்திரம்
10 புதூர் ரங்கசாமி செட்டி சத்திரம்
11 ராஜாபாதர் அம்மாள் & துரைக்கண்ணம்மாள் சத்திரம்
12 எத்திராஜுலு நாயுடு ச. நாராயணதாஸ் & புச்சகாயல ரெங்கைய்ய சத்திரம்
13 நாராயணதாஸ் சத்திரம்
14 மருத்துவகுல மரபினர் சத்திரம்
15 மதறாஸ் ஆதிலக்ஷ்மி அம்மாள் சத்திரம்
16 தேவராஜ நாயுடு சத்திரம்
17 ஜெகன்னாத ரெட்டியார் சத்திரம்
18 நெல்லூர் ராமசுப்பம்மாள் சத்திரம்
19 சித்தூர் நரசிம்ம ஆச்சாரி சத்திரம்
20 எல். ஜெகன்னாத ரெட்டியார் சத்திரம்
21 கந்தபுடி குப்பு செட்டி சத்திரங்கள்
22 ஸ்ரீ ஜான்காசா சத்திரம்
23 ரேவூர் நம்பெருமாள் சத்திரங்கள்
24 காமாட்சி அம்மாள் சத்திரம்
25 கோபால் ரெட்டி சத்திரம்
26 வசந்த மண்டபம்
27 புஜங்கராவ் சத்திரம்
28 கும்பினிபேட்டை பார்வதி அம்மாள் சத்திரம்
29 மதறாஸ் பைடிதல்லியம்மாள் சத்திரம்
30 நெடுஞ்சாலை பயணிகள் மாளிகை இரண்டு அறைகள்
31 சோழலிங்கபுரம் பஞ்சாயத்து தங்கும் விடுதி அறைகள்

இரா. குப்புசாமி, B.A., M.Com., நிர்வாக அதிகாரி.

பொன். செல்வராஜ், B.A.B.L., தக்கார்/உதவி ஆணையர்.



